ஓம்

திருச்சிற்றம்பலம்

# காழி வேந்தன் கருணை

வழங்கியவர்:

தவத்திரு தேமொழியார் சுவாமிகள்



"அருட்பண்ணை"

"எழும்பூர் இல்லம்"

91, கெங்கு ரெட்டி சாலைச் சந்து,

எழும்பூர், சென்னை - 600 008.

☎ 8265687

# நூல் விபரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | காழிவேந்தன் கருணை |
| பதிப்பு உரிமை | : | அருட்பண்ணை |
| ஆசிரியர் | : | தவத்திரு தேமொழியார் சுவாமிகள் |
| மொழி | : | தமிழ் |
| முதற்பதிப்பு | : | செப்டம்பர், 1994 |
| வெளியீடு | : | அருட்பண்ணை அறக்கட்டளை<br>"எழும்பூர் இல்லம்"<br>91, கெங்குரெட்டி சாலைச் சந்து,<br>எழும்பூர், சென்னை - 600 008. |
| எழுத்து | : | 12 புள்ளி |
| பக்கங்கள் | : | 168 |
| மேலட்டை | : | ஓவியர் மணியம் செல்வன் |
| தாள் | : | 10.7 |
| நூல்கட்டு | : | 1,500 |
| அளவு | : | கிரவுன் சைஸ் |
| **நூல் விலை** | : | **ரூ.32.00** |
| லேசர் அச்சு | : | சுமதி லேசர்ஸ்,<br>727, அண்ணாசாலை,<br>சென்னை - 6. ☎ 852 34 24 |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ எஸ்.எஸ். பிரிண்ட் ஹவுஸ்,<br>சென்னை - 600 005.<br>☎ 83 32 31 |

ஓம்
திருச்சிற்றம்பலம்

# தவத்திரு தேமொழியார் சுவாமிகளைப் பற்றிய சில வரலாற்றுக் குறிப்புகள்

வைணவ மரபில் தோன்றிய தவத்திரு சுவாமிகள் பிறந்த ஊர் வரலாற்றுச் சிறப்புமிக்க செஞ்சி வட்டத்தில் உள்ள சொக்கப் பெருவளூர்.

ஈன்ற தாய் நல்லம்மாள்; இனிய தந்தை அரங்கசாமி; உடன் பிறந்தோர் இருவர் — அன்பு அண்ணன் கோபால்; அருமைத் தங்கை பொருட்செல்வி

சுவாமிகளின் தொட்டில் பெயர் செயராமன்; பேராசிரியர் திரு. வையாபுரிப்பிள்ளை அவர்கள் இட்ட திருப்பெயர் தேமொழி. இவர் தம் நற்பண்புகளால் தவத்திரு தேமொழியார் சுவாமிகள் என அன்புடன் அழைக்கப்படுகிறார்.

தமிழ் இலக்கிய, இலக்கண சாத்திரங்களை முறையாகப் பயில புலவரேறு திரு.ந.ரா. முருகவேள் அவர்கள் ஆசிரியராக அமைய இறையருள் கூட்டுவித்தது. நெறியாள வாழ்வில் சிறக்க திருவள்ளுவரகம் குலசை திரு. ப.இராமநாத அடிகள் அடித்தளம் அமைத்தார். சீரிய சிந்தனைகளுக்கு அழகரடிகள் வித்திட்டார். சுவாமிகளை அறிந்த சான்றோர் பலர். அவர்களுள் இலக்கணத் தாத்தா, திரு.மே.வி.வே., மயிலை திரு. சிவமுத்து, டாக்டர் சுப. அண்ணாமலை, டாக்டர் சிதம்பரநாதன், டாக்டர் சுப.மாணிக்கம், திருக்குறள் முனுசாமி எனப்பட்டியல் நீளும்.

சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் இளம் 'வைசப் புலவர்'; 'சைவப் புலவர்' முதலான பட்டங்களைப் பெற்றதோடு அன்றி, சென்னைப் பல்கலைக் கழகத்தின் 'வித்வான்' பட்டமும் பெற்றவர். இவர் தம் பரந்த அறிவையும், நுண்மாண் நுழைபுலத்தையும், ஆழ்ந்த புலமையையும் உணர்ந்த மாம்பாக்கம் குருகுலம் அழகரடிகள் அவர்தம் தமிழ்க் கல்லூரியில் பணியாற்றிட அழைக்கவும், அவ்வழைப்பிற்கிணங்கி, கல்லூரி முதல்வராக நான்கு ஆண்டு காலம் பணியாற்றியிருக்கின்றார். அன்றைய கல்லூரி மாணவர்கள் சுவாமிகளிடம் பேருவகையுடன் பாடம் கேட்ட விந்தையை இன்றும் பசுமையாக நினைவு கூறுகின்றனர்.

சுவாமிகள் உருவம் — கருமை நிறம். ஒளிசிறந்த முகம்; உள்ளம் அன்பில் தோய்ந்து விளங்கும்; மொழி — தூய்மையும், எளிமையும் நிறைந்த தெளிவான மொழி; சிந்தனை — அற்புதச் சிந்தனைகளை அள்ளி அள்ளி வழங்கும் ஞான நிலையம். மாற்றாரிடம் உள்ள நலத்தையும் பாராட்டும் பண்பாளர். நெறியுடன் வாழும் சிறந்த நெறியாளர்; கோட்பாடு - நாடு, இன, மத, மொழிக் காழ்ப்பில்லாமல் எதையும் நடுநிலைமையாகவும், அதே சமயம் இதமாகவும், பதமாகவும், தெளிவாகவும், நுட்பமாகவும், எளிமையாகவும் எடுத்துச் சொல்லும் இதயப்பாங்குடையவர்.

என்றும் வெள்ளை உடையையே உடுப்பார்; அஃதும் கீழ் ஒரு வேட்டி, மேல் ஒரு துண்டு எனக் காட்சிக்கு எளியர்; கடுஞ்சொல் நீங்கியவர். பல்வேறு துறைகளில் திறமும், பாண்டித்தியமும் உடையவர். ஆனால் அடக்கமானவர். இகழ்ந்தாரையும் ஏற்றிப்போற்றும் மாண்புடையவர்; கற்றறிந்தோர் கருதாச் சிந்தனையாளர். கற்றவர்க்குத் தாம் வரம்பாகிய தலைமையர். எங்கும் எதிலும் இறைவன் அருள் இயக்கத்தைக் காணும் இயல்புடையார். தீட்சை அளிக்கும் தெளிவுடையவர். இவர்தம் அருட் பார்வையால் நலமுற்றோர் பலர். இவரை அருட்குருவாக ஏற்றோர் எண்ணில் அடங்கார். சுவாமிகளின் அருமை பெருமைகளை விரிப்பின் பெருகும் என அஞ்சி இத்துடன் நிறுத்திக் கொள்கி றோம்.

சுவாமிகளின் வாழ்க்கைத் துணையாக அமைந்த திருமதி. பத்மினி அம்மையார் வெள்ளை உள்ளம் படைத்தவர்; கள்ளமற்ற சிந்தையர்; கரவற்ற நெஞ்சினர். இல்லறம் சிறக்க மூன்று நன்மக்களை ஈன்றெடுத்து சுவாமிகளின் அருள் தொண்டிற்குப் பேருதவி புரிந்து வருகின்றார். "பெய்யெனப் பெய்யும் மழை" போன்ற தொண்டு உள்ளம் படைத்தவர்.

கடந்த 35 ஆண்டு காலமாக சமய, இலக்கியப் பணிக்குத் தம்மை முழுவதுமாக அர்ப்பணித்துக் கொண்ட சுவாமிகள், மக்கள் மனம் செம்மைப்பட வும், அவர்தம் வாழ்வு வளம் பெறவும், நாடு நலமெய்தவும், உலகம் அமைதியில் சிறக்கவும் நாளும் சென்னையின் பல்வேறு இடங்களில் சொற்பொ ழிவு ஆற்றி வருகின்றார்.

1976-ஆம் ஆண்டு "அருள் ஞானப் பெருவெளி" எனும் அருள் நலம் அளிக்கவல்ல ஆன்மீக அமைப்பை நிறுவி, அதன் மூலம் மனித இனம் சீரும் சிறப்பும் பொலிந்து விளங்க அருந்தொண்டாற்றி வருகின்றார். அவ்வமைப்பில் மாதந்தோறும் நிறை நிலா வழிபாடும், ஆண்டுதோறும் சித்திரைப் பெருவிழா வும் மிகச் சிறப்பாக நடந்து வருவது நம்முடைய பெரும்பேறு என்றே கூறலாம். மேலும் இவ்வமைப்பு குழந்தைகளுக்கென கோடைக்கால நல்லொழுக்கப் பயிற்சியையும் ஆண்டுதோறும் அளித்து வருகிறது.

இவர்தம் அருமை பெருமைகளையும், அருள்திறத்தையும் உணர்ந்த 'இந்து' நாளிதழ் நிறுவனத்தார், அவர்களின் நாளிதழின் கடைசிப் பக்கத்தில் வரும் ஆன்மீகப் பகுதியில், சுவாமிகளின் சீரிய சிந்தனைகளைப் பல்லாண்டுக ளாக வெளியிட்டு மக்கள் உய்யப் பேருதவி புரிந்து வருகின்றனர். சென்னை அகில இந்திய வானொலி நிலையமும் "சான்றோர் வாக்கு" நிகழ்ச்சிக்குப் பன்முறை அழைத்துப் பெருமை பெற்றது. திருஞானசம்பந்தப் பெருமானைப் பற்றி இலக்கியச் சொற்பொழிவு ஆற்ற சிறந்ததொரு வாய்ப்பை நல்கி பெருமை தேடிக் கொண்டது.

நம் நாட்டுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் அமெரிக்காவில் உள்ள "சிராகஸ் பல்கலைக் கழகம்" சுவாமிகளை அழைத்து, மூன்று மாத காலத்திற்கு அமெரிக்காவிலேயே தங்க வைத்து, திருக்கோவையார் சிந்தனைகளைச் செவிம டுத்து, அதை Love in South India என்ற நூலாக வெளியிட்டுப் பெருமிதம் உற்றது.

திருமூல நாயனாரின் திருமந்திரத்தைச் சுவாமிகள் சுமார் 13 ஆண்டுகளாக நடத்தியதும், தெய்வச் சேக்கிழாரின் பெரிய புராணத்தைச் சுமார் 7 ஆண்டு காலம் நடத்தியதும், கந்த கோட்டத்தில் மூன்று ஆண்டு காலம் திருக்குறளைச் சிந்தித்ததும் சென்னை மாநகர் பெற்ற பெரும் பேறு என்றே கூறலாம். தற்சமயம் திருக்கோவையாரின் அருட் சிந்தனைகளை வெளியிட்டு வருகின்றார்.

இவருடைய தொண்டினைப் பாராட்டி சைதைத் தமிழ்ச் சங்கம், ''செந்தமிழ் வித்தகர்'' என்றும், 'வள்ளுவர் வழி' ''திருக்குறள் சீர் பரவுவார்'' என்றும், செங்கை இறையருள் மன்றம் ''சித்தாந்தப் பேரொளி'' என்றும், இவர்தம் ஆசிரியர் ''சிவஞானச் செல்வர்'' என்றும், தமிழக அரசோ, ''திருக்குறள் நெறித் தோன்றல்'' என்று பாராட்டியும், பதக்கம் அளித்தும் மகிழ்ந்தது. பெரியோர் பலர் சுவாமிகளை 'அருட்சித்தர்' என்றும், 'இற்றை வள்ளலார்' என்றும் கூறுவது மிகவும் பொருத்தமே.

சுவாமிகளின் சிந்தனைகளை செவிமடுப்போர் தெளிவு பெறுவர் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. துன்பத்திலிருந்து நிரந்தர விடுதலை பெறவும், என்றும் இன்பம் நம்மைவிட்டு நீங்காமலிருக்கவும், இவர்தம் அறிவார்ந்த சிந்தனைகளை வாய்ப்புள்ளபோதே கேட்டுப் பயன்பெறுவோம். நிம்மதியைத் தேடி எங் கெங்கோ சென்று அலைய வேண்டாம். நம்மிடம் உள்ள நிம்மதியை நாம் உணர சுவாமிகளின் அருளாசியைப் பெறுவோம்; சீரும் சிறப்பும் பொலிய வையத்தில் வாழ்வாங்கு வாழ்வோம்.

நாளும் மாணவர்களைத் தாமே தேடிச் சென்று (கன்றைத் தேடி ஓடும் பசுவைப் போல) அவர்களது அறிவுப் பசியையும், சமய, சித்தாந்தங்களின் நுட்பங்களை எளிமையாக விளக்கி உள்ளத் தெளிவை ஏற்படுத்துவதிலும், கைம்மாறு கருதாத் தொண்டாக இதனைப் பல்லாண்டு காலமாக இடையீடின்றித் தொடர்ந்து செய்து வருவதிலும், அருள் ஞானப் பெருவெளியெனும் அருள கத்தை நிறுவி அதன் பால் அனைவரையும் ஈர்த்து தாயுள்ளத்தோடு அருளாரமு தத்தை வாரி வாரி வழங்கியும், இறையருளைப் பெற்றிருந்தும் ஏதும் பெறாதார் போல எளிமையாக வாழ்ந்தும் வருவது நமக்கு நால்வர் பெருமக்களை நினைவூட்டுவதாக இருக்கிறது.

டாக்டர் மா.பழனிவேலு
சென்னை - 2.

# பதிப்புரை

அருள்நலம் சான்றோரே!

வணங்கி மகிழ்கின்றோம்.

இன்றைய மக்களின் தேவைகள் எண்ணிலடங்கா. ஆனால் அவர்களின் இன்றியமையாத் தேவையை யாரும் சிந்தித்தார்களில்லை; மேலும் தேவைகளின் பயன் என்ன என்பதையும் உணர்ந்து கொண்டாரில்லை. சற்றே இறையருளை நினைந்து ஆய்வோமேயானால், அனைத்துத் தேவைகளும் எழுவது மகிழ்ச்சியை அடையும் பொருட்டே; மனநிறைவைப் பெறும் பொருட்டே; நிம்மதியில் இருத்தல் பொருட்டே. ஆயின் இவை எவற்றால் கிட்டும் என்பதைச் சிந்திக்க மறந்தே விட்டோம்.

நம் சிந்தனையைத் தூண்டி நம்மை நன்னெறிப் படுத்தவே, பெரியோர்கள் அனுப்பி வைக்கப்படுகின்றனர். அப்பெரியோர்களைச் சார்ந்து ஒழுகுதலே நம் தலையாய கடன் என்பதை நாம் உணர்தல் வேண்டும். ''சான்றோர் இனத்து இரு'' என்பது ஒளவை வாக்கு. ''பெரியாரைத் துணைக் கோடல்'' என்றது தமிழ் மறை. ''தெய்வம் தெளிமின்; தெளிந்தார்ப் பேணுமின்'' என்பார் இளங்கோவடிகள். ''அடியார்களுடன் கூடுவதே அதிசயம்'' என்பது மணிவாசகம். ''ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற உத்தமர்தம் உறவை'' வேண்டுவது வள்ளலின் உள்ளம். அதுவே சங்கநிதி. ஆக, பெரியோர்களது தொடர்பே நம் அல்லலை அறுந்து ஆனந்தத்தை வழங்கும் என்பதை அனுபவத்தாலும் உணரலாம். சிந்தித்தும் தெளியலாம்.

அத்தகு பெரியோர்களுள் ஒருவரெனத் திகழ்கிறார் போற்றுதலுக்குரிய நமது தேமொழியார் சுவாமிகள்.

இந்நூல் வெளிவர வேண்டும்; அதனால் மனித சமுதாயம் மேன்மையுற வேண்டும் என்று வானைப் போன்ற பரந்த நோக்கத்துடன் பேருதவி புரிந்தார் இருவேல்பட்டு பெருநிலக்கிழார் E.M.சுப்ரமணிய ரெட்டியாரும் அவர்தம் அருந்துணைவியார் திருமதி சாந்தா சுப்ரமணியம் அவர்களுக்கும், இடையறாத் தொண்டு ஆற்றி, நூலைச் சீரிய முறையில் செப்பனிட்ட பெருந்தகை புலவர் சி.வெ.சுந்தரம் அவர்களுக்கும், பிழை திருத்தம் பார்த்த திருக்குறள் நெறித் தோன்றில் அருள்விளக்கம் அண்ணாமலை அடிகளுக்கும், ஒலிப்பதிவு செய்வதையே தம் தவமாகக் கொண்ட பண்பாளர் ஏ.பாலசுந்தரம் அவர்களுக்கும், காலத்தின் அருமை கருதி ஒல்லும் வகையில் ஒத்துழைப்பை நல்கிய அன்பர்கள் கோவிந்தராசன், சாந்தகுமார் ஆகியோர்க்கும் அருட் பண்ணை தன் நெஞ்சார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறது.

பு.மு.கிருஷ்ணமூர்த்தி
நிறுவனர்

# சிந்தனைத் துளிகள்

★ குறைகளையே பார்ப்பது அஞ்ஞானம்;
நிறைகளைப் பார்ப்பது ஞானம்.

★ பிறர் நலம் கண்டு மகிழும் உணர்ச்சிக்கு
நாகரீகம் என்று பெயர்.

★ உலகப் பண்டங்களைத் துய்த்தால் துயரம் வரும்;
சிந்தித்தால் தெளிவு பிறக்கும்.

★ அன்பு பொதுமையில் தவழும்; பெரும் நலங்களை உண்டாக்கும்.
பாசம் தனிமையில் தவழும்; சிறு நலங்களிலேயே நின்று விடும்.

★ நற் செய்கைகளைச் செய்தும் பெருமிதம் அற்று இருத்தலே
நட்பின் இலக்கணம்.

★ தன்னிறைவு பெருகப் பெருக குறைகள் குறையும்;
அமைதி பெருகும்.
தன்னிறைவு குறையக் குறைய குறைகள் குவியும்;
அல்லல் பெருகும்.

★ மாறுபாடுகளை வைத்து வெறுப்பதைவிட,
உடன்பாடுகளை வைத்து மகிழ வேண்டும்.

★ பிறர் செய்த நன்மையை மறப்போர் அரக்கர்;
நினைப்போர் மனிதர்; என்றும் மறவாது இருப்போர்
உயர்ந்தோர்.

★ பிறர் குறையைத் தீர்க்க நினைத்தால்,
தன் குறைகள் தானே நீங்கிவிடும்.

★ செருக்கு எவரையும் வீழ்த்திவிடும்;
பணிவோ அனைவரையும் வென்றுவிடும்.
பணிவோம்; பன்னலம் பெறுவோம்.

★ தன்னலம் இழுத்தலே இல்வாழ்க்கை; தன்னலம்
தேயத் தேய அல்லல் அறும்; ஆனந்தம் மிகும்.
தன்னலம் இழப்போம்; தன்னிகரற்று விளங்குவோம்.

★ அறிவும் தெளிவும் உள்ளவர்களே செல்வந்தர்கள்;
ஏனையோர் அனைவரும் ஏழைகளே.

★ ஓதுதல் சரியை; ஒழுகுதல் கிரியை;
உணர்தல் யோகம்; தெளிதல் ஞானம்.

★ நாளும் பெருக்குவதல் இல்லத் தூய்மை;
நாளும் தொண்டு செய்வதால் உள்ளத் தூய்மை.

# அருட்பண்ணை நூல்கள்
# விற்பனைக்குக் கிடைக்குமிடங்கள்

R. சீனிவாசன்,
15, 2வது குறுக்குத் தெரு,
பாரதிதாசன் நகர், பாண்டி - 605 001.

M. இரவிச்சந்திரன், பி.ஏ.,பி.எல்.,
9, A.L.C. காம்பஸ்,
கடலூர் - 607 001.
(போன்: 21010)

டாக்டர் P.M. பாஸ்கரன், எம்.எஸ்.,
ஜே.எம். மருத்துவமனை,
5, அல்லித்துறை சாலை,
திருச்சி - 620 017.
(போன்: 25369)

T.B.N. ரோட்வேஸ்,
54, அண்ணாசாலை,
திருவண்ணாமலை - 606 602.
(போன்: 2911)

T.A. சண்முகம், செயலாளர்,
அருள்ஞானப் பெருவெளிமன்றம்,
20, ஒற்றைவாடை பிராமணர் தெரு,
திருவத்திபுரம் - 604 407.

த.புண்ணியகோட்டி,
4/43, அறிஞர் அண்ணா நகர்,
திருவத்திபுரம் - 604 407.

அருள்ஞானப் பெருவெளி
அறக்கட்டளை,
28, தேவதாஸ் தெரு,
வேதாசலம் நகர்,
செங்கற்பட்டு - 603 301.

ந.கணேசன்,
செயலாளர், சைதைத் தமிழ்ச் சங்கம்,
77, சுப்பிரமணிய முதலி தெரு,
சைதாப்பேட்டை,
சென்னை - 600 015.

டாக்டர் மா.பழனிவேலு,
செயலாளர், ஸ்ரீபால சைவ
சுத்த சன்மார்க்க சங்கம்,
19, கலவை தெரு, சிந்தாதிரிப்
பேட்டை, சென்னை - 600 002.

---

# அருட்பண்ணையின் வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. மாமறை பேசுகிறது - தொகுதி-I அச்சில் | | 22.00 |
| 2. மாமறை பேசுகிறது - தொகுதி-II அச்சில் | | 20.00 |
| 3. தேனருவி | — | 60.00 |
| 4. மாமறை பேசுகிறது - தொகுதி-III | — | 23.00 |
| 5. திருமந்திரம் - தொகுதி-I | — | 52.00 |
| 6. தமிழ் நெறி | — | 6.00 |

சிறந்த நூல்களை நீங்கள் வாங்கிப் பயனடைவதோடு நில்லாமல் உற்றார், உறவினர், நண்பர்கள் என எவர்க்கும் அன்பளிப்பாக வழங்குங்கள். திருமண விழா, பிறந்த நாள் விழா போன்ற எவ்விழாக்களிலும் பரிசுப் பொருளென அளித்துப் பயனுறச் செய்யுங்கள். ஆசிரியர், மாணவர்கள், நூலகங்களுக்கு பரிந்துரை செய்து அருட் பண்ணைக்கு ஆக்கமும் ஊக்கமும் நல்கிடுவீர்.

இவ்வறக்கட்டளை மேலும் பல நூல்களை வெளியிட நல்லுள்ளங்களின் நன்கொடையையும், உங்களின் பேராதரவையுமே முழுமையாக நம்பியுள்ளது.

ஓம்
திருச்சிற்றம்பலம்

# பொருளடக்கம்

# படையல்

கருணை நிறைந்த கண்ஒளியும்
கனிவு நிறைந்த நன்மனமும்
உருகும் உணர்வின் முத்துலிங்கர்
உளத்தால் மதித்த செயலெல்லாம்
இருந்தே இயற்றும் பெருந்தகையார்
இன்றும் என்றும் எம்மனத்தே
இருப்பார் தமக்கே எம்படையல்
இனிதே படைத்தோம் இருநிலத்தே



ஓம்
திருச்சிற்றம்பலம்

தென்னாடுடைய சிவனே போற்றி!
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!!

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி!
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி!!

# காழி வேந்தன் கருணை

**மெய்யன்பர்களே!**

**முன்னுரை:-**

நம்முடைய சைவ சமயக் குரவர்கள் என்ற ஞானியர் நால்வர். அவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசகப் பெருமான் ஆவர். இந்நால்வரும் தமிழ் மண்ணிலே தோன்றி, தமிழ் மக்களுக்கு இயற்கையான வாழ்வியல் நெறியை இனிமையாக எடுத்துரைத்தனர். மாறுபடாத வகையில் எடுத்துரைத்தனர். இப்படி எடுத்துரைத்தமைக்கு என்ன காரணம்? காலங்கள் மாறுகின்ற போது அறம், நெறி, ஒழுக்கம் குன்றுகின்ற போது பெரியவர்கள் சிலரை இறைவன் இந்நிலவுலகத்திற்கு அனுப்பி வைத்து, அவர்கள் வாயிலாக நல்ல அறநெறிகளையும், ஆன்ற ஒழுக்க நெறிகளையும் மக்களிடையே பரப்பி, அவர்களை இருளிலிருந்து ஒளிக்கு வரச்செய்து தன் திருவடியில் சேர்த்துப் பேரின்பம் வழங்க வேண்டும் என்று கருணை கூர்வான்.

அப்படிப்பட்ட சான்றோர்களில் தலையாய குரவராக வந்து விளங்கியவர் நம்முடைய திருஞானசம்பந்தப் பெருமான். அவர் வந்த நூற்றாண்டு மிக நெருக்கடியான நூற்றாண்டு. நம்முடைய சூழல்கள் எல்லாம்

மாறி, வேற்றுச் சூழல் தமிழகத்தைத் தழுவிக் கொண்டிருந்த நேரம். மக்கள் இயற்கைக்குப் புறம்பான நெறிகளை உண்மையென்று நம்பி மருண்டு, மயங்கிப் பின்பற்றிய காலம். அந்தக் காலத்தில் யாரேனும் நாட்டில் நன்னெறி பரவ வேண்டும் என்று விரும்புகின்றார்களா? அதற்காகத் தன்னை யாரேனும் வேண்டிக் கொள்கின்றார்களா? என இறைவன் எதிர்பார்க்கின்றான்.

தனி மனித வாழ்வாயினும் சரி, அல்லது ஒரு நாடாயினும் சரி, - ஏற்படுகின்ற இடர்கள் ஏராளம். அதிலிருந்து விடுபடுவதற்கு மனிதன் முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும். நம்முடைய முயற்சிகளை விட்டுவிட்டு ஆண்டவனை வேண்டுதல் கூடாது. நம்முடைய முயற்சிகள் யாவும் முடிந்த பின் ஆண்டவனை வேண்டுதல் வேண்டும். முயற்சிகள் சிறிதும் செய்யாமல் எல்லாவற்றையும் ஆண்டவனே பார்த்துக் கொள்வான் என்றிருப்பது மனித அறிவுக்குப் பொருந்தாது. இறைவனும் அதற்குச் சம்மதிக்க மாட்டான். ஆனால் எப்போதும் நம் முயற்சியிலேயே இருந்துவிடவும் கூடாது. இறைவனை எண்ணித்தான் முயற்சியும் செய்ய வேண்டும். முயற்சி முடியாத போது முழுமையாக இறைவனிடத்தில் சரணாகதி அடைந்துவிட வேண்டும். இக்கருத்தைப் பல வரலாறுகள் மூலம் அறியலாம்.

பாரதத்தில் ஏதோ ஒரு தவறு நடந்துவிட்டது. அந்தத் தவற்றுக்காகத் துரியோதனனும், அவனது சகாக்களும் சேர்ந்து துணை செய்ய, துச்சாதனன் திரௌபதியின் துணியைப் பலபேர் இருக்கின்ற சபையில் உருவுகின்றான். அந்த அம்மையார் அவையோரைப் பார்த்தும், குருவாக அமர்ந்திருக்கின்றவர்களைப் பார்த்தும், தன் கணவன்மார்களைப் பார்த்தும், 'நீங்கள் எல்லாம் ஆண்கள்தானே! நீங்கள் எல்லாம் மனிதர்கள்தானே! நீங்கள் எல்லாம் நீதி நெறி அறிந்தவர் தானே! இந்த

அநியாயம் நடக்கின்றதே, யாராவது இதைத் தடுக்கக் கூடாதா, இந்த அநீதியைத் தடுக்கக் கூடாதா' என்று கேட்கின்றார்கள். நியாயம் சொல்ல வேண்டியவர்களும், அநீதியைத் தடுக்க வேண்டியவர்களும் வாயடைத்து நிற்கின்றார்கள். இந்த அநீதியான செயலைத் தடுக்க யாரும் முன்வராத போது தன் முயற்சியைச் செய்கின்றார்கள். அந்த முயற்சியில் தோல்வியுறுகின்றார்கள். தன் முயற்சி தோற்ற பின்னர் 'கோவிந்தா' என்று இரு கை தூக்கிக் கதறுகின்றார்கள். நல்வினைப் பயனாக மாளாத் துகில் கிடைக்கின்றது.

அவர்கள் செய்த நல்வினை என்ன? ஒரு நாள் கண்ணன் யமுனையில் குளித்துக் கொண்டிருந்த போது, கட்டியிருந்த ஆடை நீரோடு போய்விட, ஆடையில்லாக் காரணத்தால் கரையேறக் கூச்சப்பட்டுக் கொண்டு நீண்ட நேரம் ஆற்றிலேயே அமிழ்ந்து இருக்க, திரௌபதி கண்ணனுடைய நிலையைக் குறிப்பால் உணர்ந்து, தன் சேலையில் இருந்து ஒரு பகுதியைக் கிழித்து நீரில் போட, கண்ணனும் அதனைக் கட்டிக் கொண்டு கரை யேறி வந்தான். அந்த நன்றிக்குப் பதில் செய்ய அவன் காத்துக் கொண்டிருந்தான். இப்போது சந்தர்ப்பம் வாய்த்தது. அவனும் மாளாத் துகில் கொடுத்து அவர்களது மானத்தைக் காத்தான். கொடுத்ததோ ஒரு சாண் அளவுள்ள துணி, கிடைத்ததோ அளவிடமுடியாத அளவு துணி. அப்படி நல்வினைப் பயன் இருந்தால், நாம் வேண்டும் போது தேவையானதைத் தருவான் இறைவன் என்பது இதன் கருத்து.

நம்முடைய வாழ்க்கையில்கூட, கலக்கங்கள், குழப்பங்கள் ஏற்படுகின்ற போதும் நம் முயற்சிகள் தோற்கின்ற போதும், 'இறைவா! என்னுடைய குழப்பம், கலக்கம் தீர, நல்லதொரு வழியைக் காட்ட, ஒரு நல்ல பெரியவரை எனக்கு அறிமுகப்படுத்தக் கூடாதா!'

என்று வேண்டிக் கொண்டால் இறைவன் அவ்வாறே அனுப்பி, நல்ல பாதையை நமக்கு வகுத்துக் காட்டு வான். அப்படியே நாட்டில் நன்னெறி தவறி, ஒழுக்கங் கள் தவறி, கலக்கங்களும், குழப்பங்களும் நிலவுகின்ற காலத்தில் யாரேனும் ஒருவர் இறைவனை வேண்டி, இந்த இடர்ப்பாடுகள் யாவும் நீங்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டால் நல்லதொரு பெரியவரை அனுப்பி வைப்பான் இறைவன். இறைவன் தானே அப்படிச் செய்யக் கூடாதா என்றால் நம்முடைய முயற் சியில்லாமல், வேண்டுதல் இல்லாமல் அவனே செய்ய மாட்டான்.

அந்த வகையில்தான், 1300 ஆண்டுகளுக்கு முன்னே, உலகியலுக்குப் புறம்பான நெறிகள் நாடெங் கும் பரவி, மக்களெல்லாம் தேவையில்லாத நெறியில் மயங்கிச் சென்று இடர்ப்பட்டுக் கொண்டிருப்பதைக் காண்கின்றார் சிவபாத இருதயர். அதுகண்டு மனம் பொறாதவர், நாடு நலம் பெறவும், மக்கள் நன்னெறி யில் உய்யவும், ஒரு நல்ல குழந்தையை இந்த உலகுக் குத் தரவேண்டுமென்று, சீர்காழிப்பதியில் கோயில் கொண்டிருக்கின்ற தோணியப்பரைத் தானும், தன் மனைவியுமாகச் சென்று வணங்கி வேண்டிக் கொண் டார்கள்.

இறைவன், வேண்டுவார் வேண்டுவதே ஈவான். எனவே பெருமான் அவர்களது வேண்டுகோளுக்கி ணங்க, அவர்கள் கேட்டபடியே ஒரு சிறந்த உயிரை இந்த உலகிற்கு அனுப்ப நினைக்கின்றான்.

சிவபாத இருதயரும், அவர் மனைவி பகவதி அம்மையாரும் சிறந்த தவசிகள். தாய் தந்தையரில் ஒருவர் தவசியாக இருந்து, மற்றவர் தவசியாக இல்லா விட்டால் ஏதேனும் ஓர் உயிரை அவர்கள்பால் அனுப்பி

வைக்கலாம். ஆனால் இந்த இரண்டு பேருமே சிறந்த தவசிகளாய் இருப்பதனாலும், தன்னலமின்றி அவர்கள் உலகம் உய்ய வேண்டி மகப்பேற்றை நாடியதனாலும் ஒரு சிறந்த உயிரைத் தேர்ந்தெடுத்து இந்த உலகத்திற்கு அனுப்பி வைக்க வேண்டுமென்று கருதி, பகவதி அம்மையாரின் கருவின்கண் அந்த உயிரைச் சேர்ப்பிக்கின்றான் இறைவன். அதுவே காழி வேந்தனுடைய கருணை. அவன் கருணையினாலே திருஞானசம்பந்தர் என்ற ஓர் இளஞாயிறு இவ்வுலகில் உதயமாகிறது.

அப்படி என்ன அக்குழந்தைக்குச் சிறப்பு? அது சாதாரண உயிரன்று. 'பண்டு திருவடி மறவாத பான்மை' உடையது அந்த உயிர். அது மாசு மருவற்ற திருவடியில் பேரின்பத்தை மாந்தி மகிழ்ந்திருந்த மாட்சிமையுடைய உயிர். இந்த உண்மையை அகச்சான்றாகத் திருஞானசம்பந்தரே ''துறக்குமா....'' என்ற பாடலில் தெளிவுபடுத்துகின்றார்.

மாட்சிமையுடைய உயிர்கள் இவ்வுலகத்தில் வந்து பிறப்பதற்கு விரும்புவதில்லை. இருந்தும் அந்தச் சிறந்த உயிர் இவ்வுலகத்தில் ஏன் தோன்றியது எனில், உலகம் உய்யவும், சிவபாத இருதயரும் அவரது மனைவியாரும் செய்த தவத்தின் காரணமாகவும், இறைவன் கருணை கொண்டு அவரை உலகத்திற்கு அனுப்பி வைத்ததால் வந்தது. தன்னை மறவாது இருந்த தகுதியான உயிரை ஒரு மயக்கத்துக்கு ஆட்படுத்திப் பிறக்கச் செய்தான்.

சில நேரங்களில் பெரியவர்கள் குழந்தைகளை என்ன காரணமென்றே புரியாத நிலையில் திடீரென்று திட்டுவார்கள். 'ஏன் அப்படித் திட்டினீர்கள்' என்று கேட்டால், அந்தக் குழந்தை இங்கேயே இருந்து கொண்டிருக்கின்றது; இப்படித் திட்டினால்தான் அது இந்த இடத்தை விட்டுப் போகும்' என்பார்கள். வெறுப்புத்

தோன்றுமாறு திட்டிவிடுவார்கள். அப்படியே, வெறுக் கத்தக்க செயல்கள் ஏதும் திருஞானசம்பந்தர் செய்யவில் லையென்றாலும், இறைவனின் விருப்பப்படியே அவர் அனுப்பி வைக்கப்படுகிறார். அவரும் அந்தப் பேரானந் தப் பெரும்பொருளின் விருப்பத்தின்படி, இந்த உலகத் தில் வந்து அவதாரம் செய்கின்றார். இந்த அவதாரத்தின் பெருமையைச் சேக்கிழார் பெருமான் மிக அழகாக எடுத்துச் சொல்கின்றார். அவருக்குப் பின்னர் வந்த சாத்திரம் பாடிய பெரியவர் ஒருவரும் 'பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல் போற்றி' என்று அவர்தம் கருணையை வியந்து போற்றுகின்றார். பின் னர் அந்தக் கருணை படிப்படியாக மலர்ந்து, உயர்ந்து எல்லா உயிர்களையும் எப்படித் தழுவியது என உணர்ந்து 'காழிவேந்தன்' என்று அவரை அழைக்கின் றார்.

அது மட்டுமன்று. பாண்டிய நாட்டு மன்னனுக்கு மன்னனாகத் திகழ்ந்தார். அவன் வேதனைப்பட்ட போது அந்த வேதனையைத் தீர்த்தார். மற்றும் அவனால் மக்களைப் புன்னெறியின்றும் காப்பாற்ற முடியாத போது, அனைத்து உயிர்களையும் நன்னெறியில் செலுத் தினார். அதனால் 'பூழியர்கோன் வெப்பொழித்த புகலி யர்கோன்' எனப் புகழப் பெற்றார்.

'வேந்தன்' என்ற சொல்லை இவர் கையாளுகின்ற போது, திருவள்ளுவ நாயனாரின் சிந்தனைச் செல்வமா கிய ஒரு திருக்குறள் நினைவுக்கு வருகின்றது.

" செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு" (389)

வேந்தனுக்குரிய பண்புகளைச் சொல்ல வருகின்ற போது, தாங்கிக் கொள்ள முடியாத சொற்களை யார் சொன்னாலும் அதனைப் பொருட்படுத்தாமல் பொறுத்

துக் கொள்வதைத் தலையாய பண்பாகச் சொல்வதைக் காணலாம்.

பண்பு என்றால் அன்பு. அதில் பொறுத்துக் கொள் வது என்பது ஒரு கூறு. அப்படிப் பொறுத்துக் கொள்ள முடியாத சொற்களைச் சொன்னவனைப் பொறுத்துக் கொண்டதோடு, அவனுக்கு நன்மையும் செய்வது மற் றொரு கூறு. இந்த இரண்டு குணங்களும் இருந்தால் அவனை மன்னன் என்று சொல்லலாம்.

பொதுவாக நமக்கெல்லாம் யாராவது ஒருவர் நன்மை செய்தால் அவர்களைப் பாராட்டுகின்ற குண மும், தீமை செய்தால் அவர்களைப் பழி வாங்கும் குணமும் மேலோங்கும். திருஞானசம்பந்தர் அப்படி யில்லை. பகைவனையும் பண்போடு ஆதரித்து நன்மை செய்தவர். அதனால்தான் அவரைப் 'பூழியர்கோன்' என்று பாராட்டினார். மற்ற ஆன்மாக்களின் மலங்க ளைப் போக்கியதால் அவருடைய கழல்களைப் பாராட் டினார்.

ஞானசம்பந்தப் பெருமான் அளப்பரும் பெருமைக ளுக்கு உரியவர். அவர் அவதாரம் செய்ததன் நோக்கத் தைப் பற்றிக் குறிப்பிடும் சேக்கிழார் பெருமான்:

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்து அழுத
சீதவள வயல்புகலித் திருஞான சம்பந்தர்..."

என்று படம் பிடித்துச் சொல்லோவியம் தீட்டிவிட்டார். அவரால் மட்டுமே அப்படிப் படம் பிடித்துக் காட்ட முடியும்.

எடுத்த எடுப்பிலேயே என்னென்ன காரணங்களுக் காக ஞானசம்பந்தர் அவதரித்தார் என்று சொல்லுகின் றார். அவற்றுள் முதற் காரணம் 'வேதநெறி தழைத்

தோங்க' என்பதாகும். அடிப்படையானதொரு நெறி தழைத்தோங்க அவர் வந்தார் எனத் தெரிகின்றது.

உலகத்தில் மூவகையான ஆன்மாக்கள் உள்ளன. அவை, முறையே மும்மல ஆன்மா, இருமல ஆன்மா, ஒரு மல ஆன்மா எனப்படும். இம்மூவகை ஆன்மாக்களும் மனித இனத்தில் உண்டு. இவ்வான்மாக்கள் உய்ய அவர்களிடத்தேயுள்ள மும்மலங்களும் அகன்று, ஞான பாதத்தை அடைந்து நன்மையைப் பெற ஞானசம்பந்தப் பெருமான் தோன்றிப் புனிதவாய் மலர்ந்து அழுதார்.

மும்மலங்களும் அகல நான்கு நெறிகள் உண்டு. அவற்றுள் முதல் நெறி சரியை. இரண்டாவது நெறி கிரியை, மூன்றாவது நெறி யோகம், நான்காவது நெறி ஞானம். மூன்று வகையான ஆன்மாக்களுக்கும் இந்த முதல் படிதான் மிகவும் முக்கியம். இந்த முதல் படியி லேயே ஞானத்தைப் பெற்றுவிடலாம். பெரியவர்கள் பல சரியான செய்திகளைச் சொல்லி வைத்திருக்கின்றார் கள். அவற்றைச் சரியென்று நாம் ஏற்றுக் கொண்டு அதன்படி வாழ்ந்தால் எப்படியிருக்கும்! அப்படி ஏற்று நடக்கின்ற போது, அதுவே நமக்கு வேகம் தரும்; அதுவே நமக்கு விவேகம் தரும்; அதுவே நமக்குத் தெளிவைத் தரும். எனவே முதற்படி இல்லாமல் அடுத்த படிகளுக்குப் போக முடியாது.

முத்திறத்து ஆன்மாக்களுக்கும் முதற்படி இன்றிய மையாதது என்று சொன்னேன் அல்லவா? அந்த முதற்ப டியை விளக்க வந்தவர்தான் திருஞானசம்பந்தர். அத னால்தான் 'வேதநெறி தழைத்தோங்க' என்றார்.

வேதங்கள் பற்றி உங்களுக்கெல்லாம் தெரியும். நமக்கு நான்கு வேதங்கள் உண்டு. பிறமொழி வேதங்க ளைப் பற்றி இங்கே பேச வரவில்லை. நமக்கு நால் வேதம் என்பது சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பதாம்.

ஞானசம்பந்தப் பெருமான் சரியை நெறியை விளக்க வந்தவர். அதில் ஒரு படியை விளக்கியபின் அதில் ஏதேனும் சிக்கல் இருந்தால் அடுத்தபடியான கிரியை நெறியை விளக்க வந்தவர் நாவுக்கரசர் பெரு மான். அதில் சிக்கல் இருக்குமானால் அதற்கடுத்த படியான யோக நெறியை விளக்க வந்தவர் சுந்தரமூர்த்தி சுவாமிகள். அதற்கும் அடுத்தபடியான ஞான நெறியை விளக்க வந்தவர் மாணிக்கவாசகப் பெருமான்.

நான்கு நெறியிலும் ஏதேனும் ஒன்றில் சென்றால் கூடப் பரவெளியில் ஆடிக் கொண்டிருக்கின்ற பெருமா னுடைய திருவடியில் சென்று சேர்ந்து பிறவா நிலையை எய்தலாம்.

ஞான நெறி சற்றுக் கடினமானது. யோக நெறி பெரிதும் கடினமானது. கிரியை நெறியும் அப்படியே. எனவே சரியை நெறியைக் கடைப்பிடியுங்களேன்! அதனை எளிமையாகக் கடைப்பிடித்து, எளிமையில் மேலும் ஓர் எளிமையை நாம் எய்தலாம். சரியையில் ஞானத்தைப் பெறலாம். இதனைச் சிறிது விளக்கமாகப் பார்க்கலாம்.

''ஐயா, நீங்கள் எல்லோரும் நன்றாகச் சமைத்துச் சாப்பிடுங்கள்; யாரும் பட்டினி கிடக்க வேண் டாம்'' என்று சொல்லிவிட்டார்கள். எல்லோரும் சமைத் துச் சாப்பிடுங்கள் என்று சொல்வது சரியா? தப்பா? சமைத்து வைத்துவிட்டு அனைவரும் அமர்ந்து சாப்பிட் டுக் கொண்டிருக்கின்றோம். அந்த நேரத்தில் யாரோ ஒரு விருந்தினரோ அன்றி ஒரு பிச்சைக்காரனோ வந்துவிட்ட போது அவருக்கு அன்னம் போட வேண்டுமா? வேண் டாமா? போட வேண்டும். இப்போது முதல் படியான சமைத்தல் (சரியை) முடிந்த போது அடுத்த படி தானாக வந்துவிடும். இப்போது முதல் படியான சமையலே செய்யவில்லையென்றால் அடுத்தபடியான விருந்திடு

தலோ அல்லது பிச்சையிடுதலோ (கிரியை) செய்ய முடியுமா? முடியாது.

இரண்டு நாட்களுக்கு முன்னே வீட்டில் நான் மட்டும் தனியாக இருந்தேன். நமக்கு மட்டும் சமையல் செய்து கொள்ள வேண்டுமா? தேவையில்லை என்று இருந்துவிட்டேன். அந்த நேரத்தில் அன்பர்கள் மூவர் வீட்டிற்கு வந்துவிட்டார்கள். அவர்களோடு நான்கு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தேன். அவர்களுக்கு ஒன்றும் கொடுக்க முடியவில்லை. ஏன்? வீட்டில் யாரும் இல்லை. இருந்திருந்தால் அவர்கள் சமைத்துக் கொடுத்திருப்பார்கள். அவர்களுக்கும் உணவு கொடுத்தி ருக்கலாம். இப்போது அவர்கள் யாரும் இல்லாததால் முதல் படியான சரியை நடைபெறவில்லை; முதல் படி சரிவர நடைபெறாததால் இரண்டாவது படியான கிரியையைச் செய்ய முடியவில்லை.

எனவே நாம் சரியாக இருந்தால்தான் பிறருக்கு உபகாரமாக (கிரியை) இருக்க முடியும். நாமே சரியாக இல்லாதபோது பிறருக்கு எப்படி நியாயம் சொல்ல முடியும்? எனவே நியாயத்தோடு வாழ்வது சரியை. அதை உங்களுக்குச் சொல்ல முடியும். எனவே முதல் படி இருந்தால்தான் அடுத்தபடியில் நம்மால் கால் வைக்க முடியும். ஆகவே முதல் படியை நன்றாக விளக்கிவிட்டால், அதை அவர்கள் புரிந்து கொண்டு விட்டால், அடுத்த படியைப் பற்றி அவர்களுக்குத் தானே விளங்கிவிடும் என்று எண்ணினார் திருஞானசம் பந்தர். அவர் எண்ணினார் என்பதைவிட, சரியை நெறியை விளக்க ஆண்டவனே அவரை அனுப்பினான் என்பது தெளிவு. ஏன்? அந்த நூற்றாண்டில் சரியான நெறியான சரியை நெறி நிலைகுலைந்து இருந்தது. அதனை நிலைபெறச் செய்தாலே போதும் என எண்ணி னார் சம்பந்தர்.

சரியை நெறியைக் காழி வேந்தர் எப்படி விளக்கு கின்றார் என்பதைப் பார்க்கலாம். எறும்பு முதல் யானை ஈறாக உள்ள அனைத்து உயிர்களும் ஆணோடு பெண் இணைந்து வாழ்கின்றனவா? அன்றிக் காவி உடுத்திக் கொண்டு தனித்து வாழ்கின்றனவா? ஆணும் பெண்ணு மாக இணைந்து வாழ்வதுதானே இயற்கை வாழ்வு. அப்படி இணைந்து வாழ்கின்ற வாழ்க்கையில்தான் இறைவனது திருவடி ஞானத்தைக் காண முடியும். அல்லாத நெறியிலே ஞானத்தை அடைவது என்பது அரிது! அரிது!!

ஆதலால், ஆணோடு பெண் இணைந்து வாழ்வதே சரியான நெறி, சரியை நெறி, இயற்கை நெறி என்று சுட்டிக் காட்ட வந்தவரே ஞானசம்பந்தப் பெருமான். இந்தக் கருத்தை முதன்மையாக எடுத்துக் காட்டினார் சேக்கிழார் சுவாமிகள்.

திருஞானசம்பந்தர் கருவுற்ற நாளிலிருந்து, அவர் அவதாரம் செய்கின்ற நாள் வரையில், அதற்குப் பின்னர் என்ன நிகழ்ந்தது என்பது பற்றியும் இயற்கைச் சூழல்க ளையும் மிகவும் நுட்பமாகவும், சுருக்கமாகவும் சேக்கி ழார் சொல்லுகின்றார்.

ஒரு நல்ல குழந்தை பிறப்பதற்கு ஒரு தாய் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அது மட்டுமன்று, ஒரு நல்ல குழந்தை அவள் வயிற்றிலிருந்து பிறந்துவிட் டால், மீண்டும் அவளுக்குப் பிரசவ வேதனையோடு அல்லாட வேண்டியிருக்காது. மகப்பேறு என்பது மரண வேதனை. ஒவ்வொரு முறையும் ஒரு குழந்தையைப் பெற்றெடுப்பது என்பது மரணத்திற்குச் சமானம். ஒரு நல்ல குழந்தையை ஒரு தாய் பெற்றெடுத்து விட்டால் அவளுக்கு மீண்டும் குழந்தை பிறக்க வேண்டிய அவசி யமில்லை. நல்லதொரு குழந்தையைப் பெறுவதனால்

என்னனென்ன பேறுகளைப் பெறவேண்டுமோ அத்தனை பேறுகளையும் அந்தத் தாயும், தந்தையும் பெற்றுவிடுவார்கள். அதனால் மீண்டும் குழந்தையைப் பெறுகின்ற வேதனையை அவர்கள் அனுபவிக்க வேண்டாம்.

குழந்தை எதற்காகப் பிறக்க வேண்டும்?

திருமணமாகிவிட்டால், குழந்தை பிறந்துவிட்டதா? என்று எல்லோரும் கேட்டுக் கொண்டிருக்கின்றார்களே தவிர, குழந்தை ஏன் பிறக்க வேண்டும் என்று யாருக்காகிலும் தெரியுமா?

குழந்தை பிறந்தால் தாய் தந்தையர் பிறந்த துன்பம், பிறக்கும் துன்பம் என அனைத்து உலகியல் துன்பங்களிலிருந்தும் மீள வேண்டும். அருளியலுக்கு அந்தப் பிள்ளை படியாக அமைதல் வேண்டும். வீடு பேறு என்ற ஒன்று கிடைக்க வேண்டும். அனைத்து வகையான நலன்களும் பெறுவதற்குத்தான் பேறு என்று பெயர். அதற்கு மற்றொரு பெயர் என்ன? மகப்பேறு என்று பெயர்.

''எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்'' என்பார் திருவள்ளுவ நாயனார். அது திருவடிப்பேறு பெற்றதுபோல. பேரானந்தம் பெறுவதற்கு உரிய ஒரு குழந்தையைப் பெற்றெடுப்பதற்குத்தான் ''மகப்பேறு'' என்று பெயர். இல்லையென்று சொன்னால் குட்டி போட்டது போல ஆகிவிடும். ஆடு, பூனை குட்டி போட்டது என்பதுபோல. இதற்குக் குழந்தை என்று பெயரன்று. ஒரு குழந்தை பிறந்தாலும் அந்தத் தாய் தந்தையர்க்கு அதனால் பேறுகள் கிடைக்க வேண்டும். 'தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனை....' என்பது போல் பிள்ளை பிறத்தல் வேண்டும். இனி அந்தக் குடலிலே பிள்ளை தோன்றாது. அப்படிப்பட்ட பிள்ளைதான் பிறக்க

வேண்டும். இதுபோன்ற பிள்ளையாகத் திருஞானசம் பந்தர் வந்து அவதரித்தார். அவர் பிறந்த பின் அவரு டைய தாய் தந்தையர்க்கு வேறு குழந்தைகளே பிறக்க வில்லை. அவர்களும் அந்த நிலைக்குப் போகவில்லை. திருவடிப்பேறு பெற்றுவிட்டார்கள். 'தம்மின் தம்மக் கள் அறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க் கெல்லாம் இனிது' என்று திருவள்ளுவர் சொன்னதற்கேற்ப பகவதி அம்மையார் திருஞானசம்பந்தரை ஈன்றெடுத்தார்.

ஒரு குழந்தையைப் பெற்றெடுக்கும்போது தாய்க் குத்தான் இன்பம். அது போதாது, தன் இன்பத்தைக் காட்டிலும், 'தம்மின் தம்மக்கள் அறிவுடைமை' தமக்கு இன்பம் பயப்பதை விட மாநிலத்து மன்னுயிர்க்கெல் லாம் இன்பம் பயப்பதுதான் சிறப்பு! தம் மக்களால் தாய் தந்தையர்க்கு இன்பம் பயத்தல் இயல்புதான். ஆனால் அதைவிட மற்ற உயிர்களுக்கெல்லாம் இன்பம் பயப்பது பேரின்பம். அத்தகு குழந்தையைத்தான் பெற் றெடுக்க வேண்டும்.

நாமெல்லாம் அப்படிப்பட்ட குழந்தையைப் பெற் றெடுக்க வேண்டுமென்றால், பகவதி அம்மையாரும், சிவபாத இருதயரும் தோணியப்பரை வேண்டிப் பெற்ற துபோல நம் பகுதியில் ஏதேனும் திருக்கோயில் இருந் தால் அங்கே சென்று தவம் இருக்க வேண்டும். அதனால் தான் திருஞானசம்பந்தருடைய அவதாரம், இந்த உல கத்து மூவகை மக்களையும் உய்யச் செய்தது. அதனால் தாய் தந்தையர் மகிழ்ந்ததைவிட மன்னுயிரெல்லாம் மகிழ்ந்தன. அப்படி அற்புதமான குழந்தையை மணி வயிற்றில் தாங்கி மகிழ்ந்தபோது ஒவ்வொரு உயிரும் மகிழ்ந்து கொண்டிருந்தன. இந்த உண்மை சாதாரணமா கப் புலப்படாது. தாய் வயிற்றில் கரு வளருகின்ற போதே தாயின் உள்ளம் மகிழ்கின்றது; தந்தையின் உள்ளம் மகிழ்கின்றது; உற்றார், உறவினர்களின் உள்

ளம் மகிழ்கின்றது. சூழலில் இருக்கின்ற செடி, கொடி முதலான இயற்கையும் மகிழ்கின்றது. அந்த நேரத்தில் கோள்கள்கூட நல்ல நிலையில் திரிந்து, வான் மழை பொழிந்து, நன்னிமித்தங்கள் தோன்றும். நல்லோரை கள் உச்சநிலையில் வந்து அமையும். இவையெல்லாம் தாமே நிகழும்.

திருஞானசம்பந்தர் திருவவதாரம் செய்கின்ற போது திருவாதிரை நட்சத்திரம் நல்ல நிலையில் நிற்கின்றது. சிவபெருமானின் நட்சத்திரம் திருவாதிரை என்பார்கள். அதனால்தான் சிவபெருமானுக்குத் திருவாதிரையான் என்று பெயர்.

### வேதநெறி

திருஞானசம்பந்தப் பெருமான் ஆன்மாக்களிடம் முதற்படி எனப்படும் வேதநெறியாகிய சரியை நெறியைத் தழைக்கச் செய்து அதன் வாயிலாகச் சைவத்துறை விளங்க அருள்பாலித்தார்.

### சைவத்துறை

சைவ நிலை என்பது அன்பு தழைக்கும் நிலை. துறை என்பது அருள் விளங்கும் நிலை. அன்பு தன்னுள் தழைப்பது; அருள் மற்றவர்கள் தழைக்கப் பணி செய்வது. இந்த உண்மை விளங்குமாறு திருஞானசம்பந்தப் பெருமான் பின்னால் ஒரு தெய்வீகச் சுற்றுலாவே நடத்துகின்றார்.

சைவம் என்பது இயற்கை. துறை என்பது அருள் நிலை. இயல்பான அருள்நிலையே சைவத்துறை. அந்தத் துறை விளங்க வேண்டும். அது எப்படி? முதலில் தனக்கே விளங்க வேண்டும். பின்பு மூவகை மக்களுக்கும் விளங்க வேண்டும். அதனால் முதலில் தன்னுள் விளங்கிக் கொண்டார். பின்னர் மூவகை மக்களுக்கும் விளங்க வைத்தார்.

பூதபரம்பரை பொலிய

இவ்விரண்டும் சரியான நிலையில் மக்களுக்குச் சொல்லப்பட வேண்டுமானால் பூதபரம்பரை வரவேண் டும். திருநீற்றின் ஒளி பரவுதல் வேண்டும். திருநீறு பூசிய அடியார்கள் பூதபரம்பரை எனப்படுவர். அதனால் உடனே திருநீறு பூசிய அனைவருமே அடியார்கள் என எண்ணிக் கொண்டுவிடக் கூடாது.

பூதம் என்றால் என்ன? மிகவும் பெரியதாக இருப்ப தற்குப் பூதம் என்று பெயர்.

இந்த உலகத்தில் எது மிகப் பெரியது? மண்ணை விடப் பெரியது உண்டா? நீரைவிடப் பெரியது உண்டா? தீயைவிடப் பெரியது உண்டா? காற்றைவி டப் பெரியது உண்டா? வானைவிடப் பெரியது உண்டா? இல்லை. அதனால்தான் இவற்றைப் பஞ்சபூ தங்கள் என்றனர். பஞ்சபூதங்களும் இறைவனால் படைக்கப்பட்ட அடியார்கள்தாம் என்பதை உணர்தல் வேண்டும். அந்தப் பூதங்களின் இயல்பை உடையவர் களே அடியார்கள். அவர்களுக்குரிய சின்னமே திருநீறு. திருநீறு தூய்மையானது, அழுக்கற்றது, அழுக்கை அகற் றித் தூய்மை செய்வது, நலம் பயப்பது. அதன் ஆற்றலை யும், அருமையையும் 'மந்திரமாவது நீறு...' என்ற பதிகத் தால் அறிக.

பூதங்களின் இயல்புகள் என்ன? மண் பொறுமை யாக இருக்கும் - எதையும் தாங்கும். நீர் தண்மையாக இருக்கும் - தழைக்கச் செய்யும். நெருப்பு தூய்மையாக இருக்கும் - தூய்மையைச் செய்யும். காற்று ஊக்கமாக இருக்கும் - கெடாமல் இருக்கச் செய்யும். வானம் எங்கும் பரந்து நிற்கும் - அனைத்துக்கும் ஆற்றல் தரும். இப்படிப்பட்ட குணங்கள் உடையவர்கள் அடியவர்கள். இவர்களையே பூதபரம்பரை என்பர்.

அந்தப் பரம்பரை பொலிய, சிறந்து விளங்க, ஞானசம்பந்தப் பெருமான் வந்தார். அதனால்தான் அவ ருக்குக் 'கோன்' என்று பெயர். ஏதோ சாதாரணமான காரியத்திற்காக அவர் வரவில்லை. வேத நெறி தழைக்க வந்தார்; சைவத்துறை விளங்க வந்தார்; அவை இரண் டும் சரியான முறையில் விளங்கவும், தழைக்கவும் செய்யப், பூதபரம்பரையாகிய அடியவர்கள் நிலை பெறல் வேண்டும். அவர்களையும் உருவாக்க வேண் டும். இதற்காகத்தான் அவர் வந்தார்.

''இந்த மூவகை மக்களும் என்பால் வந்து சேர வேண்டும்; என் வழியில் நின்று சிறக்க வேண்டும், அதற்கு நீர் அருள்புரிய வேண்டும்'' என்று தன் புனித வாய் மலர்ந்து அழுதார். 'பெருமானே, இங்கே அனுப் பிவிட்டீர்கள், இந்த மூவகை மக்களும் உய்ய வேண் டும்; அதற்கு ஐம்பூத ஆற்றல் உடைய பரம்பரை வந்து தோன்ற வேண்டும்; அதற்கு அருள்பாலிக்க வேண்டு மென்று அழுதார். அப்படி அவர் அழுதது இதற்குத்தான் என்று மற்றவர்களுக்குத் தெரியாது. குழந்தைதானே, பசி எடுத்து இருக்கும்; அதற்காக அழுதிருக்கும் என்று சொல்லுவார்கள்.

அவர் அழுததற்கும், நாம் அழுவதற்கும் வித்தியா சங்கள் பல உண்டு. உதாரணமாக, வீட்டில் யாரோ ஒருவர் இறந்துவிட்டார். வீட்டில் இருப்பவர்கள் அடித் துப் புரண்டு அழுகின்றார்கள். அது நியாயம். ஆனால் இறந்தவரைப் பார்க்க வந்தவர்கள் ஏன் அழுகின்றார் கள்? அவர்களுக்கு, அவர்கள் வீட்டில் நடந்த துக்க நிகழ்ச்சி நினைவுக்கு வந்ததாகச் சொல்லுவார்கள். அது போல,

இந்த உலகத்தில் வந்து பிறந்துவிட்ட குழந்தைகள் இங்கே வந்து பிறந்து விட்டோமே என்று அழுகின்றன

வாம். ஆனால் திருஞானசம்பந்தர் இந்த உலகில் துன்பப்பட்டுக் கொண்டிருக்கின்ற குழந்தைகளை ஈடேற்ற வேண்டுமே என்று புனித வாய் மலர்ந்து அழுதார். இப்படித் தொண்டு செய்வதற்காக இந்த உலகத்திற்கு வந்த ஞானசம்பந்தப் பெருமானின் திருவடிகளை என் தலைமேல் சூட்டிக் கொண்டு அவர் வரலாற்றைச் சொல்ல விழைகின்றேன் என்கின்றார் சேக்கிழார் பெருமான். பிறந்த நோக்கத்தை இதுவரை பார்த்தோம். இனி அடுத்த கட்டத்திற்குச் செல்வோம்.

மூவாண்டு காலம் கழிந்தது. ஞானசம்பந்தக் குழந்தை எழுகின்ற ஞாயிறென எழிலோடு வளர்கின்றது. சிவபாத இருதயர் நாளும் திருத்தோணியப்பரின் கோயிலுக்குப் பக்கத்தில் உள்ள குளத்தில் மூழ்கித் தன் கடமைகளைச் செய்பவர். ஒருநாள் அவர் குளிக்கச் செல்கின்றபோது, குழந்தையும் அவர் பின்னாலேயே செல்கின்றது. தடுக்கிறார்; குழந்தை அழ, தோளில் தூக்கிக் கொண்டு போகின்றார். வழக்கப்படி குளத்தில் நீராடிவிட்டுக் கோயிலுக்குப் போகலாம் என எண்ணிக் குளக்கரையில் குழந்தையை விட்டுவிட்டு, நீரில் மூழ்கி, 'அகமருடம்' என்ற மந்திரத்தைச் சொல்லி வணங்குகிறார் - இது அவர்கள் பழக்கம்.

அந்த நேரத்தில், தன்னை இந்த உலகத்துக்குத் தந்த உலகியல் தந்தையைக் காணாததால் ஞானசம்பந்தர் அழுதார் என்று சொல்லப்படுகின்றது. ஆனால் இந்தத் தந்தை காணவில்லை என்பது சரி. தன்னை இந்த உலகுக்கு அனுப்பி வைத்த அந்தத் தந்தை இன்னும் காணப்படவில்லையே என்று பழைய நிலை நினைவுக்கு வந்தது. அந்த நினைவு வந்தவுடன், உலக உயிர்களுக்கு அம்மையும், அப்பனுமாக இருக்கின்ற இறைவனை நினைந்து 'அம்மே! அப்பா!' என்று அழுகின்றார். அப்படி அழுதபோது, உலகம் உய்ய எண்ணிக்

குழந்தை அழுகிறான் என அம்மையும் அப்பனும் எழுந்தருளுகின்றார்கள். அம்மையார் அப்படியே ஞான சம்பந்தருக்குப் பால் கொடுக்கவில்லை. பொற்கிண் ணத்தில் கறந்து கொடுக்கின்றாள். அம்மையார் பாலைப் பொற்கிண்ணத்திலே கறக்க, அப்பனாகிய தோணியப்பப் பெருமான், அதில் சிவஞானத்தைக் கலந்து, குழந்தைக்கு ஊட்டுக எனப் பணித்தார். பெரு மான் ஞானத்தைக் கொடுக்க, எடுத்து ஊட்டினாள். இன்றுவரையில் பார்வதி தேவிக்கு உண்ணாமுலை என்று பெயர். இன்னும் எந்தக் குழந்தையும் அவளிடத் தில் பால் உண்டதில்லை. முருகனோ, பிள்ளையாரோ, ஞானசம்பந்தரோ பால் உண்ணவில்லை. அதனால்தான் அவளை, ''உண்ணாமுலை பாகமுடையான்....'' என் றும், ''உண்ணாமுலை உமையாளுடன் உடனாகிய வொருவன்'' என்றும் குறிப்பிடுவார்.

அம்மை கொடுத்த பால் சாதாரண பாலாகிவிடக் கூடாது என அப்பனும் சேர்ந்து அந்தப் பாலைக் கொடுக்கின்றார்கள். அம்மையின் திருவருளும், அப்ப னின் அருளும் சேர்ந்து பாலாக வெளிப்பட்டது. அந்தப் பாலை உண்டார் திருஞானசம்பந்தர். உண்ட அளவில் அந்தக் குழந்தைக்குக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடல் என்ற நால்வகையான நிலையும் தெளி வாகின்றது. நால்வகைத் தெளிவும் கைவரப் பெற்றார். நூல்களைப் படிக்காமலேயே அத்தெளிவினைப் பெற் றார்.

அப்போது அவர் பெற்ற ஞானத்தைப் பற்றிச் சேக்கிழார் சொல்லுகின்றார்.

''சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில்ஓங் கியஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய
மெய்ஞ்ஞானம்

தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார்
அந்நிலையில்''

இவ்வளவு பெரிய ஞானத்தைப் பெற்றவர் ஞானத்தை உபதேசிக்கவில்லை. ஞானத்தை ஞானமாகச் சொன்னால் மக்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். அந்தக் குழந்தை சாதாரண குழந்தையன்று. இறைவனது அருளையும், ஞானத்தையும் முழுமையாகப் பெற்ற குழந்தை. ஞானத்தைப் பெற்ற குழந்தையாக இருப்பினும், மக்களுக்கு அவர்கள் நிலைக்கு ஏற்றவாறு சொல்லவேண்டுமே அன்றி அனைத்தையுமே சொல்லி விட முடியாது. ஆகவே, ஞானத்தைப் பெறுவதற்குரிய சரியான மார்க்கத்தை, சரியை மார்க்கத்தைக் காட்டினார்.

சரியை மார்க்கம் என்பது அனைவர்க்கும் பொதுவான மார்க்கம். நல்லவர்களும், கெட்டவர்களும் நடமாடும் இடம் மண்தானே. அனைவருக்கும் பொதுவாக வீசுவது காற்றுத்தானே. அனைவரும் குடிப்பது தண்ணீர் தானே. ஆகவே எல்லோர்க்கும் பொருத்தமாக உள்ள செய்திகளைத்தான் சொல்ல வேண்டும். அதன் வாயிலாக, உலக மக்களுக்கு நன்னெறியைப் புகட்ட வேண்டுமென்று எண்ணி, ஞானசம்பந்தப் பெருமான் திருக்கோயில்கள்தோறும் சென்று, மக்களைக் கூட்டி, அவர்களுக்குத் தொண்டு செய்யுங்கள் என்று போதித்தார். தமிழைப் பரப்பினார் தமிழ்ஞானசம்பந்தர்.

''நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்'' தமிழ் பரப்பினார் என்றால்; தமிழ் மொழியைப் பரப்பினார் என்று பொருளல்ல. தமிழ் என்றால் தெய்வ நிலை. எது தெய்வமோ அது தமிழ். எது தமிழோ அது தெய்வம். த - இறைவன், மி - இறைவி. தமி - அம்மையப்பர். உலகமெல்லாம் அழியினும் தாம் அழியாது இருப்பவர்கள்.

''தாம்தம் உணர்வின் தமியருள்... (சிவஞானபோ தம்) என்பார் மெய்கண்டார்.

அந்த இரண்டு பேரும் இணைந்து நிற்கின்ற காட்சி தான் தமிழ்க் காட்சி. அந்தத் தமிழை, தமிழின் வடிவ மாக இருக்கின்ற இறைவனை, இறைவன் வடிவமாக இருக்கின்ற ஞானத்தை - உணர்வரிய மெய்ஞ்ஞானம், உவமையிலாக் கலைஞானம் - என்ற இரண்டையும், எப்படி வழங்கினான் என்பதை, இசை மொழியினால் இசையுடன் கூட்டிப் பாடினார். அப்படிப் பாடிப் பரவு கின்றபோது சும்மாவே பரவுவதில்லை.

பெரியவர்கள் அல்லது ஞானிகள் என்று சொன் னால் ஏதோ ஞானத்தை மட்டும் போதித்துவிட்டுப் போகின்றவர்கள் என்று பொருளல்ல. இடையில் காண் கின்ற துன்பங்களையும், அத்துன்பங்களுக்குத் தீர்வு காணுகின்ற மார்க்கங்களையும் சொல்லுவார்கள். மக் களை நல்வழிப்படுத்தவும் செய்வார்கள். அவரவர் வழி யிலே நல்லதைச் சொல்லுவது அவர்களுக்குப் பேருதவி யாக இருக்கும்.

நூல்களைப் படிப்பது என்பது உப்புத் தண்ணீரைப் பருகியது போலாகும். எவ்வளவு நூல்களைப் படிப்பி னும் ஏதாவது ஓர் ஐயம் இருந்து கொண்டேயிருக்கும். இதனைத்தான் மணிவாசகர், 'கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்...' என்பார். தோத்திரம் ஒரு கடல்; சாத்திரம் ஒரு கடல், இலக்கணம் ஒரு கடல்; தர்க்கம் ஒரு கடல்; நியாயம் ஒரு கடல்; எனக் கடல்கள் பல. இன்னும் அதில் பல கூறுகள் உள. இந்தக் கடல்களில் தண்ணீர் பருகினால் நமக்கு என்றேனும் தாகம் தீருமா என்றால் தீரா. அதேபோன்று எவ்வளவு நூல்களைப் படித்தாலும் ஐயங்கள் அகலுமா என்றால் அகலா.

இறைவன் திருவருள் இருந்தால் அன்றி ஐயம் தெளியாது. அப்படியானால் நமக்கு ஐயங்கள் எப்போ

துமே தீராதா என்றால் அதற்கு நன்னீரைப் பருக வேண்டும். நன்னீர் என்பது ஞானாசிரியரின் உபதேசங்கள். அந்த ஞானாசிரியர் யார்? இறைவனே ஞானாசிரியன். தென்முகக் கடவுளே நம்போன்றோர்க்கும், கற்ற கேள்வி வல்லார்க்கும், ஞானாசிரியனாக, ஆசார்ய மூர்த்தமாக எழுந்தருளி, கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்ற நால்வகை ஞான மார்க்கங்களால் தெளிவிக்கின்றான். எனவே, முன்பே கற்றார்க்கு இந்த நால்வகையையும் சொல்ல வேண்டும்.

ஞானசம்பந்தப் பெருமான் முற்பிறப்பிலேயே கற்க வேண்டிய அனைத்தும் கற்றுத் தெளிந்துவிட்டார். அதனால் அவர் இப்போது பள்ளிக்குச் சென்று படிக்க வேண்டிய அவசியமேயில்லாமல் அவர்க்கு அனைத்தும் விளங்கிவிட்டது.

இப்போது யாருக்கேனும் ஞானக் கல்வி வருகின்றதென்றால் அவர்கள் இப்போது படித்து அது வந்துவிட்டதென்று எண்ணக் கூடாது. பண்டு செய்த தவம்; என்று எண்ண வேண்டும்.

சைதையில் ஒரு பெரியவர் நான் பாடம் கேட்டுக் கொண்டிருந்த போது என்னைப் பார்த்து வியப்பார். எனக்கு முன்னே 20 ஆண்டுகளாகப் பாடம் கேட்டுக் கொண்டிருந்தவர்கள், பெரியவர்கள் பலர். நான்தான் அதில் கடைக்குட்டி. சில ஆண்டுகள் அங்கே பாடம் கேட்ட பின்னர், அவர்கள் அனைவரும் என்னிடத்தில் பாடம் கேட்டார்கள். இதைப் பெருமைக்காகச் சொல்லவில்லை. அவர்களுக்கு ஏதேனும் ஐயம் ஏற்பட்டால் அவர்கள் என்னிடத்தில் கேட்பார்கள். நான் இயல்பாகப் பதில் சொல்லுவேன். அவர்களின் ஐயங்கள் தெளிந்துவிடும். என் ஆசிரியரும் பலமுறை இவற்றைப் பார்த்துவிட்டு, 'தேமொழி சொன்னால் சரியாகத்தான் இருக்கும்' என்பார். அப்போது பாணிபாலு என்ற பெரியவர்,

'தேமொழியார் இப்போது படித்து இவற்றையெல்லாம் தெளிந்து கொள்ளவில்லை. முற்பிறவிகளில் படித்ததாகும்' என்பார். 'ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவர்க்கு எழுமையும் ஏமாப் புடைத்து' என்பது போல இப்பிறவியில் பெறும் கல்வியால் மட்டும் தெளிவு ஏற்பட்டு விடுவதில்லை.

முற்பிறவிகளிலேயே ஞானசம்பந்தப் பெருமான் கற்க வேண்டிய அனைத்தையும் கற்றுவிட்டதால், இப்பிறவியில் அவர் பெற வேண்டியது ஞானம் ஒன்றே. அந்த ஞானத்தைக் குழைத்து ஊட்டிவிட்டதால் அவர் கற்க வேண்டும் என்ற செயல் போய்விட்டது. எனவே, நால்வகைத் தெளிவும் அவருக்குப் பால் குடித்தவுடனே உண்டாயிற்று.

அதனால் நாம் குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும் போது மிகவும் எச்சரிக்கையுடன் கொடுக்க வேண்டும். நல்ல உணர்வுகளுடன், நல்ல சிந்தனைகளுடன் பால் கொடுக்க வேண்டும். எரிச்சல் பட்டுக் கொண்டும், திட்டிக் கொண்டும், பிறரை நிந்தித்துக் கொண்டும் பால் கொடுத்தால் அந்த உணர்ச்சிகள்தாம் அக் குழந்தைக்கு மேலோங்கும். எனவே, தெய்வீக உணர்ச்சியோடும், இறை சிந்தனையோடும், தெய்வ அருளை வேண்டிய உணர்வோடும் பால் கொடுக்க வேண்டும். அப்போது அக்குழந்தையும் தெய்வ சிந்தனையோடு வளரும். இங்கே தெய்வமே பாலைக் கொடுத்துவிட்டதால் எந்தவிதமான பிரச்சனையும் இல்லை. பரிபூரணமான பக்குவத்தை எய்திவிட்டார். இந்த நிலையிலே ஆனந்தக் கண்ணீர் சொரிந்து நின்று கொண்டிருக்கின்றார்.

நீரில் மூழ்கி எழுந்த சிவபாத இருதயர் குழந்தையைப் பார்க்கின்றார். குழந்தையின் கண்களில் கண்ணீர். வாயில் பால் உண்டதற்கான அடையாளம். குழந்தை அழுதிருப்பது தெரிகின்றது, யாரோ பால் கொடுத்திருக்

கிறார்கள் என்றும் தெரிகிறது. மிகவும் கவனமாகக் கேட்க வேண்டும். 'யாரோ' பால் கொடுத்திருக்கிறார்கள் என்று கவலைப்படுகின்றார். பரிபக்குவம் இல்லாத, பாவாத்மா பால் கொடுத்திருந்தால் இந்தக் குழந்தை கெட்டுவிடுமே என்று வருந்துகின்றார். அந்த ஆதங்கத்தில் ஒரு கோலை எடுத்துக் கொண்டு குழந்தையை அடிக்கப் போகின்றார். யாரிடத்தில் பாலை உண்டாய்? என்று கேட்கின்றார். குழந்தைக்கு மேலும் ஆனந்தம் உண்டாகி, தன் இப்பிறப்புத் தந்தையாருக்கு இறைவனைக் காட்டுகின்றார். 'தோடுடைய செவியன் விடையேறி.... அன்றே' என்று அடையாளம் காட்டுகின்றார். 'அன்றே' என்பதற்கு அவன்தான் இறைவன் என்றும், அவன் அன்றே என்னை ஆட்கொண்ட தந்தையல்லவா என்றும் இருபொருள் கொள்ளலாம். சுட்டி அறிய முடியாத பரம்பொருளையும் சுட்டி அறிவிக்கும் ஆற்றல் எய்தினார் பிள்ளையார் என்பதனை இதன் மூலம் அறியலாம்.

### தோடுடைய செவியன்

தோ என்பதில் 'ஓ' என்ற எழுத்து இருக்கின்றது. எந்த வேதத்திற்கும் முதலாக இருப்பது ஓங்காரந்தான். எல்லாவற்றிற்கும் முதல் ஓங்காரந்தான். உலகம் என்பது ஓங்காரத்தின் வடிவம். ஓங்காரத்தின் வடிவமாக இருக்கின்ற இறைவன் நாத மயமாக இருக்கின்றான். 'ஓ' என்பது ஓசை. நாத மயம். 'ஓ' என்று சொல்லிப் பாருங்கள். வாய் 'ஓ' என்பது போல ஆகிவிடும். இதெல்லாம் இயற்கையாக இருப்பன. காது 'ஓங்கார' வடிவம்.

மூவகையான ஆன்மாக்களும் ஈடேற உன்னிடத்தில் நான் விண்ணப்பிக்கின்றேன், அந்த மொழி உன் திருச்செவியில் கேட்க வேண்டும். அதனால் தோடுடைய செவியன் என்று சிறப்பிக்கின்றார்.

செவியன் என்று மட்டும் சொல்லியிருக்கலாம். ஆனால் அப்படிச் சொன்னால் அப்பனை மட்டும் குறிப்பதாக இருக்கும். அம்மையையும் சிறப்பிக்க வேண்டும். தோடு என்பது பெண்கள் அணியும் ஆபர ணம். எனவே அம்மையை முதலில் வைத்து அப்பனை பின்னர் வைத்து அம்மையப்பராக அவன் எழுந்தருளி இருக்கின்றான் என்பதை ஒரே சொல்லில் சொல்லிக் காட்டிப் பாடுகின்றார். அம்மையப்பராக விளங்கும் பெருமானே, என்னுடைய இந்த மொழி - உங்கள் காதுகளில் விழ வேண்டும்; அதனால் இந்த உலக உயிர்கள் உய்ய வேண்டும் என்றும் கேட்டுக் கொண் டார்.

ஞானசம்பந்தர் தன் தந்தைக்குத் தெய்வத்தைக் காட்டுகின்றார். நான்முகனும் திருமாலும் தேடிக் கண்டு கொள்ள இயலாத தெய்வத்தை, இந்தச் சிறு குழந்தை காட்டுகின்றது. காட்சியும், அவர் சொன்ன கோலமும் தெரிகின்றது. யாருக்கும் தெரியாத பரம்பொருள்? நான் முகனுக்கு - அவன் நான்கு வேதங்களுக்கும் தலைவன் - படைப்புக் கடவுள். அவனுக்கும் தெரியாத, பரம்பொ ருள், மற்றும் அனைத்து உயிர்களையும் நாளும் காத்துக் கொண்டிருக்கின்ற திருமாலுக்கும் தெரியாத பரம்பொ ருள் - ஆனால் இந்தச் சிறு குழந்தை தன் தந்தைக்குத் தெய்வத்தைக் காட்டுகின்றது. அவரும் இதுநாள் வரை யிலும் காணாத தோணியப்பரைக் காலமெல்லாம் வழி பட்டும் காணாத தோணியப்பரைக் கண்ணாரக் கண்டு பெரும்பயன் பெற்றார்.

நாம் அப்படி ஒரு குழந்தையைப் பெற்றெடுக்க முடியுமா? முடியும். அவர் சென்ற வழியைப் பின்பற்றி னால், நாமும் நன் மக்கட்பேறு பெறலாம். யாரும் காணா அரும்பொருளைத் தாம் பெற்ற அருமைச் செல் வம் காட்ட, காண்கின்றார். ஆனந்தம் தாங்க முடிய

வில்லை. 'என்னை இந்த ஆனந்த வடிவத்திற்கு மாற்றி னான்' என்று சொல்லுகின்றார். அவர் பாடிய முதல் பதிகம் இதுதான். இதற்குச் சில தடை விடைகள் உண்டு. அவற்றை இப்போது ஆராய்ந்து கொண்டிருக்க வேண்டாம்.

அன்று முதல் ஞானசம்பந்தர் ஒவ்வோர் இடத்திற் கும் சென்று அங்கு எழுந்தருளியுள்ள சிவபரம்பொருள் மீது பதிகம் பாடுகின்றார். அப்பதிகங்களின் செழும் பொருள் எண்ணுவார் இதயத்தை இறும்பூது எய்தச் செய்யும் தன்மை உடையது. 'தோடுடைய செவியன்' என்ற பதிகத்திற்கு மட்டும் உரை வரைய முற்பட்டால் ஒரு தனிப் பெரும் புத்தகமாகவே அமையும். அவ்வளவு அற்புதமான காட்சி. காணுகின்ற போதே அந்தக் காட்சி யினால் ஒரு மாட்சி உண்டாக வேண்டும். சேக்கிழார் பெருமான் அந்தப் பாடலுக்கு அருமையானதொரு விளக்கம் எழுதி இருக்கின்றார். ஆனால் அதற்கு மேலும் ஒரு விளக்கம் உண்டு.

பால் கொடுத்தவுடன் பெருமானைப் பார்க்கின் றார். ஐவகையான மாட்சி தெரிகின்றது. 'ஐந்து பேர் அறிவும் கண்களே கொள்ள' என்று சொன்னார் இல் லையா? அப்படி ஐந்து புலன்களின் வாயிலில் இருந்த அழுக்கு நீங்கி ஒழுக்கத்தில் நிற்கின்றார். ஒழுக்கம் என்பது உயர்ந்த ஒன்றைக் காணுதல். அழுக்கு என்பது தாழ்ந்த ஒன்றில் நிலைத்தல்.

முதல் பதிகத்தில் மூன்று குறிக்கோள்களை வைக் கின்றார். இந்தப் பதிகத்தின் மூலமாக இறைவன் மாட்சி களையெல்லாம் உலகினர்க்கு உணர்த்துகின்றார். ஏழு பாடல்களில் அவனது மாட்சிகளை உணர்த்தியவர், எட்டாவது பாடலில் இராவணனைச் சிறப்பித்தும், ஒன்பதாவது பாடலில் திருமாலையும், நான்முகனை

யும் சிறப்பித்துப் பாடுகின்றார். பத்தாவது பாடலில் சமணர்களையும் புத்தர்களையும் பாடுவார். பதினோரா வது பாடலில் பதிகத்தின் பயன் சொல்லுவார்.

மூன்று கூறுகளாகப் பிரித்துக் கொள்கின்றார். 1) இறைவன் இயல்புகளை எடுத்துப் பாடுதல்; 2) முனைப்புமிகு இராவணனுடைய சிறப்புகளைப் பாடுதல், 3) சிறப்பற்றோர் தன்மையைப் பாடுதல், இழிந்தோருடைய தன்மைகளைப் பாடுதல் என்று வகுத்துக் கொண்டு, அப்பதிகத்தின் பயனைக் கடைசிப் பாடலில் சொல்லுவார்.

இராவணன் மிகவும் பொல்லாதவன்தான். ஆனால் குற்றத்தை உணர்ந்து உருகுகின்றான். உதாரணத்திற்கு ஒன்றைச் சொல்லுகின்றேன். இராவணனைப் போல் சிறந்த சிவ பக்தனைப் பார்க்க முடியாது. இறைவனுக் குச் சாமகானம் என்றால் மிகவும் விருப்பம். அந்தச் சாமகானத்தைப் பாடுவதில் இராவணன் மிகவும் வல்ல வன். நாரதர் போன்ற பெரிய இசைவாணர்கள்கூட அவனிடத்தில் இசை பயில வேண்டும். இராவணன் சாதாரணமானவன் அல்லன். அவன் சிறந்த அரசியல் மேதை. அரசியல் சாத்திரங்கள் அனைத்தும் தெளிவாகத் தெரிந்தவன்; பக்தியில் மிகச் சிறந்தவன்; மற்ற சாத்திரங் களிலே மிகத் தோய்ந்தவன்; 64 கலைகளிலும் தேர்ந்த வன்; சிவபக்தியிலே தலையாயவன். ஒவ்வொரு நாளும் இலங்கையில் இருந்து கயிலைக்குச் சென்று வழிபாடு செய்வான். ஆனால், இத்தனையும் நான் செய்கிறேன் என்று எண்ணுவான். இதுதான் அவன் செய்த தவறு.

இப்படி இருக்கின்றவனுக்கு ஒருநாள் தன் முனைப்பு வருகின்றது. நாளும் இலங்கையிலிருந்து கயிலைக்கு வந்து வழிபட வேண்டுமா? இந்தக் கயிலை

மலையையே இலங்கைக்குப் பெயர்த்துக் கொண்டு போய் வைத்துவிட்டால் என்ன? என்று எண்ணினான். தன் முனைப்பினாலே அப்படி எண்ணினான். அதுவே, அன்பினால் 'பெருமானே! உன்னை நாளும் வணங்க இவ்வளவு தூரம் வரவேண்டி இருக்கின்றது; தாங்கள் இலங்கையிலேயே வந்து எழுந்தருளுங்கள்' என்று வேண்டிக் கொண்டிருந்தால், பெருமான் அங்கேயே எழுந்தருளியிருப்பான். அன்பினால் இறைவனை வயப் படுத்தலாம்; ஆனால் ஆணவத்தால் இறைவனை வயப் படுத்த முடியாது.

இராவணனுக்கு என்ன சிறப்பு? முக்கோடி வாழ் நாளை முயன்றுடைய பெருந்தவத்தான். ஆயிரம் யானைகள் ஒரே நேரத்தில் அவன் மீது மோதுமானால் கூட அவன் மரணமடையமாட்டாத வல்லமையுடைய வன். அவனை வெல்லுவதற்கு ஆளே கிடையாது.

இவ்வளவு சிறப்புகள் இருந்தும், தான் என்ன செய்கின்றோம் என்ற எண்ணம் சிறிதுமின்றி கயிலை மலையைத் தூக்கினான். அப்போது பெருமான் தன் கால் கட்டை விரலால் இலேசாக அழுத்தினராம். அப்ப டியே அந்த மலையின் கீழ் சிக்கிக் கொண்டான். அப்போது அவனுடைய் தவம், முயற்சி ஏதும் பயன்பட வில்லை.

பெருமான், கால் கட்டை விரலால் ஏன் அப்படி அழுத்தினார் என்பதற்கும் ஒரு கதை இருக்கின்றது. அம்மையார் பக்கத்தில் அமர்ந்திருந்தாராம். மலையை அசைத்தவுடன் பயந்துவிட்டார்களாம். அவர்கள் பயத் தைக் கண்டவுடன் பெருமானுக்குப் பரிதாபம் வந்து விட்டதாம். அந்தப் பரிதாபத்தின் காரணமாகத்தான் அப்படி அழுத்தினாராம். இராவணன் - மலையின் அடியில் சிக்கிக் கொண்டான்.

இராவணன் மலைக்கடியில் சிக்கிக் கொண்ட போது அவன் எழுப்பிய கதறல் யானை பிளிறியது போல இருந்ததாம். மிகவும் அழகான உவமையால் இதனைச் சுட்டிக் காட்டுகின்றார். யானைக்கு எப்போதும் வேங்கைப் புலியைப் பார்த்தால் சிறிது அச்சம். அது முரட்டுத்தனமாகப் பாய்ந்து யானையை அடிக்கும். அதனால் அச்சப்படும். அப்போது காட்டில் ஒரு வேங்கை மரம் பூத்துக் குலுங்கி நின்றதாம். அதைப் பார்த்தவுடன் வேங்கைப்புலி தான் இருக்கின்றது என்று எண்ணி அதனைத் தன் நீண்ட தந்தங்களால் குத்த ஆரம்பித்தது. இரண்டு தந்தங்களும் மரத்தில் சிக்கிக் கொண்டன. தந்தத்தை இழுத்தபோது வரவில்லை. ஆனால் மரம் வேரோடு பெயர்ந்து வந்ததாம். அப்போது காடே அதிருமாறு அக்களிறு பிளிறியது. அப்படி இராவணனும் பிளிறினானாம். (கதறினான்)

அப்படி அவன் துன்பப்பட்டு கதறுவதைப் பார்த்து விடுகிறார் வாகீச முனிவர். அவர் தவம் செய்வதற்காகக் கயிலை மயிலையில் இருக்கின்றார். அவருடைய கண்களில் இவனுடைய நிலைமை தெரிகின்றது. பரிதாபப்படுகின்றார். அந்தத் துன்பத்தினின்றும் விடுபட அவனுக்கு ஓர் உபாயம் சொல்லிக் காப்பாற்ற நினைக்கின்றார். ''இறைவன் சாமகானப் பிரியன். ஒரு தலையைக் கிள்ளி எடுத்து, ஒரு கையில் இருக்கின்ற நரம்புகளை எடுத்துக் கட்டி, வீணைபோல் செய்து அதில் சாமகானத்தை இசைத்தால் இறைவன் உனக்கு அருள் புரிவான்'' என்று சைகை மூலம் காட்டினார். அவனும் அப்படியே செய்ய, இறைவன் இசையில் இலயிக்கும் போது காலின் அழுத்தம் சிறிது குறைய, மலை நெகிழ்ந்தது, கையை எடுத்துக் கொண்டு தப்பித்துவிட்டான்.

இதன் கருத்து: தன் குற்றத்தை உணர்ந்து, அன்பின் வயத்தில் நின்று, தன் குற்றத்திற்காக உருகி, நெகிழ்ந்து

பாடினால் இறைவன் அருள்பாலிப்பான் என்று தெரிகின்றது. அப்படி மன்னிக்கப்பட்ட செய்தியை எட்டாவது பாடலில் பாடுகின்றார்.

இராவணன் அவதிப்பட்டதைக் கண்டு அவனுக்கு உதவி செய்ய நினைத்து அவனுக்கு உபாயம் சொன்னாரில்லையா? அப்போது அவருக்குத் தவத்தைவிட, பிற உயிர்கள் படும் துன்பத்தைத் துடைக்கும் செயலில் மனம் சென்றதை அறிந்த இறைவன், அவரை உலகத்துக்கு அனுப்பி வைக்கின்றான். அவர்தாம் அப்பரடிகளார். 'இங்கே ஓர் உயிர் துன்பப்பட்டதற்கே இப்படி உருகினால், உலகில் பலகோடி உயிர்கள் இருக்கின்றன; அவற்றுக்கு உதவி செய்யப் போ' என்று அனுப்பிவிட்டான்.

நல்ல செயல் செய்யப் போய் இப்போது இவர் துன்பத்தில் சிக்கிக் கொண்டார். ஏன் துன்பத்தில் சிக்கிக் கொண்டார்? அவர் செய்த செயல் இறைவனது அனுமதியின்றிச் செய்தது. அதனால்தான் இந்தச் சிக்கல். இரக்கத்தினால் செய்தால்கூட அவனது அனுமதியின்றிச் செய்யக் கூடாது. அதுவும் அவன் அனுமதி பெற்றுத் தான் செய்ய வேண்டும். இது விதி. ஏன்? உயிர்கள் துன்பப்பட வேண்டிய நேரத்தில், அதிலிருந்து அவர்களை மீட்க நினைப்பது கருணையாக இருந்தாலும், அந்தத் துன்பத்தை அவ்வுயிர்கள் அனுபவித்தேயாக வேண்டும். இப்போது வாகீச முனிவர் இராவணன் பட்ட துன்பத்தைத் தவிர்க்க உபாயத்தைச் சொல்லிக் கொடுத்தது இரக்கத்தினால்தான் என்றாலும், பிற உயிர் படும் துன்பத்தைப் பார்த்து இரக்கப்பட்டதால்தான், உலகுக்கு அனுப்பினான். அங்கே போனால் கல்லில் கட்டிப் போடுவார்கள், நஞ்சைக் கொடுப்பார்கள், அந்தத் துன்பத்தை அனுபவி என்று அனுப்பிவிட்டான். நாவுக்கரசரின் அவதாரத்திற்கு அதுதான் காரணம்.

இராவணன் உருகிப் பரவி இசைத்த இசைக்கு இரங்கி அவனுக்கு அருள் தந்தான் இறைவன். இறைவனை மறந்து, தங்களைத் தாங்களே பெரியவர்கள் என்று தருக்கிக் கொண்ட திருமாலையும், பிரம்மாவையும் பற்றியும் அவர்கள் பட்ட அவமானத்தையும் ஒன்பதாவது பாடலில் விளக்குவார். சமணர்கள் இயற்கைக்குப் புறம்பாக நடந்து கொண்டதையும், அந்த இழி நெறியையும் காட்டப் பத்தாவது பாடலைப் பாடுவார். அவர் பாடிய எல்லாப் பதிகத்திலும் இந்த அமைப்பினை மறவாது பாடுவார்.

ஞானசம்பந்தரும், சிவபாத இருதயரும் தோணியப்பரின் திருக்கோயிலுக்குச் செல்கின்றார்கள். இதற்குள் அந்த ஊர் மக்கள் சிறு குழந்தையான ஞானசம்பந்தர் இறைவன்மேல் பதிகம் பாடிய செய்தியைக் கேள்விப்பட்டு, அதிசயித்து அனைவரும் திருக்கோயிலில் குழுமிவிட்டனர். அங்கே அவர்கள் அவரை, 'காழியர் தவமே, கவுணியர் தனமே, கலைஞானத் தாழிய கடலே' என்று பாடிப் பரவுகின்றனர். இது வெறும் குழந்தையன்று, தவத்தின் வடிவம், தனத்தின் வடிவம்; கலைக் கடல் என்றெல்லாம் எண்ணிப் பார்க்கின்றார்கள். தவம் இயற்றாமல் தனம் வராது.



## 1. இயற்கையை வியத்தல்

சேக்கிழார் இப்படியெல்லாம் சொல்லுகின்றார். எல்லோரும் குழந்தையைப் பாராட்டுகின்றார்கள். அங்கிருந்து திருக்கோலக்கா என்ற ஊருக்குப் போகின்றார். வழியில் இயற்கை அழகுகளையெல்லாம் பார்க்கின்றார். இயற்கையில் இறைவன் உறைந்து நிற்பதை உணர்ந்து அவற்றைப் பற்றியெல்லாம் பாடுகின்றார்.

நம்மில் பலரும் திருக்கோயிலுக்குச் சென்று அங்கே இறைவனை வழிபட வேண்டும் என்று எண்ணு வோம். திருக்கோயிலில் மட்டுமே இறைவன் இருப்ப தாக அனைவரும் எண்ணிக் கொண்டிருக்கின்றோம். அந்த எண்ணத்தில் தவறேதும் இல்லை. இயற்கையில் அவன் உறைந்து நிற்பதை நம்மில் பலரும் உணர்வ தில்லை. இயற்கை அழகுகளை ஊன்றிப் பார்க்க வேண் டும். அவன் அவற்றில் எப்படி எப்படியெல்லாம் நிறைந் தும், விரவியும் காணப்படுகின்றான் என்பதை படிப்படி யாய் உணர்வோம்.

கோயிலுக்குப் போகின்றவர் 'மடையில் வாளை பாய' என்ற பாடலைப் பாடுகின்றார். எங்கும் இறை வன் எழுந்தருளியிருக்கின்றான் என்பதனை வலியுறுத்த நினைக்கின்றார். அதனால் இயற்கையை முதலில் பாடு கின்றார்.

வயல்வெளியில் நீர் செல்லும் வாய்க்கால்களில் வாளை மீன்கள் துள்ளி விளையாடுகின்றன. மாதர்கள் குளங்களில் குடைந்து குடைந்து நீராடுகின்றார்கள். இயற்கை அழகை மட்டுமே பாடுவதாகக் கொள்ளக் கூடாது. இப்பாடலில் அந்த ஊர் மக்களின் பண்புகளை மிக அழகாக விளக்குகின்றார். வாளை மீன்கள் அந்த அளவுக்குச் செழிப்பாக இருக்க வேண்டுமென்றால் அந்த ஊர் மக்கள் அவற்றைப் பிடித்து உண்ணவில்லை என்று தெரிகின்றது. இப்போதெல்லாம் பார்க்கின் றோம்; ஏரி, குளங்களில் இருக்கின்ற சின்னச் சின்ன மீன்களையும் பிடித்து உண்டு விடுகின்றார்கள். ஆழ்கட லுக்குச் சென்று அங்கிருக்கும் மீன்களையும் பிடித்து வந்து உண்டு விடுகின்றார்கள். வளையில் இருக்கின்ற நண்டு முதலானவற்றையும் பிடித்து உண்கின்றார்கள். இப்படி அவற்றைப் பிடித்துவிட்டால் அவை எப்படி பெரிதாக வளர முடியும். ஆனால் திருக்கோலக்காவிலே

சாதாரணமாக வயல்வெளிகளிலே பெரிய வாளை மீன்கள் துள்ளி விளையாடுகின்றன என்றால் மக்கள் புலால் உணவை உண்ணாதவர்கள் எனத் தெரிகின்றது. அவர்களிடத்தில் சீவகாருண்ய ஒழுக்கம் இருந்தது எனத் தெரிகிறது.

சீவகாருண்யம் இருக்குமானால் அந்த இடத்தில் ஆன்ம நேயமும் இருக்கும். அதற்கு அடையாளமாகத் தான் 'மாதரார் குடையும் பொய்கை' என்று பாடினார். மாதர்கள் அன்பினால் ஒருவரோடு ஒருவர் அளவளாவிக் கொண்டு நீராடினார் என்பதைக் காட்டினார்.

புலால் உண்ணமாட்டார்கள் என்பதற்கு மற்றும் ஓர் உதாரணம் சொல்லுகிறேன். நான் சிறியவனாக இருந்த காலத்தில் - கத்தரிக்காயை வற்றல் போட்டு வைத்துக் கொள்வார்கள். ஏன்? ஆண்டுக்கொருமுறை தான் கத்தரிக்காய் செடி நட்டுப் பயிர் வைப்பார்கள். குறித்த காலத்திற்குப் பின் கத்தரிக்காய் கிடைக்காது. அதனால் கிடைக்கின்றபோதே, நிறைய வாங்கி வற்றல் போட்டு வைத்துக் கொள்வார்கள். தேவையானபோது, வெந்நீரில் ஊற வைத்துக் குழம்பு வைப்பார்கள். இப்படி மக்கள் எப்போதும் முன்னோக்கிச் சிந்தித்துத் தேவையான பொருள்களைக் கிடைக்கும்போதே சேகரித்து வைத்துக் கொள்வது வழக்கம். இப்போது யாராவது அப்படி வற்றல் போட்டு வைத்துக் கொள்கிறார்களா? இல்லை.

அப்படித் திருக்கோலக்காவில் வாழ்ந்த மக்கள் புலால் உண்பவர்களாக இருந்தால் சாதாரண வாய்க்காலில் அவ்வளவு பெரிய வாளை மீன்களைக் காண்பது அரிதாகவே இருக்கும். ஏன்? மீன்கள் கிடைக்கும் போதே சேகரித்துக் கருவாடாக்கி வைத்துக் கொண்டால் தேவையானபோது உண்ணலாம் இல்லையா? அப்படி

ஏன் செய்யவில்லை? அவர்களுக்குப் புலால் உண்ணும் பழக்கம் இல்லாததால் அவற்றைப் பற்றியே சிந்திக்கா மல் இருந்திருக்கிறார்கள் என்பதை இதன்மூலம் விளங் கிக் கொள்ளலாம்.

எனவே, 'மடையில் வாளை பாய' என்பதனாலும், 'மாதரார் குடையும் பொய்கை' என்பதனாலும், சீவகா ருண்யமும், ஆன்மநேயமும் இப்பாடலில் காணப்பட் டது.

இயற்கை செழித்து வளரவில்லையென்றால் இறை வன் அங்கே நிலைபெற மாட்டான். காடும், செடியும், கொடியும் எங்கே செழித்தும், கொழித்தும் விளங்குகின் றனவோ அங்கிருக்கின்ற திருக்கோயில்களில் இறைவ னும் குடியிருப்பான். இந்த இயற்கைச் சூழல்களை யெல்லாம் அகற்றிவிட்டு, வெறும் கருங்கல்லை மட்டும் வைத்துக் கும்பிட்டுக் கொண்டிருந்தால் அங்கே இறை வன் வரமாட்டான்.

இயற்கை வளம் மிக்க இடங்களில் இறைவன் குடிகொண்டிருப்பான். அதனால் திருஞானசம்பந்தரின் பாடல்களிலும் இயற்கை வளங்களைப் பற்றிய செய்தி கள் அதிகமிருக்கும்.



## 2. பொற்றாளம் பெறுதல்

இங்கேதான் திருஞானசம்பந்தர் கையால் தாளம் போட்டுக் கொண்டு பாடுகின்றார். அப்படிப் பாடும் போது கைகள் சிவந்துவிட்டன. தாளம் போடும்போது ஓசை நன்றாகக் கேட்க வேண்டும். அப்படிக் கேட்டால் தான் தனக்குத் தாளம் தவறாமல் பாட வருவது போன்று, கேட்போர்க்கும் தவறாமல் தாளம் வரும்.

தாளம் என்பது மிகவும் முக்கியமானது. அதனால்தான் இறைவன் தாளம் மட்டுமே கொடுத்தான். மேளம் கொடுக்கவில்லை. மேளத்தைப் பின்னர்தாம் வருவித்தோம். 32 கட்டுகள் உள்ளது தாளம். மேளத்திற்கும் தாளம் உண்டு. தோல் கருவி, துளைக் கருவி எதுவானாலும் தாளம்தான் முக்கியம். அந்த 32 வகைத் தாளங்களையும் தெரிந்தவனைத்தான் தாளம் தெரிந்தவன் என்பர். ஏதோ ஒன்றிரண்டு தாளங்களை மட்டும் தெரிந்து வைத்துக் கொண்டு பாடல்களைப் பாடிவிட முடியாது. ஒரு தாளத்திற்கு உபதாளங்களும் உண்டு. 32 தாளங்களும் தெரிந்தவர் ஞானசம்பந்தர். அவருடைய தேவாரத்தில் 32 தாளங்களும் உண்டு. அந்தத் தாளங்களில் எத்தனை வகையான இசைகள் உண்டோ அத்தனை வகையிலும் அவர் பாடல்கள் பாடியிருக்கின்றார். அதனால் அவருக்கு 'இசை ஞானசம்பந்தர்' என்றும் 'தமிழ் ஞான சம்பந்தர்' என்றும் பெயர்.

அவர் சாதாரண ஞானசம்பந்தர் அல்லர். சிவஞானத்தோடு வந்ததால் சிவ ஞானசம்பந்தர். ஞான சம்பந்தம் உடையவராக இருந்ததால் ஞானசம்பந்தர் எனவும், இறைவனால் ஆட்கொள்ளப்பட்டதனால் 'ஆளுடைய பிள்ளை' என்றும் பெயர் பெற்றார்.

இறைவனே தாளம் கொடுத்தான். அவர் கேட்டுப் பெறவில்லை. அவனே கொடுத்ததற்கு என்ன காரணம்? அவர் சிவஞானி. நாமெல்லாம் கேட்டால்தான் கொடுப்பான். சிவஞானியர் கேளாமலேயே கொடுப்பான். அவர்களது தேவை என்னவென்று அவனுக்கே தெரியும். அதனால் கேளாமலேயே கொடுத்துவிடுவான்.

இறைவனுக்கு நிறைவான அறிவு உண்டா? கிடையாது. அவனை 'நிரம்பா மதியன்' என்பார் மணிவாசகர். ஏன்? இளம்பிறையைத் தானே தலையில் சூட்டிக்

கொண்டிருக்கின்றான்! மேலும், 'என்னைப் போன்றவர் களையெல்லாம் ஆட்கொண்டானே, அவனுக்கு நிறை வான மதியிருந்தால் ஆட்கொண்டிருப்பானா!' என் றெல்லாம் அதற்குப் பொருள் கொள்ளலாம்.

தாளம் போட்டுப் பாடும்போது கை சிவந்துவி டும். அதிலும் சின்னஞ் சிறு குழந்தை தாளம் போட்டுப் பாடுகின்றது. அதன் கை வலிக்கும் என்று எண்ணிக் கொடுத்தானாம். குழந்தையின் கை வலிக்கும். கை சிவந்துவிடும் என்றெல்லாம் யார் எண்ணுவார்கள்? தாய் தந்தையர்தாம் அப்படி எண்ணுவார்கள். எனவே, தாயும் தந்தையுமாகிய சிவபெருமான் அவனுக்குத் தாளத்தைக் கொடுத்தான். அதனால் உலகம் உய்ய வேண்டுமென்று எண்ணிக் கொடுத்தான். இவர் போடு கின்ற தாளத்தால் உலகத்தார் நெறி தவறாமல் இருக்க வேண்டுமென்று எண்ணிக் கொடுத்தான். இவர் ஞானி யானதால் கேட்காமலே கொடுத்தான். தாளம் கொடுத்த தற்கே இத்தனை காரணங்கள் உள.

ஞானசம்பந்தப் பெருமானின் தோற்றச் சிறப்புகள் பல. அவற்றை எல்லாம் முழுமையாக நம்மால் சொல் லிவிட முடியாது. ஓரிரண்டு கருத்துக்களை மட்டும் உங்களுக்குச் சொன்னேன்.

''சடையும் பிறையும் சாம்பர் பூச்சும்'' என்று இன்னொரு கருத்தும் சொல்லுகின்றார். இதற்கு என்ன சிறப்பு? ஏன் இவற்றைச் சொன்னார்?

சடை

சடை தவத்திற்கு அடையாளம். காமம், வெகுளி, மயக்கம் என்ற மூன்றையும் அகற்றியவன் எவனோ அவன்தான் தவசி. அவன்தான் சடை வைத்துக் கொள்ள லாம். சடை போட்டுக் கொள்ளலாம். இம்மூன்று குற்றங்களும் அகன்ற நிலையே தவ நிலை. அதனால்

பெண்டிர் மூன்று கால் எடுத்துச் சடை போட்டுக் கொள்கின்றனர்.

இந்தக் கருத்துக்கள் யாவும் ஏதோ இட்டுக் கட்டிய தாகவும், கற்பனையாகச் சொல்லுகின்ற கருத்து என்றும் எண்ணக்கூடும். 'காமம் அகற்றிய தூயனடி, சிவகாம சுந்தரி நேயனடி'' என்ற பாடலின் கருத்தை எண்ணுக.

காமம் என்றால் என்ன? விருப்பம். எந்தப் பொரு ளைப் பார்த்தாலும் விரும்புவது. அதற்குக் காமம் என்று பெயர். அப்படியானால் எதையுமே விரும்பக் கூடாதா? விரும்பலாம்! அதற்கு ஒரு முறை உண்டு. பெண்கள் நகையோ, ஆபரணமோ அணிவதும், ஆடைகளை அணி வதும் யாருக்காக? கணவன் கண்டு மகிழ வேண்டும் என்பதற்காகத்தான். கணவன் தன்னோடு இருந்தவரை யில் காரைக்காலம்மையாரின் அழகும் இருந்தது. கண வன் தன்னை விட்டு அகன்றவுடனே அழகைத் துறந்து, பேய்வடிவம் தாங்கிக் கொண்டார். தான் ஒப்பனை செய்து கொள்வது தனக்காக அன்று. ஊரார் பார்ப்பதற் காக அன்று. உரியவன் பார்ப்பதற்காக மட்டுமே. அந்த எண்ணத்தோடு இருக்கின்றவர்கள் தன்னை இழந்து இருப்பார்கள். அதற்கு அடையாளமாகத்தான் அவர்கள் சடை போட்டுக் கொள்கின்றார்கள். அப்படியே உயிர்க ளாகிய உடைமைகளுக்கு உரியவனாக இருக்கின்ற இறைவன், தன் விருப்பம் சிறிதுமில்லாமல் அவர்களது விருப்பத்திற்காகவே வாழ்ந்து கொண்டிருக்கின்றான். அதுவே தவநிலை. அவன் தலையில் எண்ணெய் பூசிக் கொள்வதில்லை. பட்டு உடுத்திக் கொண்டதில்லை. வீடும் கட்டிக் கொண்டவனில்லை. தோலை ஆடையா கக் கொண்டு, சுடுகாட்டில் வாழ்ந்து கொண்டிருக்கின் றான். தியாக உணர்ச்சியுடன் விளங்குகின்றான். அதுவே தவ நிலை.

## பிறை

சந்திரன் பல பெண்களை மணந்து கொண்டான். அவர்கள் தமக்கைகள், தங்கைகள். அவன் எல்லோரிடத்திலும் அன்பாக இருந்திருக்க வேண்டும். ஆனால் ஒரே ஒரு பெண்ணிடத்தில் மட்டுமே அன்பாக இருந்தான். அதனால் மாமனார் சாபம் கொடுத்துவிட அவனுடைய கலைகள் யாவும் தேய்ந்துவிட்டன. தண்டனை கிடைத்தவுடன் சிவபெருமானிடம் சரண் புகுந்தான். அவர் அவனை ஏற்றுக் கொண்டார்.

பல தார மணமே தவறானது. சரி, அப்படியே செய்து கொண்டபின்னும், நீ ஏற்றுக் கொண்ட உயிர்களிடத்தில் என்ன பாகுபாடு? அனைவரையும் சமமாகத் தானே பார்க்க வேண்டும். மாறாகச் செய்யலாமா? சமமாகப் பார்க்காதவர்கள் தேய்மதியர் எனப்படுவர். இப்படிப் பாவம் செய்தவனையும் இறைவன் தன்னிடத்தில் ஏற்றுக் கொண்டு, தன் தலையில் வைத்துக் கொண்டு, அவனுக்கு வாழ்வு கொடுத்தான். குற்றம் செய்த உயிர்கள், தம் தவறுகளை உணர்ந்து, வருந்தி வருமானால் அவற்றையும் ஏந்தி, தலையாய கருணை புரிவான்.

## சாம்பல் பூச்சு

மணப் பொருட்களையெல்லாம் நமக்குக் கொடுத்தான்; மணமே இல்லாச் சாம்பலைத் தான் பூசிக் கொண்டான். என்ன பொருள்? என்னதான் சந்தனம் வைத்தாலும், குங்குமம் வைத்தாலும், நறுமணப் பொடிகள் போட்டாலும் நாறும் உடல்தானே! வியர்வை வந்தால் இவையெல்லாம் நாற்றமடிக்க ஆரம்பித்துவிடும். ஆனால் திருநீறு அணிந்து கொண்டால் வியர்வை வந்தாலும் நாறாது. எனவே, நாறாத பொருளைக் காட்டி, யார் வந்தாலும் அவர்களைத் தூய்மை செய்வேன் என்பதை அடையாளமாகக் கொண்டான்.

இப்படி ஒவ்வொரு பாடலிலும் இறைவனது கருணைக் குணம், தவநிலை, தியாக நிலை, இயற்கை வளம், அதன் மூலமாக அவன் எங்கும் பரந்து ஒளி வீசுகின்ற தன்மைகளையெல்லாம் காட்டுகின்றார்.

இந்தப் பாடலில் சொல்லப்பட்ட கருத்துகள் என்ன? கேளாமல் தாளம் பெற்றது; தாளம் அளவைக் காட்டுவது; ஒருவனை இசைய வைப்பது; அதுவும் அளவுடன் இசைய வைப்பது; அன்பில் ஈடுபடுத்தினாலும் அளவோடு ஈடுபடுத்த வேண்டும். பாட்டு இன்ன வகையில்தான், அளவில்தான், முறையில்தான் பாட வேண்டும் என்பது; 'பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல்' என்ற திருவள்ளுவரின் கருத்தையும் இங்கே கொள்க. பாட்டிற்கு ஓர் இயைபு இருக்க வேண்டும். அது இல்லாவிடில் பண் அன்று.

பண் என்றால் என்ன?

ஈர்த்து இசையச் செய்வது இசை. நம்மை ஓர் உயர்ந்த நிலைக்கு உயர்த்துவது பண். பயனுடையவர்களாக நம்மைச் செய்வது. பண் - பண்ணை - பண்ணுதல். அந்தப் பண்ணுக்குத் தாளம் - அளவு - வேண்டும். எனவே அளவாக ஒழுகினால் நாம் உயர்ந்த நிலைக்கு ஆளாகிவிடுவோம். இப்படி எத்தனையோ நிலைகள்.

தாளமும், இசையும் போன்று வாழ்வியலில் பெண்களோடு கலந்து வாழ்வது தவறு என்று சொன்ன சமண நெறி இந்நாட்டில் தலையெடுக்கக் கூடாது என்பதற்காகத்தான் தாளத்தோடு பாடினார். பெண்களையும், இசையையும் வெறுத்தது சமணம். அதனால் தான் ஞானசம்பந்தர் இசையைப் பாடினார். இசையில்லா விட்டால் உயிர்கள் வாழ்ந்து பயனில்லை. இசை உயர்ந்த ஞான நிலை உடையது. எதனாலும் முடியாதது, இசையால் முடியும். இசையாதவர்களை

இசையச் செய்யலாம், உருகாதவர்களை உருகச் செய்ய லாம். நோய் தீர்க்கலாம். சம்பந்தப்பெருமான் இசை பாடித்தானே நோயை நீக்கினார், நாட்டைத் திரட்டி னார், நெறியில் நிறுத்தினார். அந்த இசையை வேண் டாம் என்று சொன்ன சமண சமயத்தை வெல்லவே சம்பந்தப் பெருமான் வந்தார். அத்தகு பெருமான், கையால் தாளம் போடக் கூடாது என்றும், அவர் கை நோகக்கூடாது என்பதற்காகவும்தான் தாளம் கொடுத் தான் இறைவன்.

தாளம் பெற்றது எதற்காக? ''நாளும் இன்னிசை யால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தருக்கு, உலகர் முன் தாளம் ஈந்தவன்'' என்று பின்னாளில் தோன்றிய சுந்தர மூர்த்தி சுவாமிகள் சிறப்பித்துப் பாடுகின்றார். ஞானசம் பந்தர் ஒருநாள், இருநாள் மட்டும் பாடவில்லை. நாளும் பாடினார். அவர் பரப்பியது ஞானத்தமிழ்.

தமிழ் பரப்பினார் என்றவுடன் சில ஐயங்கள் எழுகின்றன. நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர் என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் குறிப் பிட, அவருக்கும் பின்னர் வந்த சேக்கிழார் சுவாமிகள் 'வேதம் தழைத்தோங்க' வந்தார் என்கிறார். அப்போது அவர் பரப்ப வந்தது, தமிழ் வேதத்தை. வடமொழி வேதத்தை அன்று. தாளத்தைக் கொடுத்தது! மறைவாகக் கொடுக்கவில்லை; அனைவரும் அறியக் கொடுத்தான். கொடுத்ததும் பொன் தாளம். பொன் தாளத்தில் ஓசை எழாது. அதனால், அம்மை பார்க்கின்றாள், ''அப்பன் பொன் தாளத்தைக் கொடுக்கின்றாரே, அதில் ஓசை வராதே! அதனால் என்ன பயன்?'' என்று எண்ணி, அத்தாளத்தில் ஓசையைக் கொடுத்தாளாம். அதனால் தான் அங்கிருக்கும் அம்மைக்கு 'ஓசை கொடுத்த நாயகி' என்று பெயர்.

திருக்கோலக்கா என்ற திருத்தலம் மிகவும் அருமை யான திருத்தலம். அங்கே அனைவரும் போய்ப் பார்க்க வேண்டும். ஞானசம்பந்தப் பெருமானுக்குத் தாளம் கொடுத்த இடமில்லையா? அங்குப் போகும்போது அந்த எண்ணம் வரவேண்டும். எனக்கு அப்படிப்பட்ட எண்ணம் வருவதுண்டு. அவரோடு முற்பறவியில் நாம் போனோமோ இல்லையோ, அவர் பெற்ற உணர்வுகள் இப்பிறவியில் நமக்கும் வருகின்றன.

அங்கே போயிருக்கும் போது, ஒருவர் தங்கள் குழந்தை பேசாமல் இருப்பது கண்டு, திருக்கோலக்கா வில் உறையும் இறைவனிடத்தே, தங்கள் குழந்தை பேசினால் பொற்றாளம் செய்து வைக்கின்றோம் என்று வேண்டிக் கொண்டதாகவும், பையன் பேசினான் என் றும், அதனால் பொற்றாளம் செய்து வந்து வைத்ததாக வும் சொன்னார். அந்தப் பொற்றாளத்தைத் தட்டினால் ஓசை வருகின்றது. சாதாரணமாகப் பொற்றாளத்தில் ஓசை வருவதில்லை. இன்றும் இத்தகு நிகழ்ச்சிகள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. எனவே இவர் பாடிய பாடல்கள் யாவும் உயிருள்ள பாடல்கள்தாம் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள். அவை அனைத்தும் கருணையுள்ள பாடல்கள். அந்தப் பதிகத்தைப் படிப்பத னாலும், உணர்வதினாலும் பயன்பெறுவோம். ஆண்ட வன் நினைத்தால் எதையும் செய்வான். நம்முடைய தகுதிகளைக் கொண்டு அவனை அளக்கக் கூடாது.

நம்மை வைத்துக் கொண்டு இறைவனை எடை போடக் கூடாது என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டைச் சொல்லுகின்றேன். அமெரிக்காவில் இருந்தபோது சிகாகோ நகருக்குச் சென்றிருந்தேன். அங்கே ஒரு பேரா சிரியரிடம் பேசிக் கொண்டிருந்த போது, ‘ஐயா, இந்த ஊருக்கு வந்ததற்கு அடையாளமாக இந்த ஊரில் உள்ள 144 அடுக்குள்ள கட்டிடம் ஒன்றுள்ளது; அதனைத்

தாங்கள் பார்க்க வேண்டும்'' என்று சொன்னார். கட்டி டத்தை என்ன பார்ப்பது என்று நான் அலட்சியமாக இருந்தேன். அவர் உள்ளுக்குள் சிரித்துக் கொண்டார். எனக்குப் புரிய வைப்பதற்காக அவர் விளக்கினார். ''இந்த நாட்டிலேயே மிகவும் உயரமான கட்டிடம், மிகவும் அதிசயமான கட்டிடம், இங்கே வருகின்ற அனைவரும் அதைப் பார்க்காமல் போனதில்லை, அப் படி நீங்கள் பார்க்காமல் போனால், உங்கள் நாட்டில் உள்ள யாரிடமாவது அந்தக் கட்டிடத்தைப் பார்க்காம லேயே வந்துவிட்டேன் என்று சொன்னால் இகழ்ச்சி செய்வர்'' என்று சொன்னார். அதைப் பார்க்க, 2 டாலர் கட்டணம் என்று சொன்னார்கள். அவ்வளவு காசு கொடுத்து அதை எதற்காகப் பார்க்க வேண்டும், அந்தக் காசு இருந்தால் பின்னால் நமக்குப் பயன்படும் என்று நான் எண்ணினேன். அவர்கள் அதற்குப் 'பரவா யில்லை, நாம் போய் பார்த்துவிட்டு வரலாம்' என்று அழைத்துச் சென்றார்.

இத்தனை மாடிகளையும் கடந்து மேலே செல்வ தற்கு எவ்வளவு நேரம் பிடிக்கும் என்று எண்ணுகின்றீர் கள் என்று கேட்க, நான் ஒரு மாடியைக் கடக்க ஒரு நொடி என்று வைத்துக் கொண்டாலும் $2^1/_2$ நிமிடமா வது ஆகாதா? என்று சொன்னேன். அதற்கும் அவர் பதிலொன்றும் சொல்லவில்லை. ஆனால் லிப்ட் உள்ளே ஏறியவுடன், 'நீங்கள் ஒன்று இரண்டு என்று எண்ணிக் கொண்டு வாருங்கள், எவ்வளவு நேரம் ஆகின் றதென்று தெரிந்து கொள்வீர்கள்'' என்றார். நான் ஒன்று, இரண்டு என்று எண்ணி மூன்று என்று எண்ணுவதற்குள் மேலே வந்து நின்றுவிட்டது. வியப்பாக இருந்தது. நான் கணக்குப் போட்டது 144 நொடிகள் ஆகும் என்று. ஆனால் மூன்று நொடிக்குள் 144 மாடிகளையும் கடந்து மேலே வந்துவிட்டேன். அப்போதுதான் எனக்குள் ஓர்

எண்ணம் எழுந்தது. இந்த மனித அறிவையே நம்மால் கணக்குப் போட முடியவில்லையே; ஆண்டவனைப் பற்றி நம்மால் என்ன கணக்குப் போட முடியும்? என்று வியப்பெய்தினேன்.

பொற்றாளம் வருமா? பொற்றாளத்தில் ஓசை வருமா? என்றெல்லாம் வினாக்களை எழுப்பாமல், "ஏதுக்களாலும், எடுத்த மொழிகளாலும் சோதிக்காமல் அவனைத் தொழுவது நம் கடன் என்றும், ஞானசம்பந் தப் பெருமானுடைய அவதாரம் காழி வேந்தனுடைய அவதாரம் என்றும் உணர்தல் வேண்டும்."

ஞானசம்பந்தர் காலத்தில் ஆன்மாக்கள் ஈடேறா மல் அவற்றுக்குப் பகையாக இருந்த சமணம் போன்ற பல சமயங்கள் நாட்டில் உலவிக் கொண்டிருந்தன. இயற்கை நெறியினின்றும் விடுபட்டு, இடர்ப்பட்டு தமிழ் மக்கள் அல்லற்பட்டுக் கொண்டிருந்தார்கள். அந் தப் பகையை அழிக்க வேண்டும் என்றால் தமிழ் நெறியைப் பரப்ப வேண்டும். அதற்கு ஓர் அளவு இருக்கின்றது. அந்த அளவையும், நெறியையும் பரப்ப இறைவன் திருஞானசம்பந்தருக்குப் பொற்றாளம் கொடுத்தான் என்று முன்னே பார்த்தோம்.

சீர்காழிக்கு மீண்டும் பெருமான் வருகின்றார். அங்கே அந்தணர் மரபுக்கு ஏற்ப அக்குழந்தைக்கு உபநய னம் செய்து வைக்கின்றார்கள். உபநயனம் என்பது 'ஞானக்கண்' திறத்தல் என்று பொருள்படும். நயனம் என்றால் தமிழில் கண் என்று பொருள். தெலுங்கில் அது சிறிது திரிந்து 'நாயனா' என்பார்கள். அது வேறு மொழியன்று. தமிழ் மொழிதான். ஆசாரியர் கண்ணால் பார்த்துத் தீட்சை செய்தால் அதற்கு நயன தீட்சை என்று பெயர். கண் போன்றவன் தகப்பன். அதனால் நயனா என்று தந்தையை அழைத்தார்கள்.

கண்ணொளி ஒருவரை ஞானவானாக்கி உயர்ந்த கருத்துகள் கொண்டவராகச் செய்துவிடும். நாம் ஏதேனும் சொன்னால் அன்பர்கள் அதைச் சரிவரக் கவனிப்பதுமில்லை; கடைப்பிடிப்பதுமில்லை. 'ஐயா ஏதோ சொல்லுகின்றார்' என்று விட்டுவிடுகின்றார்கள்.

வள்ளல் பெருமான் சோதியை வைத்து வணங்கச் சொன்னதற்குப் பல காரணங்கள் உண்டு. இறைவன் சோதிமயமானவன் மட்டுமல்லன். சோதியைக் கண்டு வணங்க வணங்க, சோதியில் நம் நாட்டம் நிலைபெற நிலைபெற, சோதிச் சுடரானது நம்முள்ளே சென்று கருக்கொள்கின்றது. ஆன்ம வளர்ச்சி மிக வேகமாக இருக்கும். சோதியிலே நம்முடைய பார்வையை ஒன்றச் செய்து, அதனை நமக்குள்ளே செலுத்த வேண்டும். நீங்கள் செலுத்த முடியாது. அதுவே சென்றுவிடும். சோதியைப் பார்த்து ஒன்றியிருந்தாலே, அதுதானே உள்ளே சென்றுவிடும். பின் உயிரை உயர்த்தும். உணர்வை உயர்த்தும், ஆன்மபோதத்தை உயர்த்தும்; அருள் நிலையை உயர்த்தும். ஆகவே, அனைத்தையும் உயர்த்தும் பான்மை அதற்கு உண்டு. கடைசியாக எப்படியேனும் இந்த மக்கள் ஈடேற வேண்டும் என்பதற்காகத்தான் அவர் சோதியை வைத்து வழிபடுமாறு சொன்னார்.

சோதி வழிபாடு என்பது முன்னரே நம் தமிழகத்தில் உண்டு. வீட்டில் காமாட்சி அம்மன் விளக்கென்றும், குத்து விளக்கென்றும் ஏற்றி வைக்கின்றோம். இவற்றையெல்லாம் ஏற்றி வைக்கின்றோமே தவிர, ஏன் ஏற்றி வைக்கின்றோம் என்று உணர்வதில்லை. அதனை வழிபடுவதை மறந்துவிட்டோம். அப்படியே இருப்பினும் பண்டத்தின் மேல் பார்வை சென்றதே தவிர, ஒளியின் மேல் பார்வை சென்றது கிடையாது.

பார்வை என்பது மிகவும் முக்கியமானது. மொழியினால் சொல்ல முடியாத, மொழியினால் திருத்த முடியாத, மொழியினால் தெளிவு செய்ய முடியாத கருத்தைப் பார்வையினால் செய்துவிடலாம். பார்வை அத்தனை ஆற்றல் உடையது. எனவே நயன தீட்சை என்பது மிகவும் இன்றியமையாதது.

*நயன தீட்சை, பரிச தீட்சை, மானச தீட்சை எனத் தீட்சைகளில் பலவகை உண்டு. அவற்றுள் மூன்று மிகவும் இன்றியமையாதன.*

*1. பார்வையால் உங்களிடத்துள்ள தீமையை அகற்றி நன்மையைச் செலுத்துதல்.*

*2. மொழியால் உங்களுடைய மொழியில் உள்ள தீமையை அகற்றி நன்மையை மொழியச் செய்தல்.*

*3. எண்ணத்தால் உங்களுடைய எண்ணத்தில் உள்ள தீமையை அகற்றி நன்மையை எண்ண வைத்தல்.*

*நாம் எண்ணத்தில் தீமையை அகற்றினால் பிறருடைய எண்ணத்தில் உள்ள தீமை அகலும். நம் பார்வையில் தீமை அகன்றால் பிறருடைய பார்வையில் உள்ள தீமை தானே அகலும். இந்த உண்மைகளைத்தான் தீட்சை என்று சொன்னார்கள். ஆனால் இப்போது சடங்குகளைப் பெரிதெனக் கொண்டு, ஆயிரம், இரண்டாயிரம் என்று செலவுகளைச் செய்து கொண்டு இருக்கின்றார்கள். அதன்பின் தீர்த்தப் பாத்திரம் துலக்குதலும், வழிபாட்டு விக்கிரகங்களைத் துலக்குதலுமாகச் செய்து கொண்டு இருக்கின்றார்கள். இவற்றையெல்லாம் செய்தாலும் முக்கியமானது எது என்பதை மறந்து விடுகின்றார்கள்.* ஒளியை வழிபட வேண்டும்; அதில் நம் கவனத்தைச் செலுத்த வேண்டும்; ஒளியில் நம் சிந்தனையை நாட்ட வேண்டுமென்பதை மறந்து புறச் சடங்குகளிலேயே கவனத்தைச் செலுத்திக் கொண்டி

ருக்கின்றார்கள். இப்படிச் சொல்லுகின்றேன் என்று யாரும் வருத்தப்படக் கூடாது.

முருகன் என்றாலும், விநாயகன் என்றாலும் ஒளியே. இறைவன்தான் எல்லா வகையான வடிவங்களாகவும் இருக்கின்றான். இறைவன் சோதிமயமானவன். எல்லாமே சோதியின் வடிவம்தான் என்பதை நிலைநிறுத்தவே தீபாவளி வந்தது. கார்த்திகை தீபம் வந்தது. திருவண்ணாமலை மட்டும் சோதி மயமாக இல்லை. நாடெங்கிலும் காணப்படுகின்ற, இல்லங்கள் தோறும், முற்றங்கள்தோறும், கொட்டும் குப்பைகள் தோறும், இறைக்கும் கிணறுகள்தோறும், நடக்கும் பாதைகள்தோறும் சோதி மயமாக ஆக்கினார்கள். எல்லாப் பொருள்களிலும் இறைவன் நீக்கமற நிறைந்து காணப்படுகின்றான்; அந்த ஒளியில் இறைவனைக் காணுங்கள் என்பதற்காகவே இந்தப் பண்டிகைகளையும், திருவிழாக்களையும் ஏற்படுத்தினார்கள் நம் பெரியவர்கள். நயனம் என்பதற்கு விளக்கமாக இந்த இடைப்பட்ட விளக்கங்களைச் சொன்னேன்.

நயன தீட்சை என்ற ஞானக் கண்ணைத் திறந்து வைக்கும் சடங்கைச் செய்து வைத்தார்கள். அதற்கு உபநயனம் என்று மற்றொரு பெயர். பிரமாணர் குலத்தில் இப்போதும் அந்தச் சடங்கைத் தொடர்ந்து செய்து வைக்கின்றார்கள். காயத்திரி மந்திரத்தை உபதேசிக்கின்றார்கள். நல்ல பழக்கம். காயத்திரி மந்திரத்தை மற்றவர்கள் யாரும் சொல்லக் கூடாது என்றிருந்தது. இப்போது அப்படியில்லை. குற்றவாளிகள் கூட அந்த மந்திரத்தைச் சொன்னால் அவர்கள் திருந்துவார்கள் என்று எண்ணி சிறைச்சாலையில் கூட அதனைச் சொல்லுமாறு செய்திருக்கின்றார்கள். இப்போது யாரும் சொல்லலாம். அப்படிப்பட்ட உபநயனத்தை நம் திருஞானசம்பந்தப் பெருமானுக்குச் செய்ய, சீர்காழியில் ஏற்பாடுகள் செய்திருந்தார்கள்.

அந்த நிகழ்ச்சியில் சொல்லப்பட்டது என்ன மந்திரம் என்று தெரியவில்லை. உபநயனம் என்றுதான் சொல்லியிருக்கின்றார்கள். இப்போதெல்லாம் உபநயனம் என்றால் காயத்ரி மந்திரத்தைத்தான் சொல்லிக் கொடுக்கின்றார்கள். அதன் பொருள், 'ஒளிமயமாக இருக்கின்ற கதிரவனே! உன்னை நான் வணங்குகின்றேன்; என் கண்ணில் ஒளியைக் கொடு, என் மூச்சில் ஒளியைக் கொடு, என் கைகால்களுக்கும், மற்ற என் உடம்பில் உள்ள எல்லா இடங்களிலும் ஒளியைக் கொடு.'' அவ்வாறு ஒளியைப் பார்த்து, ஒளியை வணங்கி, ஒளியைக் காணும் காட்சிதான் உபநயனம். அந்த மந்திரங்கள் அதைத்தான் சொல்லுகின்றன. இவையெல்லாம் சின்னஞ்சிறு ஒளிகள் என திருஞானசம்பந்தப் பெருமான் கருதுகின்றார். ஒளிகளுக்கெல்லாம் ஒளியைத் தருகின்ற ஓர் ஒளி உண்டு.

இந்த உலகத்தில் பல ஒளிகளை நாம் கண்டு கொண்டிருக்கின்றோம். இவற்றில் சிறந்த ஒளி எது? கதிரவன் ஒளிதான் சிறந்தது. அதனினும் வேறு ஒளி இருப்பதை, சிறப்பானதை நாம் இந்த உலகத்தில் காண முடியாது. மற்ற ஒளிகள் யாவும் கதிரவனின் ஒளிக்கு முன்னால் மின்மினிப் பூச்சி போன்றவையே. அவற்றின் ஒளியும் பகல் நேரத்தில் பயன்படா. இரவு நேரத்தில் மட்டுமே அதன் ஒளி பயன்படும்.

உலக மக்களோடு பழகிப் பெறுகின்ற அறிவு பசு அறிவு. பண்டங்களோடு பழகிப் பெறுவது பாச அறிவு. பசு அறிவும், பாச அறிவும் மின் விளக்குகளைப் போன்றது. பதி அறிவு என்பது கதிரவனைப் போன்றது. பதி அறிவு வருகின்றபோது மற்ற இரண்டு அறிவும் மங்கிவிடும். காயத்திரி மந்திரங்கள் ஒளி உடையன. அவை விண்மீனைப் போன்றவை. அப்படியே மற்ற மந்திரங்களும் காடை விளக்கு, கை விளக்கு, குழல்

விளக்கு, குமிழ் விளக்கு போன்றவை. மந்திரங்களிலே தலைசிறந்த மந்திரம் ஐந்தெழுத்து மந்திரம் என்றும், இதற்கு மேலும் மந்திரமில்லை என்றும் நான் சொன்னால் அதைப் பற்று என்பீர். அதுவே சிறந்தது என்று - ஞானசம்பந்தப் பெருமான் சொல்லுகின்றார். இந்த ஐந்தெழுத்துக்கும் முதன்மையாக இருப்பது பிரணவம் அல்லது மகாப் பிரணவம் என்பது. இதனை உண்மை விளக்கம் என்ற நூலில், ''ஓங்காரமே நற்றிருவாசி....'' என்ற பாடலில் சொல்லிக் காட்டுகின்றார். நிறை சுடராக இருப்பது ஐந்தெழுத்து. சுடர் என்று சொல்லவில்லை. அது ஒன்றே நிறைசுடர் என்றும் மற்றவை எல்லாம் குறை சுடர் என்றும் தெரிகின்றது.

எது நிறை, எது குறை என்று தெரியாமல், அவரவர் மரபு வழியிலே தங்கள் குழந்தைகளுக்கு உபதேசிப்பது என்று வைத்திருக்கின்றார்கள். பிராமணர்கள் தங்கள் வழக்கப்படி குழந்தைக்கு உபநயனம் செய்து வைக்க நினைத்து அதற்கான ஏற்பாடுகளைச் செய்து வைத்திருக்கின்றார்கள். வேத விற்பன்னர்கள் அநேகர் குழுமியிருக்கின்றார்கள். ஞானசம்பந்தப் பெருமான் அப்போது சொல்லுகின்றார்: ''தனக்கு உபநயனம் தேவையில்லையென்றே எண்ணுகின்றார். அப்படிச் சொன்னால் தவறில்லை. அப்படிச் சொல்லாமல், 'இது அவசியமா' என்று கேட்கின்றார். ஏன்? அவருக்கு என்ன கிடைக்க வேண்டுமோ அது இறைவன்பாலிருந்து நேராகவே கிடைத்துவிட்டது. இறைவனும் இறைவியும் இறங்கி வந்து தாங்களே ஞானப் பாலைக் கொடுத்தபின்னர், வேறு யார் என்ன கொடுக்க வேண்டும்'' என்ற எண்ணம் அவர் மனத்தில்; எனவே, பஞ்சாட்சரத்துக்கு மேல் மந்திரமில்லை, அதனால் மந்திர உபதேசம் தேவையில்லை என்றும் தெரிவிக்கின்றார்.

அவர் ஞானக் குழந்தைதான் என்றாலும், அவருக்கு உபதேசம் தேவையில்லை என்றாலும், அவர் தன் குழந்தை என்ற பற்று உடன் இருப்பதாலும், மரபு வழிச் சடங்குகளும் செய்து வைக்க வேண்டுமென்று தந்தையாரும், மற்ற உறவின் முறை மக்களும் விரும்புகின்றனர். அதற்கு ஞானசம்பந்தரும் ஒப்புக் கொள்கின்றார். அவர்கள் மனம் புண்படக்கூடாதே என்ற காரணத்தால் ஒப்புக் கொள்கின்றார். தங்களுக்கு எவ்வளவுதான் தெரிந்திருப்பினும், ஞானிகள் பிறர் சொல்லுகின்ற கருத்துகளையும் ஏற்றுக் கொள்வதுபோல் இருப்பார்கள். ஆனால் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். இதற்கொரு உதாரணத்தைச் சொல்லலாம்.

இறைவன் புலால் உணவை ஏற்றுக் கொள்ளுவானா? ஒப்புயர்வில்லாத, அன்பின் பெருக்கில் நின்ற கண்ணப்பர் தன் கண்ணை எடுத்து அப்புகின்றார். அந்த கண்ணப்பனுடைய அன்புக்கு இணங்கி, ஊன் உணவை எடுத்துக் கொள்வதுபோல் பாவனை செய்தான். ஆனால் உணவை உண்ணவில்லை. பேரன்புக்கு இணங்கி அதனை மறைத்தருளினான். ஞானியரும் அப்படித்தான். சில செய்திகளுக்கு செவிமடுப்பது போல இருப்பார்களே தவிர, ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்; சரியென்று ஒப்புக் கொள்ள மாட்டார்கள்.

ஞானசம்பந்தப் பெருமானும் அப்படித்தான் அதனை ஒப்புக் கொள்வது போல அமர்ந்திருக்கின்றார். அந்த நிகழ்ச்சியின் போது வேதங்களில் ஏற்பட்ட ஐயங்களுக்கு ஞானசம்பந்தப் பெருமான் விளக்கங்கள் சொன்னார் என்றிருக்கின்றதே தவிர, எந்த வேதம் என்று குறிப்பிடப்படவில்லை. என்ன விளக்கினார் என்றும் தெரியவில்லை. ஒரிரு வார்த்தைகளில் சேக்கிழார் சுவாமிகள் கோடிட்டுக் காட்டினாலும் அவர் என்ன பேசுகிறார் என்று உறுதியாகச் சொல்ல இயலாது. பலநூறு

ஆண்டுகளுக்குப் பின்னர் வந்த சேக்கிழாரால் ஞானசம் பந்தப் பெருமான் என்ன பேசுகிறார் என்று அப்படியே சொல்ல முடியாது. அவருடைய பதிகங்கள் இருக்கின் றன; அவற்றைக் கொண்டு யூகித்துச் சொல்லுகின்றார்.

ஞானசம்பந்தர் ஐந்தெழுத்துக்குமேல் மந்திர மில்லை என்று சொன்னதால் மற்ற மந்திரங்களை அவர் பொருட்படுத்தவில்லையென்று தெரிகின்றது. ஆனால் அவற்றை உதாசினப்படுத்தவோ, முழுமையாக ஏற்றுக் கொள்ளவோ இல்லை எனத் தெரிகிறது. வந்திருந்தவர் களுக்கு இவர் உபதேசம் செய்கின்றார்.

''துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமின் நாள்தொறும்
வஞ்சகம் அற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்சவு தைத்தன அஞ்செ ழுத்துமே.''

துஞ்சுதல் - இறத்தல், உறங்குதல் என்று பொருள். திருவள்ளுவர் இந்த உண்மையைக் காட்டவே ''உறங்கு வது போலும் சாக்காடு உறங்கி, விழிப்பது போலும் பிறப்பு'' என்று சுட்டினார். உறக்கத்தையும், விழிப்பை யும், இறப்புக்கும், பிறப்புக்கும் ஒப்புக் காட்டுகின்றார்.

விழித்துக் கொண்டிருக்கின்ற போதும், உறங்கு கின்ற போதும் நெஞ்சம் நிறைந்து நாள்தோறும் ஐந்தெ ழுத்தை நினையுங்கள். நம்முடைய நெஞ்சிலே நிறையி ருக்கின்றதா குறையிருக்கின்றதா என்று நம்மை நாமே சோதித்துப் பார்த்துக் கொள்ள வேண்டும். எந்தச் செய் தியை எடுத்துக் கொண்டு அதில் நிறையா? குறையா? என்று கேட்டுக் கொண்டே போனால் எதிலும் நிறைவு இருக்கின்றதாகத் தெரியவில்லை. குறையாகத்தான் இருக்கின்றது. நிறைவு எப்போது வரும்? போதும் என்ற மனம் இருந்தால் நிறைவு ஏற்பட்டு விடும்'. ஏதேனும் ஒன்று கிடைத்தால் சிந்தையில் போதும் என்ற நினைவு

இருக்க வேண்டும். அதல்லாமல் எவ்வளவு படித்தாலும் நிறைவு வராது; எவ்வளவு கொடுத்தாலும் நிறைவு வராது; எவ்வளவு கிடைத்தாலும் நிறைவு வராது. அதனால் தான் 'நிறைந்து நினைமின் நாள்தொறும்' என்கின்றார். எப்படி நினைக்க வேண்டுமென்றால், 'வங்சகமற்ற அடி வாழ்த்துங்கள்' அப்போது நெஞ்சம் நிறைந்துவிடும். இந்த வஞ்சகம் நாள்தொறும் அற்றுப் போக வேண்டும். ஏன்? வஞ்சகம் நாள்தொறும் வந்து கொண்டேயிருக்கும். அதனால் நாள்தொறும் வஞ்சகம் அற்று அடி போற்ற வேண்டுமென்கின்றார்.

எடுத்துக் கொண்டேயிருந்தாலும் களை முளைத்துக் கொண்டேயிருக்கும். அது மட்டுமன்று. பயிர் விளைந்து, கதிர் அறுக்கின்ற போது பார்த்தாலும் கீழே அசும்பு முளைத்திருக்கும். அறுவடை முடிந்தாலும், அந்த நேரத்திலும்கூட களை இருந்து கொண்டேயிருக்கும். அப்படியே ஆண்டவன் அருள் பெற்று, இறைவன் திருவடியை அடைகின்ற, ஆன்ம பலம் பெற்றுவிட்ட நேரத்தில்கூட ஆன்மாவில், களை இருக்கும். ஆனால் விளைவை அழிக்காத. களை அசும்பு முதலான களை. ஆண்டவன் திருவடியை அடையத் தடையில்லாத களைகள் இருக்கலாம். ஆண்டவன் திருவடியை அடைவதற்குத் தடையாக இருக்கின்ற களைகளைத்தான் அகற்றிவிட வேண்டும். அதற்கு வஞ்சகம் அற்று இருக்க வேண்டும். ஐந்தெழுத்தைச் சொல்லிக் கொண்டு வந்தால் உங்களைக் கூற்று ஒன்றும் செய்யாது. உங்களுக்கு மரணம் இல்லை. ஆனால் எப்படிச் சொல்ல வேண்டுமென்பதற்கு உபாயம் சொல்கின்றார்.

முதலில் வஞ்சகம் அற்றிருக்க வேண்டும். வஞ்சகம் என்ற களை நாள்தொறும் கிளைத்துக் கொண்டேயிருக்கும். அதனை அஞ்செழுத்தைச் சொல்லி அகற்றிக் கொண்டேயிருக்க வேண்டும். அதுவே அனைத்துமாகி

விடும். அதுவே களை எடுக்கும், அதுவே நீராகும்; அதுவே உரமாகும்; அதுவே முதிர்வாகும்; அதுவே நிறையாகும். இடைவிடாமல் சொல்லிக் கொண்டேயிருந்தால் தாழ்ந்த நிலை தானே மாறிவிடும். மற்றொரு பாடலில், "ஞானமும் கல்வியும் நமச்சிவாயவே..." என்று சொல்லுவார். அந்தப் பதிகம் முழுதும் நமச்சிவாய என்று சொல்லுகின்றார். எனவே அனைத்தையும் தரவல்லது என்பதனால் கூற்றையும் அகற்ற வல்லது இந்தப் பாடல் என்பது தெளிவு.

பாடலைப் பார்த்தால் சாதாரணமாகத்தான் இருக்கின்றது. ஆனால் ஆழமான பொருள் புதைந்து இருக்கின்றது. இப்போது கூற்றை உதைத்தது அஞ்செழுத்தா? ஆண்டவனின் திருவடியா? சிறு செய்தியானால் கூடத் தெளிவாகத் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டும் என்பதற்காகச் சொன்னேன். இது பெரிய செய்தி. ஆனால் சொல்லுகின்ற போது சாதாரணமாகச் சொல்லி விடுவார்கள். எனவேதான் விளக்கமாகச் சொல்ல விழைகின்றேன்.

கூற்றுவனை உதைத்தது இறைவனின் திருவடி. கூற்றுதைத்த சேவடி என்று பாடுகின்றார்கள். அப்போது, திருவடி என்றாலும், ஐந்தெழுத்தென்றாலும் ஒன்றுதான் என்று உணர்தல் வேண்டும்.

"திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே"

என்பது திருமந்திரம். எனவேதான் கூற்றை ஐந்தெழுத்துகள் உதைத்தன என்று சொல்லுகின்றார்.

ஞானசம்பந்தப் பெருமானுக்கு புறச் சடங்குகளில் நாட்டமில்லை என்று தெரிந்தது. என்றாலும் இந்தச்

சமுதாயம் இடைவிடாது இயங்கிக் கொண்டு இருக்கின் றது. பின்வரும் மரபினருக்கு அதையேனும் வைக்காவி டில் உய்ய வழியில்லாமல் போய்விடும். அந்தக் கார ணத்திற்காக உபநயனத்தை ஏற்றுக் கொள்கின்றார். அந் தப் பதிகத்தில் பாடல் ஒன்றில்

''மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன
செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுள் மந்திரம் அஞ்செ ழுத்துமே'' என்று எடுத்துக் காட்டுகிறார்.

அந்தணர்கள் வேத வேள்வியில் நம்பிக்கையுள்ள வர்கள். ஆனால் ஆண்டவன் மேல் நம்பிக்கை இல்லாத வர்கள். சிவாசாரியர்கள் ஆகம வழிபாட்டில் நம்பிக்கை உடையவர்கள்; இவர்களுக்கு ஆண்டவன் மேல் நம் பிக்கை உண்டு. ஆகம வழிபாடு இறைவனை நம்புதற்கு உரிய மார்க்கங்களைச் சொல்லுவது. வேத வழிபாடு வெறும் வேள்விகளை மட்டும் வளர்ப்பதாய், சிறு சிறு தெய்வங்களை வழிபடுவதாய் அமைந்தது. அந்தணர்க ளுக்கு - அதாவது வேத வேள்விகளை நம்புகின்றவர்க ளுக்கு, முழுமுதல் கடவுள் மேல் நம்பிக்கை கிடை யாது. முழுமுதல் வழிபாடும் கிடையாது. அதனால் அந்த வேள்வியை இந்த மண்ணில் உள்ள மக்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். அது பயன் தராது என்பது இந்த மண்ணில் உள்ளவர்களின் நம்பிக்கை.

தக்கன் செய்த வேள்வி ஏன் சிதைந்தது? வந்திருந்த தேவர்கள் எல்லாம் வேறு வேறு நிலை பெற்றிருந்த தால், அழிவுற்றார்கள். இறைவனை முதன்மையாகக் கொள்ளாத வேள்வியே தக்கன் செய்த வேள்வி. தேவர்க ளையும் சிறு தெய்வங்களையும் ஏற்றுக் கொண்டு, முழுமுதற் பொருளைப் புறக்கணித்துச் செய்த வேத

வேள்வி அது. அத்தகைய வேள்வியைச் செய்கின்ற யாரையும், இந்த மண்ணில் வாழ்கின்றவர்கள், ஆகம விதிப்படி வாழ்கின்றவர்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ஆனால் ஞானசம்பந்தர் காலம் எப்படியிருக்கின்றது? உண்மையை உணர்கின்றார் ஞானசம்பந்தர். இருக்கின்றவர்களுக்கு உண்மையை உணர்த்த எண்ணுகின்றார். அதனையும் அவர்களை மறுக்காமல் உணர்த்துகின்றார். இதற்கு இலக்கணத்தில் ஓர் உத்தியுண்டு. ஞானியாக இருந்தாலும் அவர்களும் அந்த உத்தியைத்தான் இயல்பாகக் கையாள்வார்கள். அது ''பிறர்தம் மதமேல் கொண்டு களைதல்'' என்பதாகும்.

மாறுபட்ட கருத்துடையவர்களாக இருப்பினும் அவர்களிடம், ''நல்ல காரியம் செய்கின்றீர்கள்; அக்கினி காரியம் என்பது மிகப்பெரிய காரியம்; என்றெல்லாம் பாராட்டிவிட்டு, இதற்கெல்லாம் மேலாக இருப்பது ஏக பரம்பொருளே'' என்று சொல்லித் தன்குறி வழக்கம் மிகையெடுத்து உரைப்பர்.

பிறர்தம் மதமேல் கொண்டு களைவே; பிறகு தன் குறி வழக்கம் மிகை எடுத்துரைப்பது என்று இலக்கணத்தில் உள்ள இரண்டு வழிமுறைகளையும் கடைப்பிடிக்கின்றார். இப்படி ஞானசம்பந்தப் பெருமான், தான் பிறந்த மரபுக்கு ஏற்ப அவர்தம் கொள்கைகளை ஒப்புக் கொள்வதுபோல் ஒப்புக் கொண்டு அஞ்செழுத்தைத் தவிர அதற்கு மேல் வேறு மந்திரமேயில்லை என்று உபதேசம் செய்கின்றார்.

காயத்திரியை ஏன் சொல்லிக் கொண்டிருக்கின்றீர்கள்? சந்தியா வந்தனம் ஏன் செய்கிறீர்கள்?

காலை, நண்பகல், மாலை என்ற மூன்று வேளைகளும் இறைவனைச் சந்திக்கும் நேரங்கள். வந்திப்பதற்கு உரிய நேரங்கள். சந்தித்து வந்திப்பதற்குச் சந்தியாவந்த

னம் என்பர். சந்தியா என்பது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் 'செய்து' என முடிந்தது. அந்தக் காலங்களில் நீங்கள் ஓத வேண்டிய மந்திரம் அஞ்செழுத்து. காயத்திரியன்று. அப்படியானால் காயத்திரி தாழ்வானதா? இல்லை அஞ்செழுத்தை ஓதாமல் போகின்றவர்கள் காயத்திரியையாவது ஓதட்டும் அல்லது வேறு ஏதேனும் மந்திரத்தையாவது ஓதட்டும் என்று கருணையால் சொல்லுகின்றார்.

காழிப்பெருமான் தந்த கருணையினால் வந்த கருணை வடிவமே நம்முடைய ஞானசம்பந்தப் பெருமான்.

வேதியர்கள் நான்மறையையும், பிறவற்றையும் நினைத்து, வெறும் தீக்காரியங்களைச் செய்து கொண்டு, காயத்திரி முதலான மந்திரங்களைச் சொல்லிக் கொண்டு கீழ் நிலையிலே நின்று விடுகின்றார்களே என்ற உள் உணர்ச்சி அவருக்கு வந்து, நாமிந்த மரபில் பிறந்தவன் என்பதனாலும், அருட்குழந்தை என்று அவர்கள் எல்லாம் நம்புகின்ற காரணத்தினாலும், இதைச் சொன்னால் அவர்கள் எடுத்துக் கொள்வார்கள் என்று, அவர்கள் மனம் நோகாமல், அவர்களைப் போகவும் சொல்லாமல், இருக்கச் செய்து, அவர்களுக்கு உபதேசமாகச் சொல்லுகின்றார். மந்திரம் நான்மறையாகி உங்களை ஆள்வது அஞ்செழுத்துதான் என்பதை உணர்த்துகின்றார். நீங்கள் வணங்குகின்ற வானவர் சிந்தையுள் நின்று அவர்களை வாழவைப்பதும் அஞ்செழுத்துதானே என்று உணர்த்துகின்றார்.

மந்திரம் நான்மறையாகி அவர்தமை ஆள்வன அஞ்செழுத்துமே என்றும்; வானவர் சிந்தையுள் நின்றவர் ஆள்வன அஞ்செழுத்துமே என்றும்; செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு அந்தியுள் மந்திரம் அஞ்

செழுத்துமே என்றும்; மூன்று முறை 'அஞ்செழுத்துமே' என்பதைக் கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும்.

இந்தக் கருத்து பொருந்துமா? இப்படிக் கொள்ள லாமா? என்றால் தவளை பாய்த்தன்ன சூத்திர நிலை எனும் இலக்கணப்படி இது பொருந்தும். தவளை இங்கே இருக்கும். அங்கே போய்க் குதிக்கும். அங்கேயி ருந்து இன்னோர் இடத்திற்குப் பாய்ந்து குதிக்கும். அப்படி ஒரு சொல் பல இடங்களில் தாவி நின்று பொருள் தருமானால் அதற்கு ''தவளைப் பாய்த்தன்ன சூத்திர நிலை'' என்று இலக்கணம் கூறும்.

இப்படி அனைவரையும் ஆள்வது அஞ்செழுத்து தான். வழிபாடு என்று ஒருவன் செய்ய ஆரம்பித்துவிட் டால், இந்த வழிபாட்டிற்கு உரிய பரம்பொருள் ஒரு வன்தான் என்பதை வற்புறுத்திவிட வேண்டும். அப்ப டிச் சொல்லிவிட்டால், அவர்கள் எல்லாம் வல்ல பரம் பொருள்தான் இந்த நான்மறை. காயத்திரி, எல்லாம் வல்ல பரம்பொருள்தான் சூத்திரம். எல்லாம் வல்ல பரம்பொருள்தான் இந்த ஐந்தெழுத்து என்று எல்லாமே ஒன்றுதான், ஒன்றுதான் என்று ஒன்றி நிற்கின்ற போது அந்த மரபினருக்கு அவர்கள் ஒன்றிய நிலையில் எழுந்த ருளி அருள்புரிவான். ''யாதொரு தெய்வம் கண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார்தாம் வரும்'' என்ற கருத்தை உன்னுக. எதையுமே பற்றாமல் சும்மா இருப்பதைவிட, ஏதேனும் ஒன்றைப் பற்றிக் கொண்டு நிற்பதால், அதுவே வழிகாட்டும். ஐந்தெ ழுத்தே வழிபாடாகட்டும் என்று சொல்லுகின்றார். எப் படியேனும் முழுமுதலை உணர்த்தி ஐந்தெழுத்தின் பெருமையை உணரச் செய்து, அவர்கள் உய்ய வேண்டு மென்று எண்ணுகின்றார். அந்த எண்ணத்தின் வெளிப் பாடுதான் 'துஞ்சலும்...' எனத் தொடங்கும் பதிகம்.

ஞானசம்பந்தப் பெருமான் உபநயனத்தை ஏற்றுக் கொள்கின்றார். ஒரு மடத்தில் தங்கியிருக்கின்றார். ஊர்ப் பெருமக்கள் எல்லாரும் வருகின்றார்கள். அவரைக் கண்டு மகிழ வேண்டுமென்றும், அவருடைய உபதேசத்தைக் கேட்டுப் பயன் பெற வேண்டும் என்றும் எண்ணிக் கொண்டு ஊர் மக்கள் வந்து கூடுகின்றார்கள். அவர்கள் இறைவன் திருப்பெயரைச் சொல்லி மங்கல ஒலிகள் எழுப்பினர். அந்தக் காலத்தில் இருந்திருந்தால் நம் உள்ளத்தில் என்னென்ன எண்ணங்கள் எழுந்திருக்குமோ தெரியாது. ஆனால், இவர்கள் எல்லாம் இப்படி வந்தது பார்த்தும், பேசியும், உபதேசம் பெற்றும் செல்லுகின்றார்கள். நம் குழந்தைக்கு இதனால் கண்ணேறு படுமோ என்று அவரைப் பெற்ற தாயுள்ளம் துடிக்கின்றது. இறைவனின் அருள் பெற்றுவிட்ட பிறகு அவரை எந்தக் கண்ணேறுதான் என்ன செய்யும்! இறைவன் அருள் அவரை விழுங்கி இருக்கின்றது. இருப்பினும் தாயுள்ளமல்லவா? அதனால் அவருக்குக் கண்ணேறு கழிக்கின்றார். கடவுளேகூடக் குழந்தையாக வந்து பிறந்துவிட்டால், 'இந்தக் குழந்தை இவ்வளவு அழகாக இருக்கின்றது; இதற்கு யார் கண்ணாவது பட்டுவிடுமோ' என்றுதான் தாயுள்ளம் நினைக்கும். அதற்குத்தான் 'தாய்மை' என்று பெயர்.

அந்த நேரத்தில் வயது மூப்பினாலும், அனுபவ மூப்பினாலும் சிறந்து நிற்கின்ற திருநாவுக்கரசு பெருமான், 'ஒப்பிலா அருளைப் பெற்றுத் தப்பிலா நெறியில் வாழ்ந்து செல்கின்றார் ஞானசம்பந்தர்' என்று கேள்விப் படுகின்றார். உடனே அவரைப் பார்த்துவிட வேண்டும், தரிசிக்க வேண்டுமென்று சீர்காழியை நோக்கி வேகமாக வருகின்றார்.

இதற்கு முன் வேறொரு கருத்தைச் சொல்ல வேண்டும். ''மந்திர நான்மறையாகி...'' என்ற பதிகத்தைப்

பாடியபின், அந்தணர் குலத்தைச் சார்ந்தவர்கள், உற்றார் உறவினர்கள், இவன் சின்னப் பிள்ளை, இவன் ஏதோ சொல்லுகின்றான்'' என்று எண்ணிவிடப் போகின்றார் கள் என்று எண்ணினார் போலத் தெரிகின்றது. எனவே கடைசிப் பாடலில், அதில் தன்னை யார் என்று அறிமு கப்படுத்திக் கொள்கின்றார். இப்போது நான் ஏதாவது சொன்னால் இவருக்கு வேதங்களைப் பற்றி ஏதாவது தெரியுமா? என்ற கேள்வி கேட்கின்றார்கள் இல் லையா? அப்படியே அப்போதும் ஐயம் எழுந்திருக்க வேண்டும். சம்பந்தரோ மூன்று வயதுக் குழந்தை. வேதங்கள் எல்லாவற்றைவிடப் பெரியது; வேத மந்தி ரங்களைவிடச் சிறந்தது; ஐந்தெழுத்துதான் என்று சொல் லுவாரேயானால் இவனுக்கு என்ன தெரியும் என்று ஐயப்பட்டிருப்பார்கள். அந்த ஐயங்களைத் தீர்க்க

''நற்றமிழ் ஞானசம் பந்தன் நான்மறை
கற்றவன் காழியர் மன்னன் உன்னிய
அற்றமில் மாலையீ ரைந்தும் அஞ்செழுத்
துற்றன வல்லவர் உம்ப ராவரே''என்று கூறுவது
சிந்திக்கத் தக்கது.

இவையாவும் ஒரு மனிதனுக்குத் தேவையான துணிவு. ஒரு கருத்தைச் சொல்ல வருகின்றபோது வழவழ, கொழகொழ என்று சொல்லாமல் உறுதியாகச் சொல்ல வேண்டும்.

நற்றமிழ் ஞானசம்பந்தன், நான்மறைகளைக் கற்ற வன், காழியர் மன்னன், உன்னிய (சிந்தித்துச் சொன்ன) அற்றமில் (குற்றமில்லாத) மாலை ஐந்தெழுத்துக்குச் சமம். அது மட்டுமன்று, இந்தப் பாமாலையை நீங்கள் பாடினால் ஐந்தெழுத்தை ஓதியதற்குச் சமம் என்று சொல்லுகின்றார். இதனைச் சொன்னால் சொன்னவர் வானவருக்கும் மேம்பட்டவராவார்கள். இந்தப் பதிகத்

தைப் பாடுவதனால் சாதாரண மக்களும் மேம்பட்ட நிலைக்குப் போய்விடுவார்கள் என்பது திண்ணம். மேலோர்க்கும், மேலோர்க்கும், மேலோர்க்கும் மேலாய் போற்றி'' என்பது போன்றது. மேலானவர்க்கு மேலானவர்களாகலாம் எனத் தெரிகின்றது.

இதிலிருந்து, ஞானசம்பந்தர் நான்மறை கற்றவர் என்று தெரிகின்றது. அவர் குழந்தையாயிற்றே, அவர் எப்படிக் கற்றிருக்க முடியும்; ஏதோ சும்மா சொல்லி வைத்திருக்கின்றார் என்று எண்ணம் வரலாம். அப்படி யில்லை. இறைவன் திருவருள் வாய்க்கப் பெற்றவர்கள். நினைத்தால் அவர்கள் உள்ளத்தில் மறைகள் தோன்றி வெளிப்பட்டுவிடும். ஞானியர்க்கு இவையெல்லாம் தானே விளங்கிவிடும். அதனால் அவர் வயதைக் குறித்து ஐயப்பட்டுக் கொண்டிருக்கக் கூடாது. அப்படிப் பார்த்தால் எல்லாமே ஐயத்துக்குரியதாகி விடும். இறை வன் திருவருள் கைவரப் பெற்றவர்களுக்கு நூல்களைச் சிந்தையில் நினைக்கின்ற போதே எளிதாய் வெளிப்பட் டுவிடும். எனவே கற்றவர் என்பது அவர்களுக்கு (மறை யவர்களுக்கு) வந்த ஐயத்தைப் போக்கி உபதேசம் செய்து வைக்கின்றார். இது மறையவர்களுக்குச் செய்த உபதேசப் பதிகமாகத் தெரிகின்றது. நமக்கும் இதுவே உபதேசம் எனக் கொள்ள வேண்டும்.

அப்பர் சுவாமிகள் திருஞானசம்பந்தரைப் பார்க்க வருகின்றார். அவருடைய தோற்றம் எப்படியிருக்கின்ற தென்று சொல்லுகின்றார். நாவுக்கரசர் வயதால் நிரம்பி யவர். ஞானசம்பந்தர் வயதில் சிறியவர். அவர் சமணத் திற்குச் சென்று திரும்பியவர். இவர் சமணத்தைக் கண் டிக்க வந்தவர். இரண்டுபேரும் சந்திக்கின்ற நேரம் வந்தது. அருட்குழந்தை இது எனக் கேள்விப்பட்டவர் ஆராச் சிந்தையால் ஓடி வருகின்றார்; அன்புமீதூர ஓடி வருகின்றார். அப்பர் பெருமான் வருகிறார் என்ற செய்

தியைக் கேள்விப்பட்டவுடன் அவரை எதிர் கொண்ட ழைக்க இவர் போகின்றார். ''என்னைப் பார்க்க வரு கின்றாரா? வரட்டும்'' என்று அமர்ந்து கொண்டிருக்க வில்லை. அவரைத் தேடி இவர் ஓடுகின்றார். ஞானியர் தங்களை எப்போதுமே ஒரு பொருளாகக் கருதிக் கொள் ளமாட்டார்கள். அடியவர் கோலத்தைக் கண்டால் எழுந் துசென்று விழுந்து வணங்குவர். பெரிய புராணத்தில் பல இடங்களில் இப்படிப்பட்ட செய்திகள் வரும். உவர்மண் சுமந்துகொண்டு வருகிற வண்ணான்மேல் அந்த உவர் மண் தண்ணீர்பட்டுக் கரைந்து வெண்ணீறு பூசியதுபோல இருக்கக் கண்ட சேரமான் பெருமாள் நாயனார், யானை மேலிருந்து இறங்கி அவன் திருவடி யில் வீழ்ந்து வணங்கினார். 'ஐயா, நான் அடிவண் ணான்' என்று அவர் சொல்ல, இவர், 'அடி, சேரன்' என்று சொல்லி மீண்டும் வீழ்ந்து வணங்கினார். அவர் பயந்து ஒதுங்கி நிற்க, 'ஐயா, ஏன் இப்படிச் செய்தீர்கள்' என்று மற்றவர் கேட்க, 'அவர் மேல் திருநீற்றின் ஒளி வீசுகின்றது, அவரை அடியார் என்று கண்டேன், விழுந்து வணங்கினேன்' என்கின்றார், சேரமான் பெரு மாள். வெண்ணீற்றின் பெருமையை உணர்த்தியதால் வணங்கினேன் என்கின்றார். அடியார்களைக் கண்ட அளவிலே அவர்களை எதிர்கொண்டு வணங்குவது அடியார்களின் இயல்பு. அதிலே ஞானியர்க்குப் பேதம் இல்லை. அடியார் கோலத்தை, ஆண்டவனாகவே கருது வர். நாவுக்கரசு பெருமான் எப்படி வந்தார் என்பதைச் சேக்கிழார் பெருமான் சொல்லுவார்.

சைவ உலகிற்கு இது ஒரு முக்கியமான செய்தி. 'சிந்தை இடையறா அன்பும்...'' என்று சொல்லுவார். அவருக்கு அன்பு, சிந்தையில் இடையறாது இருந்த தாம். இடையில் விட்டுப் போனால், விட்டுப் போனது தானே. ஒரு சிறு உதாரணம் சொல்லுகிறேன். தலைவன்

வெளியே சென்று திரும்பி வந்தான். வந்தவன் தலைவி யிடம், 'போன இடத்தில் உன்னை நினைத்துக் கொண் டேன் என்றான். தலைவி 'ஓ என்று அழ ஆரம்பித்துவிட் டாள். மயங்கிக் கீழே வீழ்ந்தாள். மயக்கம் தெளிந்து எழுந்தபின், ஏன் இப்படியாயிற்று என்று கேட்கின் றான். அழுது கொண்டே சொல்லுகின்றாள்: 'நீ நினைத் துக் கொண்டேன் என்று சொன்னாயல்லவா? என்னை மறந்துவிட்டதால் தானே நினைத்துக் கொள்ள வேண்டி தாயிற்று' என்று சொல்லி மீண்டும் அழுதாளாம். மறப்ப தற்கு இடமேயில்லாமல் இடையறாது நினைத்துக் கொண்டேயிருக்க வேண்டும். அதற்குத்தான் இடைய றாது நினைத்தல் என்று பொருள். இடையறாது நினைப் பிருந்தால் மறத்தல் என்ற சொல்லுக்கே இடமில்லை.

அதேபோலத்தான் நாவுக்கரசு பெருமானும் இடை யீடின்றி ஆண்டவனை நினைத்துக் கொண்டிருந்தாராம். அடுத்து அவர் தோற்றத்தைப் பற்றிச் சொல்லுகின்றார்.

கந்தையும் மிகையாம் - உடுத்தியிருக்கின்ற துணியே அதிகம் என்ற எண்ணத்தோடு உடுத்திக் கொண்டிருக்கின்றாராம். திருமேனியின் மேலே ஒரு துண்டு, கீழே ஒரு துண்டு என உடுத்தியிருக்கின்றாராம். துணிப் பஞ்சமா என்ன? இல்லை. 'உண்பது நாழி உடுப்பவை இரண்டே' என்ற புறநானூற்று வரிகட் கேற்ப அதுவே போதும் என எண்ணி உடுத்திக் கொண் டிருந்தாராம்.

கையிலே உழவாரப்படை வைத்துக் கொண்டிருந் தாராம். தொண்டின் நிலைக்கு அது ஓர் எடுத்துக்காட்டு. கோயிலில் புல் பூண்டுகள், முட்செடிகள் முளைத்திருக் கும். அதைச் செதுக்குவதற்காக உழவாரப்படை வைத்தி ருந்தாராம். அன்றைக்கு அது தொண்டு. இன்றைக்கு அது விளம்பரம். அசுத்தமாக வாழ்கின்ற, கீழ் நிலையில்

உள்ள மக்களைத் தூய்மையாக வைத்திருக்க உழைத்தால் அதுவே தொண்டு. ஏன் அப்படி சொல்லுகின்றேன் என்றால், அவர்கள் தூய்மையாக இருந்தால் கோயில், குளம் மற்றும் பொது இடங்களைத் தூய்மைக் கேடு அடையச் செய்ய மாட்டார்கள்.

வந்திழி கண்ணீர் மழையும் - இறைவனை சதா காலமும் எண்ணி, அவனது கருணையை எண்ணி எண்ணி, எந்நேரமும் அப்பர் பெருமானின் கண்களில் நீர் ததும்பிக் கொண்டேயிருக்கின்றதாம்.

வடிவில் பொலி திருநீறும் - உடம்பெல்லாம் திருநீறு பூசிக் கொண்டிருக்கின்ற அழகு மிகப்பெரும் பேரழகு. அந்த அழகுக்கு முடிவே சொல்ல முடியாது. அந்தம் - அழகு, முடிவு என்று பொருள். இப்படி அவருடைய தோற்றப் பொலிவினைப் பற்றி எழிலுறச் சேக்கிழார் விளக்குகின்றார்.

இளமையும் முதுமையும் ஒன்றையொன்று நேர் கொண்டன. இப்போது யார் முன்னே விழுந்து வணங்குவது? இவர் அவரை வணங்க, அவர் இவரை வணங்குகின்றார். இவர் பெரியவர் என்று அவர் எண்ணவில்லை; அவர் சின்னஞ்சிறு குழந்தை என்று இவர் எண்ணவில்லை. ஒருசேர விழுந்து வணங்கினார்கள். யார் முன்னே விழுந்து வணங்கினார்கள் என்றே தெரியவில்லை. இதுதான் அடியவர்களின் சிறப்பு.

அப்பரைப் போல 81 வயதில் இராமநாத ஐயா அவர்கள் உலகினை விட்டு மறைந்தார்கள். அவரைத் தெருவில் எந்தக் குழந்தை பார்த்து தாத்தா என்றாலும் அவர்களை வணங்கிக் கொண்டே, சிரித்துக் கொண்டே போவார். இடையறாது இறைச் சிந்தனை உடையவர். திருமுறைகளில் தோய்ந்தவர். நூல்கள் பலவற்றுக்கு வளமான உரை கண்டவர். பலநூறு மாணாக்கர்களுக்

குப் போதனை செய்தவர். அவரை 'நடமாடும் திருக் கோயிலாகக் கருதியவர்கள் பலர். இவ்வளவு உயர்ந்த நிலைக்கு உயர்ந்தவர் சின்னக் குழந்தைகளை வணங்கி சிவசிவா என்று சொல்வாரேயானால் அது சாதாரண மான காரியம் இல்லை. சிலரைப் பார்த்து வணங்கி னால் இடது கையால் 'டாட்டா' காட்டுகின்றார்கள். வலது கையால் வணங்கினால் ஆகாதா? அல்லது இரண்டு கரங்களையும் கூப்பி வணங்கினால் இவர்க ளது சொத்து ஏதாகினும் பறிபோய்விடுமா? ஒன்றும் போகாது. அப்படி நம்மை மதியாதவர்களைப் போய்ப் பார்த்து மதிக்கின்ற புத்திதான் நமக்கு இருக்கின்றதே தவிர, நமது பெரியவர்களைக் கண்டு அவர்களது ஆசி பெற வேண்டுமென்றோ, நாயன்மார்களை வணங்க வேண்டுமென்றோ உணர்ச்சியில்லாத மக்களாக நாம் இருந்து கொண்டிருக்கின்றோம்.

"சிந்தை இடையறா அன்பும் திருமேனி தன்னில்
அசைவும்
கந்தை மிகையாங் கருத்தும் கைஉழ வாரப் படையும்
வந்திழி கண்ணீர் மழையும் வடிவிற் பொலிதிரு நீறும்
அந்தமி லாத்திரு வேடத் தரசும் எதிர்வந் தணைய!

இது காழ்ப்புணர்ச்சியால் சொல்லப்படுவதென்று கொள்ளக் கூடாது. நாம் வணங்கினால் அவர்கள் எதிர் வணங்கி மகிழ வேண்டும். அவர்கள் வணங்கினால் நாம் வணங்க வேண்டும். ஆனால் அவர்கள் வணங்குவ தற்கு முன்பே நாம் வணங்கிவிட வேண்டும். முதலில் நமது வணக்கம் இருக்க வேண்டும். அவர்கள் பெரியவர் களோ, சின்னவர்களோ அதைப் பற்றி கவலைப்படக் கூடாது. யாரையும் சிறியவர்கள் என்று எண்ணாதீர்கள். பார்க்கின்ற இடத்தில் எல்லாம் இறைவனது திருமேனி யாக எண்ணி வணங்கினால் எந்தப் பிழையும் வராது. அப்படித்தான் அப்பரும், திருஞானசம்பந்தரும் ஒருவ

ருக்கொருவர் வணங்கிக் கொண்டனர். சிவஞானியர் எப்போதும் அடியாரைச் சிவமாகவே கருதுவர். அப்ப ரைப் பார்த்ததுமே சிவமாகக் கருதுகிறார் திருஞானசம் பந்தர். சம்பந்தரைப் பார்த்தவுடனே சிவமாகக் கருதுகி றார் அப்பர். அன்பினால் இருவரும் ஒருவருக்கொருவர் வணங்கிக் கொள்கின்றனர்.

இருவரும் ஒருவர்மீது ஒருவர் அன்பு பாராட்டிக் கொண்டு ஆங்காங்குள்ள திருக்கோயில்களுக்குச் செல் கின்றனர். அங்கங்கே உள்ள மக்களுக்கு நல்ல வழியைக் காட்டுகின்றனர். இதெல்லாம் பணி.



## 3. நோய் நீக்குதல்

திருப்பாச்சிலாச்சிராமம் என்ற பதிக்குச் செல்கின் றார். அந்தப் பகுதியைக் கொல்லிமழவன் என்ற அரசன் ஆண்டு கொண்டிருந்தான். அவனுக்கு ஒரு பெண். அந்தப் பெண்ணுக்கு முயலகன் என்ற நோய் பற்றியிருந் தது. அரசனுக்குத் தெரியாத மருத்துவர்களா? மாந்திரீகர் களா? சமணர்கள் மருத்துவத்திலும், மாந்திரீகத்திலும் சிறந்து விளங்கியவர்கள். அதைவைத்துதான் அவ்வப் போது அவர்கள் அரசர்களிடத்தில் இடம்பிடித்தார்கள். சமணர்களும், மற்றவர்களும் அரசன் மகளுக்கு மருத்து வம் பார்த்தார்கள். எதனாலும் அந்த நோய் தீரவில்லை. நோய் தீரா நிலையில், தன் மகளை அழைத்து வந்து திருப்பாச்சிலாச்சிராமக் கோயிலின் வெளிப் பிரகாரத் தில் விட்டுவிட்டு, "இறைவா! நீ தான் இந்தக் குழந் தைக்குப் பாதுகாப்பு செய்ய வேண்டும்" என்று வேண் டிக் கொள்கின்றான். இந்தக் குழந்தைக்கு நோய் தீராமல் நான் வீட்டிற்கு மீள மாட்டேன் என்று உறுதியாக இருந்தான். எவ்வளவு பெரிய நம்பிக்கை. எல்லாம்

பார்த்த பின்னர்தான் இந்த நம்பிக்கை வருகின்றது. நமக்கு முழு நம்பிக்கை என்றைக்கு வருகின்றதோ அன்றைக்குத்தான் ஆண்டவன் நம்பக்கத்தில் திரும்பு கின்றான். சிறிது சலனம் இருந்தால்கூட நம்மிடத்தில் கருணையைத் திருப்புவது இல்லை. இதற்கு எத்தனையோ சான்றுகள் சொல்லலாம்.

ஆண்டவன் நம்மை ஏற்றுக் கொள்ள வேண்டு மென்றால் நாம் நம்மை முழுமையாக அவனிடம் ஒப்ப டைத்துவிட வேண்டும். ஆழ்வார்கள் கதையிலும் இப் படி ஒரு நிகழ்ச்சி. அடியார் ஒருவர் ஒருவனிடம் அடிபட்டுக் கொண்டிருந்தார். கோவிந்தா, கோவிந்தா என்று இறைவனை அழைத்துக் கொண்டிருந்தார். திரு மால் எழுந்து ஓடிவருகின்றார். பாதி தூரம் வந்தவர் திரும்பவும் சென்று படுத்துக் கொண்டார். ''பெரு மானே! சென்றவர் ஏன் திரும்பி வந்துவிட்டீர்கள்'' என்று கேட்கின்றாள் திருமகள். ''அடியார் ஒருவர் அடி வாங்கிக் கொண்டே என்னை அழைத்தார். அவருக்கு உதவி செய்யலாம் என்று எண்ணி நான் கிளம்பினேன். பாதி தூரம் செல்வதற்குள் அவர் என்னை நம்பாமல் பக்கத்தில் கிடந்த கல்லை நம்பி அதை எடுத்துக் கொண் டார். இனிமேல் அவரே பார்த்துக் கொள்வார், எனக்கு அங்கே வேலையில்லை, என்று திரும்பிவிட்டேன்'' என்றாராம்.

இந்த நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டது, முழுமை யான நம்பிக்கை நம்மிடத்தே வரவேண்டும் என்பதை வற்புறுத்தவே.

அப்படித்தான் அரசனும் தன் மகளைப் பலரும் வந்து பார்த்து மருத்துவம், மாந்திரீகம் முதலானவை செய்தும் சரியாகாததால் திருக்கோயிலில் கொண்டு வந்து விட்டுவிட்டுப் போய்விட்டான். திருஞானசம்பந்

தர் வருகையை அறிந்து நாட்டையும் வீட்டையும் அலங்கரித்து அவரை எதிர்கொண்டழைத்தான். பின்னர் பெருமான் திருக்கோயிலுக்கு எழுந்தருளினார். அங்கே அரசன் மகள் உயிரற்ற உடல்போல் கிடப்பதைக் காண் கின்றார். அவர் உள்ளம் வருந்துகின்றது. உயிர்கள் தீவினைகள் செய்ததால் நோய்வாய்ப்பட்டுத் துன்பப்ப டலாம் என்று அவர் விட்டு விடவில்லை.

அந்தக் குழந்தையின் தலைவிதி அது. அதனால் அது துன்பப்படுகின்றதென்று எண்ணிப் பேசாமல் போகவில்லை அவர். நாமும் நம் வாழ்வில் பிறர் துன்பத்தைப் பார்த்துவிட்டு, அவரவர் தலைவிதி என்று எண்ணிப் போய்விடக் கூடாது. நம்மால் முடிந்த உபா யங்களைக் கைக்கொண்டு அவர்கள் துன்பத்தைத் தவிர்க்க முனைதல் வேண்டும். அவர்கள் செய்த பாவம் அவர்களை ஒதுக்கலாம். ஆனால் நாமும் சேர்ந்து ஒதுக் கக் கூடாது. வினையின் தன்மை, இறைவனது ஆணை வழி நடக்கின்றது. உபகாரமாக இருப்பது என்றால் பாதகம் செய்வார்க்கு உறுதுணையாக இருப்பதன்று. பாதகத்தால் துன்பம் வந்தபோது என்ன உதவி நம்மால் செய்ய முடியுமோ அதனைச் செய்ய வேண்டும்.

ஒரு குற்றவாளி. அவனுக்கு அரசாங்கம் தண்டனை கொடுக்கின்றது. சிறையில் அடைத்துக் கடுமையாக வேலை வாங்குகின்றார்கள். ஆனாலும் பசிக்கு உணவு கொடுத்தும், நோய்க்கு மருந்து கொடுத்தும், குளிருக்கு ஆடை கொடுத்தும் அவனைக் காக்கின்றது. இது அர சின் கடமை. அரசு, அவன் செய்த குற்றங்களுக்குத் தண்டனையும் வழங்கி மனிதன் என்ற முறையில் பரிவும் காட்டுகின்றது. இந்த இரண்டும் இறைவனின் கருணையால் உடன் நிகழ்ச்சியாக நடந்து கொண்டிருக் கும். எந்த அளவுக்கு நம்மால் உபகாரமாக இருக்க முடியுமோ அந்த அளவுக்கு உபகாரத்தைச் செய்ய

வேண்டும். அப்படிச் செய்வதால் இவர்களுக்கு எந்தப் பாவமும் வராது. அப்படியே வந்தாலும் வரட்டும். அப்படியே வந்தாலும் நமக்குப் பெரிய கேடு எதுவும் வராது. நல்ல காரியத்தைச் செய்தோம் என்ற மனநிறைவு உள்ளத்தில் இருக்கும். கேடு வருவதுபோல் இருந்தாலும் அது உண்மையிலேயே வந்துவிடாது. நன்மையே விளையும் என்பது திண்ணம்.

அரசன் மகள் நோயினால் மிகவும் வருந்தி, உயிரற்ற உடல்போல் கிடக்கிறாள். ஞானசம்பந்தப் பெருமான் அவளைப் பார்த்துவிட்டு அப்படியே தன் வழியில் போய் விடவில்லை. ''இந்தப் பெண் யார்? இவளுக்கு இந்த நோய் எப்படி வந்துற்றது? என்றெல்லாம் கேட்கின்றார். அப்போது அரசன், ''அவள் தன் மகள் என்றும், அவளுக்கு 'முயலகன்' என்ற நோய் வந்துற்றது என்றும், பலவிதமான மருத்துவம், மாந்திரீகம் முதலானவை செய்தும் அவளுக்குக் குணமாகாததால் அவளைத் திருக்கோயிலில் கொண்டு போட்டுவிட்டு, இனி பெருமானே கதி என்று விட்டுவிட்டேன்'' என்றும் சொல்லுகின்றான்.

சிவவேடம் தரித்தும், சிவனடியார்களை ஆதரித்தும் வாழ்பவன் அவ்வரசன். ஞானசம்பந்தப்பெருமான் வருகிறார் என்றதும் வீதிகளையும், நகரங்களையும் அலங்கரிக்கச் செய்து அவரை வரவேற்றவன். இப்படிப்பட்ட பக்தியுடையவனது மகளுக்கு இத்தகு நோய் வரவேண்டுமா என்று எண்ணி மனம் உருகி, இறைவனைப் பாடித் துதிக்கின்றார். பதிகம் முடிந்தவுடனே அந்தப் பெண் எந்தவிதமான நோயும் இருந்ததற்கு அடையாளமேயின்றி, நலமடைந்து, தன் தந்தையின் பக்கத்தில் சென்று நிற்கின்றாள். தந்தை வணங்க, தானும் வணங்கித் திருஞானசம்பந்தரின் ஆசியினைப் பெற்றார்கள்.

அவர் பாடிய பதிகம் என்ன? அதில் அவர் என்ன கேட்டுக் கொண்டார்? இந்தக் குழந்தையின் நோய் நீங்கி நலமுற வேண்டுமென்று கேட்டுக் கொண்டாரா?

"துணிவளர் திங்கள் துளங்கி விளங்கச்
சுடர்ச்சடை சுற்றிமு டித்துப்
பணிவளர் கொள்கையர் பாரிடஞ் சூழ
வாரிட மும்பலி தேர்வர்
அணிவளர் கோலமெ லாஞ்செய்து பாச்சி
லாச்சிரா மத்துறை கின்ற
மணிவளர் கண்டரோ மங்கையை வாட
மயல்செய்வ தோஇவர் மாண்பே.

கண்டவர் மயங்கும் அழகுடன் விளங்குகின்றீர், அழகாக இருப்பதற்குப் பிச்சையும் எடுத்து அழகு செய்து கொண்டீர். ஆனால் இந்தக் குழந்தை இப்படி வாடிப் போய் இருக்கின்றதே, இதைச் சற்றேனும் கண்ணெடுத்துப் பார்க்கக் - கூடாதா? இது உமக்கு மாண்பா? என்று சிறிது கோபப்பட்டுக் கேட்பதுபோல இருக்கின்றது.

இந்தப் பாட்டில் இரண்டு வகைகளாகப் பிரித்துப் பொருள் கொள்ள வேண்டும். துணிவளர் - துணி என்றால் துண்டிக்கப்பட்ட நிலவை வளருமாறு செய்வதற்காகத் தலைமேல் எடுத்து வைத்துக் கொண்டீர். அது நியாயம். அந்த நிலவு விளங்க வேண்டும் என்பதற்காக, உங்கள் சடை முடியைச் சுற்றி முடித்து அதன்மேல் வைத்துக் கொண்டீர். அவன் பெரிய பாதகத்தைச் செய்தவன். அதற்கு தண்டனையாகத் துண்டிக்கப்பட்டான். அவனுக்கு வாழ்வு கொடுக்க வேண்டும் என்பதற்காக அவனைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டீர். அதில் தவறேதும் இல்லை என்று சுட்டிக் காட்டுகின்றார். குற்றம் செய்ததையும் குணமாகக் கொண்டு நலம் செய்த பெருமானல்லவா என்று சொல்ல வேண்டும். அதை இந்த வரியினால் சுட்டிக் காட்டுகின்றார்.

அடுத்து, 'பணிவளர் கொள்கையர்' என்கிறார். உயிர்களைக் காப்பதுதான் என் பணி. அதுவே என் கொள்கை என்கின்றாய். சூழவாரிடமும் என்ற சொல்லை சூழ+வருபவரிடமும் என்றும் சூழ+ஆரிடமும் என்றும் இரண்டாகப் பிரிக்கலாம். உன்னைச் சூழ்வாரிடமும் பிச்சைக் கேட்கின்றாய்; உன்னைச் சூழாதவரிடமும் பிச்சை கேட்கின்றாய். பிச்சை எடுத்து வாழ்கின்ற நீ இவ்வளவு அலங்காரம் செய்து கொண்டிருக்கின்றாய். ஆனால் இவளோ அரசன் மகள்; இவள் வாடிக் கிடக்கின்றாள். இவளை வாட விடலாமா? என்று கேட்பது போல அமைந்திருக்கின்றது. நஞ்சை அமுதாக்கிக் கண்டத்தில் வைத்து ஒளிபெறச் செய்து அலங்காரமாக்கிக் கொண்டிருக்கின்றீர். இந்தப் பெண்ணை வாடவிடலாமா? என்று கேட்கின்றார்.

இந்தப் பாடலில், குற்றம் செய்த சந்திரனை வாட விடாமல் தன் சடை முடிமேல் வைத்துத் தனக்கு அணியாகக் கொண்டார் எனவும், தன்னைச் சேர்வாரிடமும், சேராதாரிடமும் சென்று பிச்சை எடுத்து வாழ்கின்றவர் அலங்காரமாக வாழ்கின்றார் எனவும், நஞ்சை அமுதாக்கிக் கொண்டு தன் கண்டத்தில் வைத்து அதனை ஒளிபெறச் செய்து அதையும் ஒரு அணிபோல் ஆக்கிக் கொண்டுள்ளார் என்றும் மூன்று கருத்துக்களைச் சொல்லுகின்றார். இவ்வளவு சிறப்பும் பெற்றிருக்கின்ற நீர், கருணை உள்ளங் கொண்ட நீர், இந்தப் பெண்ணை வாட விடலாமா? இதுதான் உமது மாண்பா? என்றும் கேட்கின்றார். ஓர் அடியவர் வந்து இவ்வளவு தூரம் கேட்ட பிறகும் அருள் செய்யாமல் இருப்பது ஆண்டவனுக்கு பெருமையன்று! அதுவும் தன்னருள் பெற்ற அடிய்வன் கேட்ட பின்னரும் அவன் கேட்டதைச் செய்யாவிட்டால் பெருமையன்று.

உங்களில் ஒருவருக்கு நான் அன்பனாகி விடுகின்றேன். அல்லது நீங்கள் யாராவது என்னிடத்தில் அன்பராக இருக்கின்றீர்கள். இப்போது உங்களால் எமக்கோ, அன்றி எங்களால் உமக்கோ ஒரு காரியம் ஆக வேண்டுமென்றால் நீங்களோ அன்றி நானோ அந்தக் காரியம் எங்கே யாரால் எப்படி நடைபெற வேண்டுமோ, அப்படி அதை உடனிருந்து நிறைவேற்றிக் கொடுக்க வேண்டுமல்லவா? அதனால் இறைவன் நிறைவேற்றினான்.



## 4. சிவிகை பெறுதல்

திருக்கோலக்காவில் வந்து பாடுகின்ற போது பொற்றாளம் கொடுத்தான் இறைவன். திருஅறத்துறையில் வந்து பாடினார். சிவிகை கொடுத்தான் இறைவன். ஞானியர் எதையும் இறைவனிடத்தில் கேட்க மாட்டார்கள். அவனே கொடுப்பான். திருஅறத்துறையில் ஞானசம்பந்தர் வந்தார் என்றதும் அவர்தம் துன்பத்தைக் கண்டு சிவிகை கொடுத்தான். திருக்கோலக்காவில் கையால் தாளம் போட்டுப் பாடும் போது கை சிவந்ததால் அத்துன்பத்தைத் தாங்கமாட்டாது, பொற்றாளம் கொடுத்தான். நாமெல்லாம் எந்தவகையான துன்பப்பட்டாலும் ஏதும் கொடுக்க மாட்டான். ஏன்? நாம் அவன் அருளைப் பெறவில்லை. எனவே நாம் முதலில் அவன் அருளைப் பெற அவனை வேண்டவேண்டும். ஞானசம்பந்தப் பெருமான் அவன் அருளைப் பெற்ற பின்னர் தான் தொண்டையே தன் வாழ்வின் குறிக்கோளாய் ஏற்றுக் கொண்டார்.

தொண்டியற்றுவதற்கும், நெறி காட்டுவதற்கும் அருள் பெற்றவர்களாக இருத்தல் வேண்டும்.

பல்லக்கைக் கொடுத்ததும் 'என்னுடைய தகுதியி னால் இறைவன் இதனைக் கொடுத்தான்' என்று அவர் மகிழ்ந்துவிடவில்லை. கூனிக்குறுகி நிற்கின்றார். இறை வன் கருணையை வியந்து நிற்கின்றார். இந்தப் பல்லக் கில் விரைந்து சென்று, உலக மக்கள் உய்ய நெறிகாட்ட வேண்டுமென்பதற்காகக் கொடுத்திருக்கின்றான் என்று உணர்ந்து, அந்தப் பல்லக்கை மூன்று முறை வலம் வந்தார். ஐந்தெழுத்தைச் சொல்லி, 'உலகம் உய்ய...'' என்று பாடினார். பல்லக்கில் ஏறினார்.

அங்கிருந்து பல திருக்கோயில்களை வழிபட்டுக் கொண்டும், ஆங்காங்கே இருக்கின்ற மக்களெல்லாம் உய்ய வேண்டுமென்ற கருணையினாலும் பாடிப் பர விக் கொண்டே பல பகுதிகளுக்குச் செல்கின்றார். யாருக்கு நெறி சொல்ல வேண்டும், யாருக்கு உதவி செய்ய வேண்டும், யார் யாருக்கு என்னென்ன செய்ய வேண்டுமோ அவற்றையெல்லாம் செய்து கொண்டே போகின்றார்.

அடுத்து, கொடிமாடச் செங்குன்றம் (இப்போது அதற்குத் திருச்செங்கோடு என்று பெயர்) என்னும் திருப்பதிக்குச் செல்கின்றார். அங்கே ஓர் அற்புதம் நடந்தது. இவ்வளவு நாத்திகம் பேசிக் கொண்டிருக் கின்ற காலத்திலும், இன்றும் அற்புதம் ஒன்று நிகழ்ந்து கொண்டிருக்கின்றது. அர்த்தநாரீச்சுரர் திருக்கோலம் அந் தக் கோயிலில்தான் இருக்கின்றது. அதில் ஏதும் ஆச்சரிய மில்லை. அற்புதம் என்னவெனில் இறைவனின் திருப் பாதங்களில் நீர் சுரந்து கொண்டேயிருக்கின்றது. நீரை இறைத்து விட்டால் மீண்டும் சுரந்துவிடும். அது மலை மேல் இருக்கின்ற கோயில். அங்கே இன்றளவும் அவ் வற்புதம் நடந்து கொண்டிருக்கின்றது. இறைவன் கருணை வடிவமாக இருக்கின்றான் என்பதை இது காட்டுகின்றது. அந்தத் திருத்தலத்தில் சில நாள்கள்

தங்கிப் பதிகங்கள் பாடித் துதித்தும், அங்கிருந்த மக்களுக்கு நெறிகளைப் போதித்தும் வந்தார்.

திருஞானசம்பந்தர் அங்கே சென்ற காலம் மழைக் காலம். அடைமழை பெய்தது. சில நாட்களில் மழை நீங்கி எங்கும் கடுமையான பனி பெய்தது, நச்சுக் காய்ச்சல் பரவி, அந்த ஊர் மக்களும், இவரோடு வந்த அடியார் கூட்டமும் அவதிப்படுகின்றார்கள். அப்போது வந்த அடியவர் கூட்டம் ஞானசம்பந்தரை அணுகி, 'பெருமானே எங்களுக்கெல்லாம் நச்சுக் காய்ச்சல் பரவி அவதிப்பட்டுக் கொண்டிருக்கின்றோம்' என்றார்கள். அவர்களுக்குக் காய்ச்சல் இருக்கின்றது என்று ஞானசம்பந்தருக்குத் தெரியாதா என்ன? தெரியும். ஆனால் அவர்களது வேண்டுதல் இன்றி எதையும் செய்யக் கூடாது என்பதால் மௌனமாக இருந்தார். கேட்பது என்பது ஓர் உழைப்பு. உழைப்பில்லாமல் ஊதியம் தரக்கூடாது.

பனிக்காலத்தில் காய்ச்சல் வந்தால் உடல்நலம் குறையாத அளவுக்கு விரதம் இருக்க வேண்டும். காலையில் தண்ணீரில் குளிக்க வேண்டும். இறைவனைப் பிரார்த்திக்க வேண்டும் என்று மார்கழி மாதத்துக்குரிய நியமமாக வைத்தார்கள். உடல் வலிமை குன்றுவது உணவால் மட்டுமன்று. அன்றாட வாழ்க்கை முறை தவறினாலே உடல் வலிமை குன்றும். எங்கே உடல் வலிமை குன்றுகின்றதோ அங்கே நோய் கடுமையாகத் தாக்கும். எனவே இல்லறத்தில் வாழ்கின்றவர்களுக்கு மிகவும் இன்றியமையாத கருத்து, இது.

அந்தக் காலத்தில் வாழ்ந்தவர்கள் மிகவும் கடுமையாக நோன்பிருப்பதும், நல்ல வழிபாடு செய்வதும், இறைவன் நினைவோடிருப்பதும் என்று இருப்பார்கள். அப்படி இறைவன் நினைவோடு இருக்கின்றபோது

உலகக் காரியங்களைச் செய்யாது இருப்பதுமாக இருப்பார்கள். அப்படிப்பட்ட காலத்தில் நச்சுக் காய்ச்சல் பரவி எல்லோரும் துன்பப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அப்போது ஞானசம்பந்தப் பெருமான் ஒரு பதிகம் பாடுகின்றார். 'இந்தத் துன்பம் போகவேண்டுமென்று எண்ணி ஞானியர் ஏதேனும் ஒரு வார்த்தை சொன்னால்' அத்துன்பம் போய்விடும். அடியார்களை மட்டும் அந்த நச்சுக் காய்ச்சல் தாக்கவில்லை. அனைவரையும் பாதித்தது. தம் அடியார்களுக்கு இருந்த நோய் மட்டும் நீங்க வேண்டுமென்று அவர் பதிகம் பாடவில்லை. அனைவர்க்கும் உள்ள நோய் நீங்க வேண்டுமென்று பதிகம் பாடினார். அந்தப் பதிகம் வருமாறு:

"அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லு
மஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பதும் உந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும்
நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறாதிரு
நீலகண்டம்"

திருநீலகண்டத்தின் மேல் ஆணை, நீங்கள் செய்ய வேண்டிய பணிகளைச் செய்யுங்கள். உங்களைத் துன்பம் தீண்டாது என்று ஆணையிடுகின்றார்.

நமக்கு ஏதேனும் ஒரு துன்பம் வந்துறுமானால் அது முன் செய்த தீவினையால் வந்ததாக இருக்கும் என்று எண்ணுகிறோம். இதில் சில குறிப்புகள் உள. நடைமுறையில், எங்கள் வீட்டில் நடந்த செய்தியைச் சொல்கிறேன். இதைக் கேட்டால் உங்களுக்குப் புரியும் என்று எண்ணுகின்றேன்.

ஒருநாள் எங்கள் பெண் வாந்தியெடுக்கின்றாள், காரணம் என்னவென்று புரியவில்லை. உண்ட உணவு

செரிக்காமல் வாந்தி வந்து கொண்டேயிருக்கின்றது. நான் போய் என்ன வாந்தியெடுத்திருக்கின்றதென்று பார்த்தேன். நாவற்பழம், பேரிக்காய், கொய்யாப்பழம் ஆகிய பழங்களின் துணுக்குகள் அதில் இருந்தன. இவற்றைத் தொடர்ந்து சாப்பிட்டிருக்கின்றாள். நல்லவற்றையும் அளவுக்கு அதிகமாகச் சாப்பிட்டதால்தான் இப்படி வாந்தி வந்தது என்று சொன்னேன். **முன்னே ஏதோ ஒரு நிகழ்ச்சி நடந்திருந்தால் தான் இப்போது ஒரு துன்பம் வந்திருக்கும்.**

இந்த வெப்புநோய் நாட்டு மக்களுக்கு ஏன் வந்ததென்றால், இந்தப் பனிக் காலத்தில் மேற்கொள்ள வேண்டிய நெறிமுறைகளை, விரதங்களை, நெறிமுறையில் நின்று மேற்கொள்ளவில்லை. அதனால் அந்நோய் தாக்கியது என்கின்றார். ''பிறப்பதற்கு முன்செய்த தீவினையோ இங்ஙனே வந்து மூண்டதுவே!'' என்பார் பட்டினத்தடிகளார். 'பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா பிற்பகல் தாமே வரும்' என்பார் திருவள்ளுவ நாயனார். ஏதோ தீவினை செய்திருக்கிறோம். அதனால்தான் துன்பம் வந்துள்ளது. பிள்ளைகளுக்கு இளம் வயதில் அதிகமாகச் செல்லம் கொடுத்துவிட்டால் பின்னால் அவர்கள் அடங்காமல் போய்விடுவார்கள். இதை எல்லா வகையிலும் பொருத்திப் பார்க்குமாறு இந்தப் பாடலைச் சொல்லியிருக்கின்றார்.

துன்பம் உங்களுக்கு வருகின்றபோது 'அவ்வினைக்கிவ்வினை' என்று சொல்ல மாட்டீர்கள். அதுவே பிறருக்கு வருகின்ற போதுதான் இந்த உண்மையைச் சொல்லிக் காட்டுவீர்கள். 'சொல்ல அஃதறிவீர்' - பிறர் சொன்ன பின்னர்தான் நமக்கு ஏன் இந்தத் துன்பம் வந்தது என்று உணர்ந்து கொள்வீர்கள். அதற்கு முன்னர் உணர மாட்டீர்கள். இப்படித் தனக்கும் பிறர்க்குமாக அறிவுரை சொல்லிக் கொண்டே போகின்றார்.

உய்வினை நாடாது இருப்பதும் உந்தமக்கு ஊன மன்றே - நாம் உய்ய வேண்டுமென்றால் அதற்குரிய செயல்களைச் செய்யாமல் இருப்பதும் உங்களுக்கு ஊனந்தானே. அதற்கு என்ன செய்ய வேண்டும்? ஒழுக்க நிலையில் நில்லுங்கள். பிறர் மகிழத் தொண்டு செய்யுங் கள். பிறகு இறைவன் திருவடியை வணங்குங்கள். அப்போதுதான் நீங்கள் செய்த வினையோ, அன்றிப் பிறர் செய்த வினையோ நம்மை வந்துத் தீண்டா. நாம் செய்த வினையும், நம் பெற்றோர் செய்த வினையும், நம் சுற்றத்தார் செய்த வினையும், பிள்ளைகள் செய்த வினையும் நம்மை வந்து அணுகா.

இந்தக் கருத்தைத் திருமூல நாயனார் இன்னொரு வகையில் சொல்லுகின்றார்.

"கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வீரே யாமாகில்
தங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே"

இறைவன் திருவடியை நினைந்து, அன்பு குறையா மல் தவறான வார்த்தைகள் சொல்லாமல், தவறான செயல்களுக்குத் துணை போகாமல் அன்பைக் கருதி திருநீறு பூசுவீர்களேயானால் வினைகள் உங்களை வந்து சாராமல் சிவகதி சேர்ந்துவிடும்; நீங்கள் சிங்கார மான திருவடியைச் சேர்ந்து இன்பமாக வாழ்வீர்கள்.

இந்தக் கருத்தைத்தான் ஞானசம்பந்தப் பெருமான் நினைவூட்டுகின்றார். எனவே இன்றைக்கும், 'அவ்வி னைக்கு இவ்வினை' என்ற பதிகம் பாடினால் திருவருள் வல்லமை கைகூடும் என்பது அன்பர்களின் பட்டறிவு. இறைவன் திருமுன்னர் திருவிளக்கு ஏற்றி வைத்து இப்பதிகத்தில் உள்ள பதினோரு பாடல்களையும் சொல்லி வந்தால், தீவினைகள் அகலும், துன்பங்கள்

தீண்டா என்று பெரியவர்கள் சொல்லுகிறார்கள். நம்பி யும் பயன் பெறுகின்றார்கள். நம்பிக்கைதான் பயன் தரும். இப்படி வாழ்ந்தீர்களானால் துன்பம் தீரும் என்று ஞானப்பிள்ளை சொல்லுகின்றார். ஞானியர் வாக்கு பொய்க்காது. இந்தப் பாடல் முழுதும் துன்பம் தீர்க்கும் பதிகமாக அமைகின்றது. முன்னே சொன்ன, துணிவளர் திங்கள் என்ற பதிகத்தை, செயலற்றுக் கிடக்கின்ற நோய் வாய்ப்பட்டவர்கள் முன்னே ஓதிக் கொண்டே வந்தால், அவர்கள் செயலற்றுக் கிடக்கின்ற நிலை மாறி, தன் செயலைத் தானே உணர்ந்து செயல்படுவார்கள் என்று ஞானசம்பந்தர் திருவருளால் நினைக்கின்றோம். அப்ப திகத்தை ஓதும்போது ஞானசம்பந்தரையும் நினைத்து ஓதினால் இவையெல்லாம் பயன்தரும் என்பதில் யாதொரு ஐயமுமில்லை. இவையாவும் பயன்தரும் மந்திரங்கள். உலக மக்கள் இறைவனை நம்பி ஒழுகி னால், இச்செயல்கள் யாவும் நடக்கும் என்று மக்களுக் குத் தெரிவிக்கவே அவர் வந்தார். அதனால்தான் அவர் ஆணையிட்டுச் சொல்லுகின்றார். அவருடைய பெய ரைச் சொல்லிச் செயல்களைச் செய்கின்றபோது வினை கள் அகன்று விடுகின்றன.

எடுத்துக்காட்டாக ஒன்றைப் பார்ப்போம். கடந்த வாரம் தொண்டை சரியாக இல்லை. அவன் கருணையி னால் சரியாக வேண்டும், அவரைப் பற்றித்தான் பாடம் சொல்லிக் கொண்டிருக்கிறோம், சரியாகிவிடும் என்று சொன்னோம். இந்த வாரத்தில் பெரும் பகுதியும் சரியா கிவிட்டது. அதனால் இந்தப் பாடலைப் பாடி அடியவர் களுக்குக் காய்ச்சல் இல்லாமல் செய்ததுடன் அந்த நாட்டில் எல்லா மக்களுக்கும் அந்நோய் இல்லாமல் செய்துவிட்டார். 1,300 ஆண்டுகளுக்கு முன்னர் அவர் பாடியதால் நீங்கிய அந்நோய் இன்று வரையிலும் அந்தப் பகுதியில் வருவதும் இல்லை என்று சொல்லு

கின்றார்கள். மிகச் சிறந்த திருத்தலம். நீங்களும் சென்று பாருங்கள்.

அங்கிருந்து புறப்பட்டு மற்ற திருத்தலங்களுக்குச் செல்கின்றார். திருப்பட்டீச்சுரம் என்ற பகுதிக்கு வரு கின்றார்.

**திருஞானசம்பந்தர் திருப்பட்டீச்சுரம் வருகின்ற போது திருக்கோயில் கோபுரத்தைப் பார்த்து கைதூக்கி வணங்குகின்றார். நாமெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டிய செய்தி இது. கோபுரத்தை இறைவன் என்றே எண்ணி வணங்க வேண்டும். திருக்கோயிலைப் பார்த் தால் இறைவன் என்று எண்ணி வணங்க வேண்டும். அடியவர்களைப் பார்த்தாலும் இறைவன் என்றே எண்ணி வணங்க வேண்டும்.**

*வாழ்க்கையின் முழுப் பயன் என்ன?*

மெய்கண்டார் கடைசியாக நமக்கு ஒரு கருத்தைச் சொல்லுகின்றார். ''இறைவனின் கருணை நமக்குக் கிடைக்க வேண்டும்; அப்படிக் கிடைத்தால் எல்லாத் துன்பங்களும் போகும். அவனுடைய திருவடி நலம் நமக்குக் கிடைக்க வேண்டும் என்றால் ஒரு காரியத்தை நாம் செய்ய வேண்டும். திருவடி நலம் நமக்குக் கிடைக் காததற்கு என்ன காரணமென்றால், யாரிடத்திலும் நமக்கு நம்பிக்கை இல்லை, யாரிடத்திலும் நமக்குப் பணிவு இல்லை; அப்படியே இருப்பினும் அது ஏதோ ஒரு நலம் கருதியே பணிவு இருக்கின்றது; ஏதோ நல்லது நடக்கின்றது என்றால் அங்கே ஓடுவோம் - அவ்வளவு தான். இது ஆசை வயப்பட்ட செயல். மயக்கத்தின் வயப்பட்டு நாம் செய்கின்ற செயல்கள் அற்றுப் போக வேண்டும் என்பார் மெய்கண்டார். அவரும் மூன்று வயதில் திருவருளைப் பெற்றவர். அவர் பாடிய பாடல் கள் பன்னிரண்டுதான்.

"செம்மலர் நோன்தாள் சேரல்வொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே"

நல்ல அடியார்களையும், மயக்கமற்ற அடியார்களையும், திருக்கோயில்களையும் இறைவனாகவே வணங்க வேண்டும். அடியவர்கள் நம்மைப் போல் மனிதர்கள் தாமே! திருக்கோயில்களை நாம்தானே கட்டினோம்! அவற்றையெல்லாம் எப்படி இறைவன் என்று எண்ணுவது என்று ஆணவத்தோடு இருக்காதீர்கள். திருக்கோயில்களை வழிபட்டால் ஆணவம் அகலும். ஆணவம் அகல அருள்நலம் பெறலாம்.

அப்படித்தான் ஞானசம்பந்தப் பெருமான் திருப் பட்டீச்சுரம் கோயிலைப் பார்த்ததும் கைகூப்பித் தொழுது, நிலமுற வீழ்ந்து வணங்கினார். அவர் மகா ஞானி. இருந்தும் அவர் இப்படியெல்லாம் வணங்குகின்றார். அவர் உள்ளமே பெரும் கோயில். அவர் உள்ளத்தில் இருந்து இறைவன் பேசுகின்றான். அவர் பேசவில்லை. அத்தகைய ஞானியாக இருப்பினும் திருக் கோயிலைக் கண்ட அளவில் விழுந்து வணங்குகின்றார். ஏன்? தான் விழுந்து வணங்கினால்தான் மற்றவர்களும் விழுந்து வணங்குவார்கள், திருக்கோயிலைத் தான் தொழுவதைப் பார்த்து மற்றவர்களும் வணங்குவார்கள் என்று மற்றவர்களுக்கு வழிகாட்டிக் கொண்டிருக்கின்றார். அறிவில்லா மக்களுக்கு அறிவைப் புகட்டுகின்றார். அவர்களை ஆற்றுப்படுத்துகின்றார். எத்தனை பெரிய கருணை உள்ளம்!

ஒரு குழந்தையைத் தாய் இடுப்பில் தூக்கிக் கொண்டு சோறு ஊட்டப் போகின்றார்கள். அக்குழந்தை அதுவரை சோறு உண்டதில்லை. அதனால் அதற்கு எப்படிப் புரியவைப்பது! முதலில் இவர்கள்

வாயைத் திறந்து காட்டி, 'ஆ' திற என்று சொல்லுவார்கள். அப்போது குழந்தையும் ஆவென்று வாயைத் திறக்கும். சோற்றை ஊட்டினால் துப்பிவிடும். அதனால் தங்கள் வாயில் முதலில் போட்டுக் காட்டுவார்கள். இப்படிக் குழந்தையைப் பழக்குவார்கள். இப்படிப்பட்டவர்களே மக்களும். ஒன்றும் தெரியாமல் இருப்பவர்கள். அவர்களை ஆற்றுப்படுத்துகின்றார் திருஞானசம்பந்தர். அதனால்தான், தான் விழுந்து வணங்கி அவர்களுக்கு வழி காட்டுகின்றார்.

திருப்பட்டீச்சுரத்தில் பெருமானைப் பாடுகின்றார். அவன் பெருமைகளைப் பதிகமாக வடிக்கின்றார்.

பாடல்மறை சூடல்மதி பல்வளையொர் பாகமதில்
மூன்றோர் கணையால்
கூடஎரி யூட்டியெழில் காட்டிநிழல் கூட்டுபொழில்
சூழ்பழைசையுள்
மாடமழ பாடியுறை பட்டிசரம் மேயகடி
கட்டரவினார்
வேடநிலை கொண்டவரை வீடுநெறி காட்டிவினை
வீடுமவரே.

பெருமானே! நீ பாடுவதோ மறை, நீ சூடுவதோ மதி, நீ அணைந்திருப்பதோ மாது; நீ எரிப்பதோ மூன்று மதில், அதற்கு எடுத்ததோ ஒரு கணை, எரித்ததோ கூட்டோடு என்றும் படுகின்றார். அப்படி எரித்துவிட்டு உன் எழில் காட்டினாய். தீமையை அழித்து நன்மையைக் காட்டுவது பேரெழில் அல்லவா? எரித்தபின் அந்த இடத்தில் எல்லாம் அழிந்துவிடவில்லை. எரிந்து போக வேண்டியது போக பொழில் சூழ்ந்திருந்தது. எதனால்? அருள் பொழிந்ததால் பொழில் செழித்திருக்கிறது. பட்டீச்சுரத்தில் வதியும் பெருமானே, பாம்பை அடக்கிக் கட்டி வைத்திருக்கின்றாய், வேடங்கள் போட்

டுக் கொண்டிருக்கின்றாய், வினைகளுக்கு வீடு காட்டி னாய், (இங்கே தன் வினை என்று சொல்லவில்லை) எல்லோருடைய வினைகளையும் போக்கினாய் என்று பாடுகின்றார்.

திருஞானசம்பந்தரின் பெருமையைப் பேசி னாலோ, அல்லது கேட்டாலோ, அவரது பாடல்களைச் சொன்னாலோ நம் வினை போய், வாழ்க்கை உயரும் என்பார் வள்ளல் பெருமான். 'சீரார் சண்பை...' என்ற பாடலில் இக்கருத்தைச் சொல்லுவார். இதைப் 'பாடல் மறை' என்பார்கள். இத்தகைய பாடல்களில் உள்ளே பொருள் வெளிப்படையாய்த் தெரியாது. நாம் உணர்ந்து ஓதினால் நம்மை உயர்த்தும். அப்படிப்பட்ட மறையை நீ பாடிக் கொண்டிருக்கின்றாய். ஆன்மாக்க ளைத் திருத்தும் நன்மறைகளைப் பாடிக் கொண்டிருக் கின்றாய். ஆன்மாக்களுக்குக் கருணை காட்டும் முகமாக அவர்களைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு ஆடிக்கொண்டிருக்கின்றாய். ஒருகால் நீ மறந்தாலும், பக்கத்தில் அம்மையைப் பாகமாக வைத்திருக்கின் றாயே அவள் நினைவுபடுத்துவாள். இத்தகு அணிகளை யெல்லாம் அணிந்து கொண்டு, மூன்று அசுரர்களை ஒரே கணை விடுத்துக் கூட்டோடு அழித்து விட்டாய்! இந்த இடத்தில் நன்கு கவனம் செலுத்த வேண்டும். இறைவன் கருணையே வடிவமானவன், நன்மையே செய்பவன் - ஆனால் கூட்டோடு மூவரை எரித்தவன். அந்த மூவர் யார்? நம்மிடம் இருக்கும் ஆணவம், கன்மம், மாயை - இவை உயிர்க்குப்பகை. இறைவனுக் குப் பகை அல்ல, இறைவனுக்குப் பகையே வராது. இந்தப் பகைகளைக் கூட்டோடு அழிக்கின்றான். இறை வனுக்கு தாயுள்ளம். தாய் முதலில் குழந்தைக்குப் பகையானதை அழிப்பாள்; பின்னர் அதற்கு நன்மையை

ஊட்டுவாள். தீமைக்கு உதவியாக இருக்க மாட்டாள். அடியார்கள் தீமையைச் செய்தால் அவர்களுக்குத் துணையாய் இருக்க மாட்டான். தீமைகளை அழித்து நன்மை செய்வான். மூன்று அசுரர்களையும் அழித்து விட்டு, பரசை என்ற இடத்தில் அழகை ஊட்டினான். கட்டியை அறுத்த பிறகு எப்படி மருந்து வைத்துக் கட்டுகின்றார்களோ, அப்படி மும்மலங்களையும் எரித்து, அந்த இடத்தில் எழிலைக் கூட்டினான்.



## 5. முத்துப் பந்தல் பெறுதல்

இந்தப் பதிகத்தைப் பாடியவுடனே இறைவன் முத்துப் பந்தர் கொடுத்தான். முத்து அணிந்து கொண்டால் கடுமையான வெம்மையும் தீர்ந்துவிடும். அது தான் அதன் பயன். செயற்கை முத்து அணிவதால் பயன் இல்லை. அவர் கேளாமலேயே பந்தர் கொடுத்தான்.

இடையில் பல தலங்களைத் தரிசித்துக் கொண்டு திருவாடுதுறைக்கு வருகின்றார். அவற்றையெல்லாம் இங்கே சொல்லவில்லை. ஏனென்றால் அவருடைய கருணை எங்கெங்கே மலர்ந்தது என்று பார்க்கிறோம். உயிர்கள் படுகின்ற துன்பங்களை நினைந்து பாடினார் என்றால் இனிமேல் உயிர்களுக்குத் துன்பம் நேராமல் அவன் காப்பான் என்று பொருள். இறைவனுக்குச் சில வேலைகளை விட்டுவிட்டு, இறைவன் இட்ட ஆணையைத் தலைமேல் ஏற்றுத்தான் சில வேலைகளைச் செய்யப் போகின்றார்.



## 6. பொற்கிழி பெறுதல்

திருவாவடுதுறைக்கு வந்தபின்னர் திருஞானசம்பந்தரின் தந்தையார், "வேத வேள்விகள் செய்ய வேண்டும், அதற்குப் பொருள் வேண்டும்" என்று கேட்கின்றார். சில காரியங்களைச் செய்து பழக்கப்பட்டுவிட்டால் அதைவிட முடியாது. அப்படித்தான் சிவபாத இருதயரும் வேள்வி செய்தே பழக்கப்பட்டவர். அந்தப் பழக்கத்தை அவரால் விட முடியவில்லை.

தந்தையார் பொருள் கேட்டதும் அதனை ஈட்டித் தருவது மகனுடைய கடமை. தன் கடமையை உணர்ந்து தாய் தந்தையர்க்கு உதவுபவன்தான் மகன். மற்றதெல்லாம் கடன். தாய் தந்தையர் செய்ய வேண்டிய அறக் காரியங்களுக்குப் பிள்ளைகள் உபகாரமாக இருக்க வேண்டும். அவர்கள்தாம் பிள்ளைகள்.

தந்தையார் பொருள் கேட்டதும் ஞானசம்பந்தருக்கு வருத்தம் வந்துவிட்டது. நாளும் இறைவன் திருப்புகழைப் பாடுவதையே தன் வேலையாகக் கொண்டிருந்தவர் தாய் தந்தையருக்குச் செய்ய வேண்டிய கடனைச் செய்யவில்லையே என்று வருந்துகின்றார். திருவாவடுதுறைப் பெருமானிடம் சென்று உள்ளம் உருகிப் பாடுகின்றார். "பெருமானே! உன்னையேயல்லவா நினைந்து பாடிக் கொண்டிருக்கின்றேன். தந்தையார் பொருள் வேண்டுமென்று கேட்கின்றார், நான் என்ன செய்வேன்!" என்று கதறுகின்றார். அப்போது பாடியபாடல்தான் 'இடரினும் தளரினும் எனதுறு நோய் தொடரினும்' என்ற பதிகம். பதிகத்தைப் பாடி முடிக்கின்ற போது, இறைவனைச் சூழ்ந்து நிற்கின்ற பூதங்களில் ஒரு பூதம் 'உலவாக்கிழியைக்' கொண்டு வந்து பலி பீடத்தின் மீது வைத்து "இறைவன் இதனை உங்களுக்குத் தரச்சொன்னான், இதிலிருந்து பொருள்

எடுக்க எடுக்கக் குறையாது'' என்றும், அதனை எடுத்துக் கொள்ளும்படியும் சொல்லிச் சென்றது.

இப்போது என் வாழ்க்கையில் நடந்த செய்தியை உங்களுக்குச் சொல்லலாம் என்று நினைக்கின்றேன். என் பெரிய தாயார் தான் முன்னிருந்து எனக்கு ஒரு வாழ்க்கைத் துணையைத் தேடி வைத்தார்கள். திருமணத் திற்கு முன்னும், திருமணத்திற்குப் பின்னும் என்னு டைய வாழ்க்கையை ஒரே சீராகத்தான் ஓட்டி வந்தேன். தனிமையில் இருப்பது எனக்கு நிரம்பப் பிடிக்கும். தற்போது ''அருள்ஞானப் பெருவெளி'' இருக்கின்ற இடம் முன்னர் ஈச்சங்காடாக இருந்தது. அந்த இடத்தில் வந்து நான் அமைதியாக உட்கார்ந்துவிடுவேன். என் நிலையைக் கண்ணுற்ற என் பெரிய தாயார் ''இவன் சாமியாராகப் போய்விடுவானோ, நாம் இவனுக்குத் தேடி வைத்த பெண்ணைத் தவிக்க விட்டுவிடுவானோ, அப்படி விட்டுவிட்டால் அவர்களது பிற்காலம் எப்படி அமையுமோ?'' என்றெல்லாம் வருத்தப்பட்டுக் கொண் டிருந்தார்கள். இந்தச் செய்தி என் காதிலும் விழுந்தது. அப்போதுதான் எனக்கும் ஓர் உணர்வு வந்தது. அப்படி ஏதேனும் நடந்துவிட்டால், நம்மால்தானே அவர்க ளுக்கு இப்படிப்பட்ட இடர் வந்தது என்று எண்ணி ஒரு கணம் வருந்தினேன்.

இது நடந்த சில நாட்கள் கழித்து ஒருவர் வந்து, 'ஐயா, இந்த நிலங்களை நீங்கள் வாங்கிக் கொள்கின்றீர் களா?' என்று கேட்டார். 'வாங்கிக் கொள்கிறேன்' என்று சொன்னேன். அப்போது பணம் எப்போது தரு வீர்கள் என்று கேட்டார். அடுத்த மாதம் 22ந் தேதி வந்து பணத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்றேன். இப்ப டிச் சொல்லுகின்ற போது என்னுடைய நிலை என்ன தெரியுமா? கையில் காலணா இல்லாத காலம். அன் றைக்கு மட்டுமன்று என்றைக்கும் என் கையில்

பொருளை வைத்துக் கொண்டிருந்தவன் அல்லன். தொழில் செய்தேன், சம்பாதித்தேன். ஆனால் பொருளைப் போற்றி வைத்துக் கொள்ளவில்லை. என்ன செய்தேன் அவ்வளவையும் என்று நினைக்கின்றீர்களா? நல்ல காரியங்களுக்குத்தான் செலவு செய்தேன்.

இப்போது பணத்திற்கு என்ன செய்வது? அதற்காக நான் ஒன்றும் சிரமப்பட்டுக் கொள்ளவில்லை. ஆனால் அடுத்த மாதம் 21ந் தேதி தேவையான பணம் வருகின்றது. 22ந் தேதி பணத்தைக் கொடுத்துப் பத்து ஏக்கர் நிலம் வாங்கினேன். அதனை அவர்கள் பெயருக்கு எழுத எண்ணினேன். முதன் முதலில் வாங்குகின்ற நிலத்தை உங்கள் பெயரிலேயே எழுதிக் கொள்ளுங்கள் என்றார்கள். சரியென்று எழுதிக் கொண்டேன். அடுத்து இன்னும் பத்து ஏக்கர் நிலம் வாங்கினேன். அதற்குப் பிறகும் சேர்த்த சொத்துக்களை என் மனைவி பெயருக்கே எழுதிவிட்டேன். அதற்குப் பணம் எப்படி வந்தது? எப்படியோ வந்தது. அவ்வளவுதான். ஆனால் நான் நண்பர்களிடமோ, மாமனார் மாமியாரிடமோ, உறவினர்களிடமோ காசு கேட்டு வாங்கியவன் அல்லன். எனக்கு இருக்கும் சொத்தெல்லாம் இப்படிச் சொற்பொழிவு செய்வது ஒன்றுதான்.

சாதாரண நிலையில் இருக்கின்ற நானே ஒரு கணம் மனைவி, மக்களுக்குப் பிற்காலத்தில் பாதுகாப்பில்லையே என்று எண்ணி வருந்தியதற்கே இப்படி இறைவன் வழங்கினான் என்றால், இறைவன் அருளை முழுமையாகப் பெற்ற திருஞானசம்பந்தர் வருந்தினால் சும்மா இருந்து விடுவானா? பதிகம் பாடி முடித்தபின் ஒரு பூதத்திடம் உலவாக் கிழி கொடுத்து அனுப்பிவிட்டான்.

இது கதையாக இருக்கலாமோ என்று ஓர் ஐயம் எழக்கூடும். நீண்ட நாட்கள் கழித்து ஒரு செய்தியைப்

பார்க்கின்றபோது அது கதையாக இருக்கலாமோ என்று எண்ணத் தோன்றும். அதற்காகத்தான் என் வாழ்வில் நடந்த செய்தியைச் சொன்னேன். இறைவன் திருவரு ளால்தான் அப்படி நடந்தது என்பதற்காகச் சொன்னேன். என் பெருமிதத்தைக் கூறியதாக எண்ணிக் கொள்ள வேண்டாம்.

ஒரு பெரியம்மா வருந்துகின்றார்கள். அவர்கள் படுகின்ற வருத்தத்தைப் பார்த்து நான் வருத்தப்படுகின் றேன். எண்ணிய எண்ணத்திற்கேற்ப இறைவன் அருள் கின்றான். இனிமேல் நான் எப்படிப் போனாலும் அவர்கள் வாழ்க்கைக்குப் பயமில்லை. பாதுகாப்பு ஏற் பட்டுவிட்டது. அவர்கள் கவலைப்படாமல் இருக்க லாம். அவர்கள் கவலைப்படாமல் இருப்பார்களோ, இல்லையோ எனக்குத் தெரியாது. நான் போய்விட் டால், போய்விட்ட வருத்தந்தான் இருக்குமே தவிர பாதுகாப்பில்லையே என்று அழ வேண்டிய அவசிய மில்லை. அவர்களும், நானும் வருத்தப்படாமல் இருக்க இந்த ஏற்பாட்டைச் செய்தான் என்பதுதான் உண்மை.

தந்தையாரிடம் பண முடிப்பை எடுத்துக் கொடுத்து, நீங்கள் செய்ய வேண்டிய வேள்விக்கு மட்டு மின்றி, சீர்காழிப் பதியில் இருக்கின்ற அத்தனை அந்த ணர்களும் செய்கின்ற வேள்விக்கு வேண்டிய பணத்தை இதிலிருந்து எடுத்துக் கொடுங்கள்; எடுக்க எடுக்கக் குறையாது; இதிலிருந்து பணம் கிடைத்துக் கொண்டி ருக்கும் என்று சொல்லுகின்றார்.

தனக்கு இறைவனின் அருள் ஞானம் கிடைத்துவிட் டது; தந்தையார் பற்றி இனி நாம் கவலைப்பட வேண் டாம் என்றில்லாமல், தந்தையாரின் நிலை குறித்து வருந்தி இறைவனிடத்தில் முறையிடுகின்றார். அவரு டைய கருணை உள்ளம் இதிலிருந்து தெரிகின்றது.

'இதுவோ எமையாளுமாறு' - இதுதானா உன்னுடைய அருள், என்னை இப்படித்தானா ஆளவேண்டும்! என்று நொந்து சொல்லுகின்றார். இவர் நொந்து சொன்னதும் இறைவனும் நொந்து போய்விட்டான். உண்மையான அடியார்கள் நொந்து பேசினால் இறைவன் வெந்தே போவான். அவன் வேவதற்கு முன்னே துடித்துப் போய்விடுவான். அவர்கள் கேட்டதைக் கொடுத்துவிடுவான். உண்மையான அடியார்களிடம் இறைவன் பயந்து நிற்பான்.

திருஞானசம்பந்தருக்குப் பொற்கிழி கொடுத்தது உண்மையா? கதையா? உண்மையான நிகழ்ச்சி என்பதற்குச் சான்று இருக்கின்றது. சொன்னால் விளங்கிவிடும். அப்பர் பெருமான் திருவாவடுதுறைப் பதிக்கு வருகின்றார்.

''மாயிரு ஞாலமெல்லாம் மலரடி வணங்கும் போலும்'' இந்த உலகமெல்லாம் உன் திருவடியை வணங்குகின்றது. ஏன் தெரியுமா? நீ எண்ணியதை எண்ணியவாறே கொடுக்கின்றாய்.

''பாயிருங் கங்கையாளைப் படர்சடை வைப்பர்போலும்'' இந்த உலகம் நலம் பெறுகிறது; உன்னை வணங்குகின்றது; அவர்களுக்கு நலம் வழங்க வேண்டும்; அதற்காக அருளை 'கங்கை' என்ற பெயரால் உன் தலையில் வைத்துக் கொண்டிருக்கின்றாய். யார் வணங்கினார்களோ அவர்களுக்குக் கருணை பொழிகின்றாய்.

''காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமலவூரர்க்கு அம்பொன்
ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடு துறையனாரே''

காழியெம் பெருமானுக்கு அம்பொன் ஆயிரம் கொடுத்தாயே. அப்படிக் கொடுத்ததைப் பார்த்து இங்கேயிருக்கின்ற வேங்கை மரங்களும் தங்களிடத்துள்ள மலர்களைக் கொட்டிக் கொண்டிருக்கின்றன. ஞானசம்

பந்தருக்குப் பொன் கொடுத்தான் இறைவன் என்பது இதன் மூலம் அரண் செய்யப்படுகிறது. இருவரும் சமகாலத்தவர்கள். அப்பரடிகளோ வயதில் பெரியவர். அவரே இறைவன் ஞானப்பிள்ளைக்குப் பொருள் கொடுத்ததை ஒப்புக் கொண்டிருக்கிறார் என்று தெரிகின் றது.

அங்கிருந்து புறப்பட்டு இடையில் பல பதிகளைத் தரிசித்துக் கொண்டு தருமபுரத்திற்குச் செல்கின்றார். அங்கே ஏன் போனார்? நீலகண்டப் பெரும்பாணர் என்பார் அந்த ஊரில் இருக்கின்றார். அவர் சாதாரண குலத்தில் பிறந்தவர். யாழ் வாசிப்பதில் பெரும்புலவர். குலம் குறித்துப் பேதம் காட்டாமல் அவரையும் அழைத் துக் கொண்டு பதிகள்தோறும் செல்கின்றார் சம்பந்தர். ஞானசம்பந்தர் பாடும் பாடலை இவர் யாழில் இசை கூட்டிப் பாடுவார். பாடல் இசை சேர்த்து - அழகூட்டப் பட்டது. அவர் அன்னை பிறந்த ஊர் தருமபுரம். அந்த ஊரைத் தரிசிக்கச் சம்பந்தரும் போகிறார்.

அங்கே சென்று பதிகங்கள் பாடுகின்றார். யாழிலே அப்பாடல்களை நீலகண்ட யாழ்ப்பாணர் இசைக்கின் றார். அங்கே கூடியிருந்த மக்கள் எல்லாம் என்ன இருந்தாலும் நம் ஊர்ப்பிள்ளை நீலகண்ட யாழ்ப்பா ணர். அவர் இப்பாடல்களை யாழிலே இசைக்கவில்லை யென்றால் ஞானசம்பந்தருடைய பாடல்கள் எடுபடாது என்று பேசிக் கொள்கின்றார்கள். இதைக்கேட்டு யாழ்ப் பாணர் பெருமிதம் கொள்ளவில்லை. யாழிசைப்பதை விட்டுவிட்டு வருந்துகின்றார். ஞானசம்பந்தரின் பெருமை தெரியாமல் என் பெருமையைப் பேசுகின் றார்களே இந்த மக்கள் என்று மிகவும் வருந்துகின்றார். ஞானசம்பந்தப் பெருமானின் கால்களில் விழுகின்றார்.

''பெருமானே, இந்த ஊர் மக்களுக்கு இறைவனின் கருணையும் தெரியவில்லை; உங்களுடைய பெருமை

யும் தெரியவில்லை. நான் இந்தப் பழிக்கு ஆளாகிவிட்டேன். அதனால் தாங்கள் இந்த யாழில் அடங்காத பாடல் ஒன்றைப் பாடவேண்டும்'' என்று வேண்டிக் கொள்கின்றார். இப்போது அடியவர் கேட்டவுடன் அவர் பாடியாக வேண்டும். ''மாதர் மடப்பிடியும் மட அன்னமும்....'' என்று ஒரு பதிகம் பாடுகின்றார். அப்பாடலின் இசையை யாழில் மீட்ட முடியவில்லை. இதெல்லாம் ஓர் அற்புதமான செய்தி. அந்தப் பாடலுக்கு ''யாழ்முரிப்பண்'' என்றே பெயர். இறைவனுடைய அடியார்கள் நினைத்தால் எப்படி வேண்டுமானாலும் பாடுவார்கள். எதை வேண்டுமானாலும் செய்வார்கள். அதனால் அவர்களுடைய பெருமைக்கு இழுக்கு வராது.

யாழினால் பாட முடியாதபோது யாழ்ப்பாணர், 'என் யாழ் வாசிப்பினால்தான் திருஞானசம்பந்தருடைய பாடல் சிறக்கின்றது என்று சொன்னீர்களே, இப்போது இந்த யாழ் வாசிப்பில் அடங்காத பாடலை அவர் பாடியிருக்கின்றார்; அதனால் என் யாழினால் எந்தப் பயனும் இல்லை'' என்று சொல்லி யாழை உடைக்கப் போகின்றார். காழியர் கோன் அவரைத் தடுத்து நிறுத்தி, என் பாடலும், உம் யாழும் அவன் பெருமையை அளக்க இயலாதவை என்று சமாதானப்படுத்துகின்றார். மக்கள் அனைவரும் இறைவனது பெருமையையும், ஞானசம்பந்தப் பெருமானின் பெருமையையும் உணர்கின்றார்கள். பிறகு பலகாலம் அங்கே வாழ்கின்றார்.

சீர்காழியில் பிறந்தவர் தருமபுரம் வரையில் வர வேண்டுமா? ஆங்காங்கே பல்வேறு செயல்களையும், பல்வேறு அற்புதங்களையும் செய்து கொண்டும், நடந்தும், பல்லக்கில் சென்றும் இவற்றையெல்லாம் நிகழ்த்திக் கொண்டிருக்கின்றார். ஆங்காங்கே உள்ள மக்களைச் சந்தித்து அவரவர்க்குத் தேவையான நெறிகளையும்,

ஒழுக்கங்களையும் போதித்து, உபகாரமாக இருந்து கொண்டிருந்ததற்குக் காரணம் அவருடைய அளப்பருங் கருணைதான்.

இந்த நாட்டு மக்கள் நெறிகெட்டுப் போகின்றார் கள்; அவர்களை நல்வழிப்படுத்த வேண்டுமென்றும், உண்மை தெரியாமல் தவறிப் போகின்றார்கள்; அவர்க ளுக்கு உண்மையை உணர்த்த வேண்டுமென்றும், அவர் களுக்கும் அல்லலை அகற்ற வேண்டுமென்றும் எண்ணி ஞானசம்பந்தப் பெருமான் ஒரு "தெய்வீகச் சுற்றுலா" நடத்திக் கொண்டிருக்கின்றார்.

அப்பரடிகள் சொல்லுகின்றபோது "கண்டேன் அவர் திருப்பாதம், கண்டறியாதன கண்டேன்" என்று கயிலைக் காட்சியில் சொல்லுகின்றார்; வியக்கின்றார்; நயக்கின்றார்.

இருவர் சொல்லுவதிலும் என்ன வேறுபாடு? மாதோ, மடமயிலோ என நின்றவர் வாழ்ந்த பதி போதோ (மலரோ), விசும்போ (வானமோ!) புனலோ (தண்ணீரோ) என்று ஐயப்படுகின்றார். இங்கெல்லாமா வாழ்வார்கள்? என்று எண்ணிப் பார்க்கின்றபோது சாதா ரணமாகத்தான் தெரிகின்றது. இதன் உட்பொருள் யாது?

மாதோ மடமயிலோ என வியக்க வைத்த அந்தத் தோற்றம் எங்கே என்னை ஆட்கொண்டதென்று தெரிய வில்லை. இதுவரையில் நான் தேடி, கண்டு, அனுப வித்த பொருள்களில் எதுவும் இப்படி இருந்ததில்லை. இணையிலியாக இருக்கின்றது. ஒப்புச் சொல்ல முடியா ததாக இருக்கின்றது.

மாது என்றால் அழகுடையவள். மடமயில் என்று சொன்னதால், ஆறுகோடி மாயா சக்திகள் என்னை வந்து ஆட்படுத்திப் பலவேறு அல்லல்களில் ஆட்படுத் திக் கொண்டிருந்தன. அவள் அதனை அகற்றினாள்.

(மயக்கம் - பித்தம். பித்தம் அதிகமானால் மயக்கம் வரும்.) அப்படி யார் மாயைக்கு ஆட்பட்டார்களோ அவர்கள் மயக்கமுறுவார்கள். அல்லல் படுவார்கள்.

மயிலைப் பார்த்த அளவில் பித்தம் போய்விடும் என்பது மருத்துவக் குறிப்பு. இனி, மயிலைப் பார்க்க முடியாதவர்கள் என்ன செய்வது என்றால் மயிலின் இறகைக் கொண்டு வந்து கரித்துத் தேனில் குழைத்து மூன்று வேளை கொடுத்தால் பித்தம் போய்விடும். பெண்ணாக இருக்கின்றவர்கள் பார்த்தால் மயக்கம் உண்டாகும். ஆனால் இந்தப் பெண், இந்த மாது பார்த்தால் மயக்கம் நீங்கும். இந்த உட்பொருளை 'மடமயிலோ' என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார்.

எமன் விடுத்த தூதோ என்று சொல்லுவதில் என்ன பொருள் இருக்கின்றது? எமன் விதி வழி நிற்பவன். இறைவனின் ஆணை வழி செயல்படுபவன். காலம் வருகின்ற போது உயிரையும், உடலையும் கூறுபடுத்துப வன். அப்படி என் முன்னே நிற்கின்ற இந்தப் பெண் என் விதி வழி மனைவியென வாய்த்தவள்; விதிவழி ஆசிரியனாக வாய்த்தவள். ஆசிரியர், மனைவி இரண் டும் ஒன்றுதான். இறைவன் ஆணை வழி என்னோடு இணைந்து வாழ்பவள். என்னைத் தொல்லையினின் றும் விடுவிப்பவள். என் ஊனத்தையும் உடலையும் உணருமாறு செய்தவள். இப்படிச் சொன்னவுடன் தேமொழியார் ஏதோ புதுக்கருத்தைச் சொல்லிக் கொண் டிருக்கின்றார் என்கிற மாதிரி எண்ணுவார்கள். இருக் கின்ற கருத்தைத்தான் சொல்லுகின்றேன். 'ஊன் உயிர் வேறு செய்தான் நொடித்தான்மலை உத்தமனே' என்று சொல்லியிருப்பதன் பொருளைத் தெரிந்துகொண்டால் போதும்.

வரலாறு என்பது பொதுவானது. ஞானிகள் சொல்ல வருகின்றபோது பொதுவகை, சிறப்பு வகை,

நுட்பவகை என அனைத்தும் பொதிந்து, நாம் உணர்ந்து கொள்ளும் வகையிலே சொல்லுவார்கள்.

ஞானசம்பந்தப் பெருமான் ஓர் ஒப்புயர்வற்ற ஞானி. அவர் இந்த ஞான நிலையில் தன்னை ஆட்படுத்திக் கொண்டார். ஞானவழி நின்று நமக்கு வழி காட்டுகின்றார். ஞானிகளுக்கு எப்போதும், யாரிடத்தும் பேதமில்லை. ஆனால் பேதமில்லை என்று சொல்லுவதனால் அனைத்தையும் ஒன்றாகக் கலக்கமாட்டார்கள். அந்தந்தச் சுவையைத் தனித்தனியே கண்டு, அவரவர்களே அனுபவிக்க வேண்டும்; அதில் எது தேவை, எது தேவையில்லை என்பதையும் அவரவர்களே முடிவு செய்து கொள்ளவேண்டும். சுவையான பண்டங்கள் பலவற்றைச் சமைத்து வைத்திருந்தபோதும் தனித்தனியாகத்தானே பரிமாறுகின்றனர்! வயிற்றில் போய் ஒன்றாகத்தானே கலக்கின்றது என்பதற்காக அனைத்தையும் ஒன்றாகவா பரிமாறுகின்றார்கள்! இல்லையே! அப்படியே ஞானிகளும் தனித்தனியே சமைத்து வைத்திருப்பதை அவரவர் உடல்நலம், ஏற்பு நலம், உயிர்ச்சுவை இவற்றிற்கு ஏற்ற வகையிலே, பண்டங்களைக் கொள்ளுவது போலக் கொள்ள வேண்டும். அப்படியே இறைவனும் ஆன்மாக்களுக்குச் சுதந்தரத்தைக் கொடுத்துப் படைக்கின்றான். பண்டங்களைப் படைக்கின்றபோது தனித்தனியே படைக்கின்றான்.

ஞானசம்பந்தப் பெருமானுக்குப் பேதமில்லை என்பதை எடுத்துக் காட்டும் ஓர் உதாரணம்: யாழ்ப்பாணர் கீழ்க் குலத்திலே பிறந்திருந்தும், தன்னை ஒத்து, தனக்கு உரியவராக அணைத்துக் கொண்டார். எந்த மக்களிடமும் பேதம் பாராட்டாமல் அனைவரிடத்திலும் உயர்நெறி பரப்புகின்றார். எந்த மொழியினரிடத்தும் பேதம் பாராட்டக்கூடாது என்பதற்காக, ''நான் மறை வல்லன்,'' 'இருக்கில் சிறந்தவன்' என்று சொல்

லிக் கொள்கின்றார். ஆனால் பதிகங்கள் பாட வருகின்ற போது அவற்றைப் பற்றியெல்லாம் சொல்லாமல் தமிழ் பற்றியே பேசினார்.

தமிழ் என்றால் ஞானம். ஞானத்தைப் பற்றி வேற்று மொழிகளில் உள்ள நூல்கள் இவ்வளவு சிறப்பாகச் சொல்லவில்லை. ஞானத்தைப் பற்றிப் பெரிதும் பேச வந்தது தமிழ் ஒன்றுதான். அதனால் அதனைப் பற்றிப் பேசவந்தார். அவர் ஞானத்தைப் பரப்ப வந்தவர். அதே சமயத்தில் மற்ற மொழிகளையும், வேதங்களையும் உதாசீனப்படுத்தாமல், அதைப் போற்றிக் கொண்டு, தாம் சொல்ல வந்த நெறியைப் பரப்பிக் கொண்டு சென்றார்.

பின்னர் திருநள்ளாற்றுக்குச் செல்கின்றார். அங்கே 'போகமார்த்த பூண்முலையாள்' என்று தொடங்கும் பதிகத்தைப் பாடியருளினார். ஞானசம்பந்தப் பெருமான் தாம் பாடியருளிய பதிகங்களில், எங்குமே ஒரு மனிதன் வெறுக்கத் தக்கவிதத்திலோ, அன்றி உலகத்தை மறக்குமாறோ, உலகம் வேண்டாம் என்று சொல்லத் தக்க விதத்திலோ பாடவிலலை.

ஆணோடு பெண் இணைந்து அருள்நெறியில் வாழ்வதற்குப் 'போகம்' என்று பெயர். யோகமார்த்த பூண்முலையாள் என்று பாடவில்லை. மகிழ்ச்சியாக வாழ்ந்த இல்லற நிலையையே பாடுகின்றார். விவசாயிகள் பயிரை விளைவிக்கின்றபோது மூன்று முறை அறுவடை செய்தால் 'மூன்றுபோகம் செய்தேன்' என்று சொல்வார்கள். போகம் என்றால் நல்ல விளைவு. விளைவு என்றால் பலருக்குப் பயன்படுவது. தனக்கு மட்டுமே பயன்படுவதற்குப் போகம் என்று பெயரன்று; அதற்கு 'யோகம்' என்று பெயர். ஏன்? அது தனக்கு மட்டுமே பயன் தரும். பலருக்கும் பயன்தருவது

போகம். அம்மையும் அப்பனும் இணைந்து அம்மையப் பராக நின்ற நிலையைப் பாடுகின்றார்.

திருவாசகத்தில் திருச்சாழல் என்ற பதிகத்தில் வினா விடையாக இந்த நிலையை மணிவாசகர் விளக்குகின் றார். பெருமானுக்கு ஏன் திருமணம் செய்து காட்டினார் கள்? அவன் யோக நிலையில் விளங்கிக் கொண்டிருந் தால் இந்த உலகத்தில் உள்ள மக்கள் அனைவரும் யோக நிலையில் நின்று வீடுபேறு எய்திவிடுவார்கள். உயிர்ப் பெருக்கம் இருக்காது. தோற்றம், நிலைபேறு, மறைவு என்ற செயல்கள் நடைபெறா. அதனால் திருமணத்தை நடத்திக் காட்டினார்கள். அஃதே போன்று அவன் யோக நிலையில் நிற்பதாகக் காட்டியதால் பலரும் யோகியர்க ளாக வாழ்ந்து கொண்டு இருக்கின்றார்கள். மக்களுக்கு வழிகாட்டவே இறைவனுடைய நிலைகளையும் (திரும ணக் காட்சியாகவும், யோகநிலையில் விளங்குவதாக வும்) காட்டினார்கள்.

திருநள்ளாற்றிற்குச் சென்றபோது மிகவும் அருமை யாகப் பதிகங்களைப் பாடுகின்றார். அதனை யாழ்ப்பா ணரை யாழில் வாசிக்குமாறு பணிக்கின்றார். அவரும் மனம் உருகி வாசிக்கின்றார்.

பின்னர் செங்காட்டங்குடிக்குச் சென்று பதிகம் பாடிவிட்டு, வருகின்ற வழியில் பல தலங்களை வணங் கியும், வழிபட்டுக் கொண்டும் வருகின்றார். ஞானசம் பந்தருடைய நோக்கம் அந்தந்த இடங்களில் வாழ்கின்ற மக்களுக்கு என்ன சொல்லலாம் என்று எண்ணி அந்த நோக்கத்தில் சொல்லுவார். எல்லோருக்கும் ஒரே மாதிரி யாகச் சொல்லுவதில்லை. 'உங்களுக்குப் புரிந்ததோ, புரியவில்லையோ, நான் சொல்லுவதைத்தான் நான் சொல்லுவேன்' என்ற பாணியில் அவர் எங்கேயும் சொல்லவில்லை. அப்பகுதி மக்களின் உள்ளக்கிடக்

கையை, நிலையை அறிந்தும், உணர்ந்தும் அதற்கு ஏற்ற நெறிமுறைகளைப் போதித்துக் கொண்டு வந்தார். எங்கெங்கே இறைவன் எழுந்தருள வேண்டுமோ அங்கெல்லாம் இறைவனை எழுந்தருளுமாறு பாடிக் கொண்டு வருகின்றார். ஒவ்வொரு திருவூரும், அவ்வூரில் விளங்கும் திருக்கோயிலும் மாட்சியுறுமாறு பாடுவார். அப்படிப் பாடிக்கொண்டு வந்தவர் 'திருமருகல்' வருகின்றார்.



## 7. நச்சு நீக்குதல்

காலை நேரம். நீராடி, வழிபாட்டை முடிக்கத் திருக்கோயிலுக்குச் செல்கின்றார். ஓர் அவலக் குரல் அந்த அதிகாலை நேரத்தில் கேட்கின்றது. அவர் செல்வது திருக்கோயிலுக்கு. வழிபாடு செய்வதற்காகச் செல்கின்றார். நேரமோ அதிகாலை. அவலக் குரல் கேட்கின்றது. திருக்கோயிலுக்குச் செல்வதை விடுத்து, குரல் கேட்ட திசையை நோக்கிச் செல்கின்றார். இதை ஒரு படிப்பினையாக அனைவரும் எடுத்துக் கொள்ள வேண்டும். நாமாக இருந்தால் கோயிலுக்குத்தானே முதலில் செல்வோம். குரல் வந்த திசையை நோக்கிச் செல்ல மாட்டோமல்லவா! நமக்கேன் இந்த வம்பு! என்று எண்ணி ஒதுங்கிவிடுவோம். அவர் அப்படிச் செய்யவில்லை.

திருக்கோயில் வணக்கத்தைவிட, திருக்கோயில் வழிபாட்டைவிட, அவலக் குரல் கொடுத்துக் கொண்டிருக்கின்றவர் யார்? அவர்களுடைய குறை என்ன? அதைத் தீர்ப்பதற்கு ஏதேனும் வழி உண்டா? என்று தீர்வு காண்பதுதான் அடியார்களின் முதல் வேலை. ஆண்டவன் தொண்டைச் செய்கின்றவர்களுக்கு ஆண்

டவனைத் தொழுவதைவிட, பிறர் துன்பம் களைவது தான் முதற் கடமையாகும். இன்றியமையாத கடமை யாக இதைத்தான் எண்ணுவர். கோயிலை வணங்குவது அன்று. அதில்தான் அவர்களது பெருமையே அடங்கியி ருக்கின்றது. இரண்டாந்தரமாக உள்ளவர்கள்தாம் அன் பர் பணிவிடுத்துக் கோயிலுக்குச் சென்று வணங்கிக் கொண்டிருப்பர்.

குரல் கேட்ட இடத்திற்குச் செல்கின்றார். அப் போது ஒரு பெண் அவரது காலில் வந்து விழுந்து வணங்குகின்றாள். "பெருமானே! நான் நிரம்பவும் பாவி ஆகிவிட்டேன்" என்று அழுதுகொண்டே கூறுகி றார். 'அம்மா' அழுகையை நிறுத்து. நீ யார்? எந்த ஊர்? உனக்கு வந்த துன்பமென்ன? என்று கேட்கின்றார் காழி வேந்தர். "என் ஊர் வைப்பூர். என் தந்தையார் பெயர் தாமன். அவர் ஒரு வணிகர். அவருக்கு என்னோடு சேர்த்து ஏழு பெண்கள். என் தமக்கையரில் ஒவ்வொரு வரையும் என் மாமனுக்குக் கொடுப்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தவர், உரிய காலம் வருகின்றபோது சிறிது பணத்தைப் பெற்றுக் கொண்டு வேறொருவருக்கு மணம் முடித்துக் கொடுத்துவிட்டார். இப்படி 6 பெண்க ளுக்கும் திருமணம் செய்து கொடுத்து விட்டார். கடைசி யாக நான்தான் எஞ்சியிருந்தேன். என் தந்தையார் என் மாமனை இப்படியெல்லாம் ஏமாற்றிவிட்டாரே, வஞ் சித்து விட்டாரே என்று மிகவும் வருந்தினேன். கடைசி யாக, நாமாவது அவருக்கு உரியவளாகித் தந்தை பட்ட கடனைத் தீர்த்து விடலாம் என்று எண்ணினேன். அத னால் என் மாமனுடன் புறப்பட்டு வேற்றூர் சென்று மணம் முடித்துக் கொள்ளலாம் என்று எண்ணி இந்த ஊர் வழியாக வந்துகொண்டிருந்தபோது இரவு நேரம் வந்ததால் இங்கிருந்த சத்திரத்தில் தங்கினோம். இரவு என் மாமனைப் பாம்பு கடித்து, நஞ்சு தலைக்கேறி அவர்

இறந்து விட்டார். பாம்பினால் அவரைத் தீண்ட முடிந் தது; என்னால் அவரைத் தீண்டி அழக்கூட முடிய வில்லை; காரணம் எங்களுக்கு இன்னும் மணமாக வில்லை, என் செய்வேன்'' என்று சொல்லி அழுகின் றாள். அவளுடைய நிலையைக் கண்ட சம்பந்தப் பெரு மான் மனம் உருகி நின்றார். 'அம்மா, நீ அழவேண் டாம், கவலையும் படவேண்டாம். உனக்கு வாழ்க்கை கிடைக்கும்.' என்கின்றார். எடுத்த எடுப்பிலேயே கவ லைப்பட வேண்டாம், உனக்கு வாழ்க்கை கிடைக்கும், நலம் கிடைக்கும் என்ற ஆறுதல் கூறுகின்றார். ''என் னம்மா செய்வது, உனக்கு வாய்த்த வாழ்வு அவ்வளவு தான், கவலைப்பட வேண்டாம்''என்று பட்டும் படாம லும் சொல்லவில்லை. நம்பிக்கை ஊட்டுகின்றார்.

பின்னர் திருக்கோயிலுக்குச் சென்று இறைவனைப் பணிந்து பாடுகின்றார். அப்பெண்ணின் துன்பத்தைக் கண்டவுடன் அவருடைய உள்ளம் நெகிழ்ந்து விடுகின் றது. அதனால் இறைவனைப் பார்த்து ஒரு வேண்டு கோளை வைக்கின்றார்.

சடையா யெனுமால் சரண்நீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ இவள்உள் மெலிவே.

'இவள் உள்ளத்தில் இப்படி மெலிகின்றாளே, இது தகுமோ!' என்று கேட்கின்றாரே தவிர, 'இறந்துவிட்ட வணிகனை எழுப்பிக்கொடு' என்று கேட்கவில்லை. ஆண்டவனைப் போய் அப்படி எழுப்பிக் கொடு என்று கேட்பது அடியார்களுக்கு உகந்தது இல்லை. அடியார் எவரும் அப்படிக் கேட்டதும் இல்லை.

மடையார் குவளை மலரும் மருகல் - மருகல் என்ற இத்திருத்தலத்தில் ஓரறிவு உயிர்களான குவளை மலர் கள்கூட வாடாமல் இருக்கும் பொருட்டு அவற்றிற்கு

கருணை புரிந்து கொண்டிருக்கும் பெருமானே! உடை யாய் - எங்களையெல்லாம் உடைமையாக உடைய வனே! ஆறறிவு உள்ள இப்பெண்ணின் உள்ள மெலி வைப் போக்குவது உன் கடமையன்றோ? அவள் உள் ளம் மெலியலாமா? அவள் வருந்தலாமா? என்று கேட்கின்றார்.

'உடையாய் என்னைக் கண்டு கொள்ளே' என்பார் திருவாதவூரடிகள். உடையாய், எம்மை ஆளுடையாய், உமக்கு உடையாய் என்று இத்தனை பொருளும் தொனிக்கும் விதத்தில் இந்த வரியைப் பாடுகின்றார். மேலும் பத்துப் பாடல்கள் பாடினார். ஒவ்வொரு பாட லிலும் ஒவ்வொரு கருத்தை வைத்துப் பாடுகின்றார். கடைசிப் பாடலில் இப்பதிகத்தின் பயனைச் சொல்லு கின்றார்.

பதிகம் முடித்தபின் வணிகன் உறங்கி எழுவது போன்று எழுந்துவிடுகின்றான். அத்துடன் தன் கடமை முடிந்ததாக நினைந்து அவர் போய்விடவில்லை. அவ் விருவரையும் திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்று, மாலை மாற்றிக் கொள்ளச் செய்து அவர்களின் திரும ணத்தைத் தானே முன்னின்று முடித்து வைக்கின்றார். இதுவும் அடியார்களுக்கு உடன்பாடு. அடியவர்கள் எக் காரியத்தையும் அரைகுறையாகச் செய்வதில்லை. நாம் யாருக்கேனும், என்றேனும், எப்போதேனும் ஒரு நன்மை நடக்கவேண்டு மென்று விழைவோமானால், அது ஆயிரம் முறை திருக்கோயில் சென்று வழிபடுவ தைக் காட்டிலும், ஆயிரம் நூல்களைப் படிப்பதைக் காட்டிலும் சாலச் சிறந்தது. பிறர் துன்பம் நீக்கி, நன்மை செய்ய வேண்டும். நன்மை தேங்க மக்களுக்கு ஏதேனும் நலம் செய்ய வேண்டும் என்பதை இந்தப் பாடலின் மூலமாக நமக்குத் தெரிவிக்கின்றார்.



## 8. பசியாற்றுதல்

அங்கிருந்து மேலும் பல தலங்களுக்குச் செல்கின்றார். அப்பரும், ஞானசம்பந்தரும் மீண்டும் ஒருவரையொருவர் சந்திக்கின்றார்கள். இருவரும் சேர்ந்து திருவீழிமிழலை என்ற தலத்துக்குப் போகின்றார்கள். அந்தப் பகுதி மிகவும் வறண்டு போய்ப் பஞ்சமும், பட்டினியும் தலைவிரித்து ஆடிக் கொண்டிருந்தது. இது எப்போதும் நடப்பதுதான். அப்படி ஏன் நடைபெறுகின்றது என்று வினா எழுப்பினால் விடை காண்பது அரிது. அப்படித் துன்பத்தில் தவிக்கின்ற மக்கள் தங்கள் துன்பத்தைத் தாங்க மாட்டாததால் இறைவனை வேண்டிக் கொள்வார்கள். அந்தப் பிரார்த்தனையைச் செவியுறும் இறைவன் அவற்றைத் தீர்த்தும் வைப்பான். அப்படி அவர்கள் துன்பங்கள் தீர்ந்து செழிப்புறுகின்ற போது இறைவனை மறந்துவிடுவதும் இயற்கைதான். இறைவனை மறந்தால் துன்பங்கள் அதிகரிக்கும்; அவனை நினைத்துக் கொண்டேயிருந்தால் துன்பங்கள் படிப்படியாகக் குறைந்துவிடும். இறைவன் தன்னை ஆன்மா வணங்க வேண்டுமென்பதற்காகத்தான் துன்பங்களைக் கொடுக்கின்றானா? என்ற ஐயம் உங்கள் உள்ளத்தில் எழக்கூடும்.

அப்படியன்று. இறைவன் தந்த வளத்தைக் கொண்டு பிறர்க்கும் உதவவேண்டும். பிறர் வாழ்வு சிறக்க வேண்டுமென்று எண்ணித் தங்கள் வளத்தைச் செலவழிக்கின்றபோது, துன்பங்கள் தேயும். அதுவன்றி, தனக்குக் கிடைத்த வளம் தன்னால் சம்பாதிக்கப்பட்டது, 'நான் சம்பாதித்தேன்' என்று எண்ணினால் அதைக் கொண்டு பிறர்க்குத் தீங்கு செய்து தனக்கும் தீங்கை வருவித்துக் கொள்வான். 'எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழவோயே' என்ற புறநானூற்று வரியி

னைப் போல, 'இறைவன் கொடுத்த பொருள், இதனை எல்லோர்க்கும் கொடுப்போம்' என்று எண்ணி நல்ல தைச் செய்து கொண்டே போகவேண்டும்.

செல்வம் அளவோடு இருக்கின்றபோது மனிதனு டைய மனத்தில், 'ஏதோ, இறைவன் கொடுத்தான், நாலு பேருக்குச் சோறிடுகின்ற அளவுக்கு வசதி இருக் கின்றது' என்று மனநிறைவு கொள்ளும் பக்குவம் இருக்கும். அதுவே அளவுக்கு மிஞ்சி இருக்குமானால், யாராவது உதவி என்று கேட்டுக் கொண்டு வந்தால், 'இப்போது பார்க்க நேரமில்லை என்று சொல்லுங்கள்' என்று சொல்லி அனுப்பிவிடுவர். நாம் வளர்கின்ற நேரத்தில் ஆண்டவனை நினைப்போம்; வளர்ந்துவிட் டால் அவனை மறந்துவிடுவோம். இதுதான் மனித இயல்பு. இப்படிப்பட்ட வளர்ந்த நிலையில் பசியும், பஞ்சமும் வந்து திருவீழிமிழலையின் மக்கள் அல்லலு றுகின்றனர்.அருளாளர் இருவரும் அப்படிப்பட்ட இடங்களுக்குச் சென்று மக்கள் படுகின்ற அல்லலைப் பார்க்க மனம் பொறாமல், மக்களின் பசி போக்க இறைவனிடம் சென்று பாடிப் படிக்காசு பெற்று, ஆளுக் கொரு பக்கமாக நின்று பசிப்பிணியைப் போக்க அன் னம் அளிக்கின்றார்கள். இப்படி அந்த நாட்டில் இயற்கை வளம் பெருகுகின்ற நாள்வரையில் பேருதவி செய்து கொண்டிருக்கிறார்கள்.

பசிப்பிணியைப் போக்க வேண்டுமென்ற 1300 ஆண்டுகளுக்கு முன்னர் அப்பருக்கும், ஞானசம்பந்தருக் கும் தோன்றியது. 1300 ஆண்டுகளுக்குப் பின்னர் வந்த வள்ளல்பெருமானும் பசித்தார்க்கு உணவிட வேண்டு மென்ற அருள் உள்ளத்தோடு ஒரு தருமச்சாலையை வடலூரில் நிறுவினார். இந்தப் பணி அடியார்களால் காலந்தோறும் தொய்வின்றி நடத்தப் பெறுவது எனத் தெரிகிறது. வள்ளலார் காலத்தில் நடந்த அன்னதானம்

வேறு. இப்போது நடைபெற்றுக் கொண்டிருக்கின்ற அன்னதானம் வேறு. அப்போது அப்பருக்கு வாசி தீர்ந்த காசும், ஞானசம்பந்தருக்கு வாசி தீராக் காசும் இறைவன் கொடுத்தருள்கின்றான். தனக்கு மட்டும் வாசிதீராக் காசை ஏன் இறைவன் தருகின்றான் என்ற காரணம் ஞானக்குழந்தைக்குப் புரியவில்லை.

இறைவன் அப்பர் பெருமானுடைய தொண்டின் சிறப்பை ஞானசம்பந்தருக்கு உணர்த்தவே இவ்வாறு அவருக்கு வாசிதீர்ந்த காசைத் தருகின்றான். அவருக்கு மட்டுமல்லாமல் உலகத்தார்க்கும் உணர்த்தவே இறைவன் இத்திருவிளையாடலைப் புரிகின்றான்.

இதற்குக் காரணம் சொல்லியிருக்கின்றார்கள் அறிஞர் பெருமக்கள். நாவுக்கரசர் இறைவனைப் பாடியும் தொண்டு செய்தும் இரண்டுவிதமான செயல்கள் செய்ததால் அவருக்கு வாசிதீர்ந்த காசு கொடுத்தானாம். திருஞானசம்பந்தர் பாடுவதோடு நிறுத்திக் கொண்டதால் தான் வாசி தீராக் காசு கொடுத்தானாம்.

இந்தக் காரணத்தினால் மட்டுமா இப்படிச் செய்திருப்பான். ஞானசம்பந்தப் பெருமான் அப்பரோடு இணைந்து சென்று பசிதீர்க்கும் பணியைச் செய்திருக்க வேண்டும். அப்பர் வயது முதிர்ந்தவர். அவரைத் தனித்துப் பணி செய்யுமாறு அனுப்பிவிட்டுத் தான் மட்டும் தனியே இருந்து பணி செய்கின்றார் திருஞானசம்பந்தர். இச்செயல் சரியில்லை என்பதனாலும், இதனை அவருக்கு உணர்த்த வேண்டும் என்பதனாலும் இப்படிச் செய்தான் ஏன்று எண்ணலாம் அல்லவா.

பின்னர் ஞானசம்பந்தர் வருந்திப் பாட வாசிதீர்ந்த காசு கொடுக்கிறான்.

இப்போது ஓர் ஐயம் பிறக்கின்றது. நாளும் ஒவ்வொரு காசுதானே கொடுத்தான், ஒரே நாளில் எல்லாக்

காசுகளையும் மொத்தமாகக் கொடுத்திருந்தால் அவர்கள் அந்தப் பணியைச் செய்திருக்க மாட்டார்களா? என்பதுதான் அந்த ஐயம். இறைவன் அப்படிக் கொடுக்க மாட்டான். அப்படி ஒரே நாளில் அவர்களிடத்தில் நிரம்பக் காசு கொடுத்திருந்தால் அந்தப் பணி சிறப்புற நடந்திருக்காது. காசு நிரம்பக் கொடுத்திருந்தால் தேவைக்குப் போக மீதியை அவர்கள் மற்றவர்களிடத்தில் கொடுத்துவிட்டிருப்பார்கள் அல்லது எங்கேனும் வைத்துவிட்டுப் போய்விடுவார்கள். ஞானிகள் தேவைக்கு மட்டுமே பணம் வேண்டுமென்று கேட்பார்கள். தேவைக்கு அதிகமாக எதையும் கேட்டுப் பெற மாட்டார்கள். எதற்காகக் காசு வந்ததோ அதற்காகச் செலவழித்துவிட்டு, வெறுங்கையோடுதான் இருப்பார்கள். காசைப் பாதுகாக்கும் நோக்கம் அவர்களுக்கு வந்துவிடுமானால் தெய்வசிந்தனை அற்றுவிடும். அடியார் என்னும் உயரிய நிலை கெட்டுவிடும். அடியார் தன்மை கெட்டுவிடக் கூடாது என்பதற்காகத் தான் இறைவன் நாளும் அவர்களுக்கு ஒவ்வொரு காசாகக் கொடுத்தான் போலும்.

இதில் அடியார் கருணையும் இருக்கின்றது, இறைவன் கருணையும் இருக்கின்றது. அடியார்கள் ஆன்ம கோடிகள் பசியோடு இருக்கின்றார்கள்; அவர்கள் பசியைப் போக்க வேண்டுமென்ற கருணையினால் நாளும் இறைவனிடத்திலிருந்து காசு பெற்று ஆன்மாக்களின் பசிப்பிணியைப் போக்கிக் கொண்டிருக்கின்றார்கள். அடியார்களின் தன்மை கெடக்கூடாது என்பதுடன், ஆன்மாக்களின் பசியைப் போக்கும் பணியில் அடியார்களுக்கு உதவவேண்டும் என்ற கருணையினால் இறைவன் அவர்களுக்குக் காசு கொடுத்துக் கொண்டிருக்கின்றான். இப்படிக் காசைப் பெற்று அவர்கள் பசிப்பிணியைப் போக்கியதில் இருந்து ஒரு செய்தி நமக்குத் தெரிகின்றது.

உயிர்கள் பசி, பட்டினியோடு இருக்கக் கூடாது; அப்படி இருந்தால், முடிந்த அளவுக்கு அவர்களது பசியைத் தீர்க்க வேண்டுமென்றே அடியார்கள் கருதுவர். அப்படியானால் அடியார்கள் பசித்திருந்தால்தான் அப்பிணியைப் போக்குவார்களா? மற்றவர்கள் பசித்திருந்தால் விட்டுவிடுவார்களா? என்று ஐயம் எழக்கூடும். அப்படியன்று. யார் பசித்திருந்தாலும் அவர்கள் பசியைப் போக்குவதென்பது அடியார்களின் உள்ளக் கிடக்கை.

ஒரு நாடோ, அல்லது நகரமோ அல்லது ஒரு வீதியோ அல்லது ஒரு வீடோ அல்லது ஒரு குடும்பத்தார் பசித்திருக்க நாம் பார்க்கக் கூடாது. ஒரு குறித்த காலத்தில்தான் இன்னார், இனியார் என்று பார்க்கலாம். அதுவும் ஒரு குறித்த செயலுக்குத்தான் அப்படிப் பார்க் வேண்டும். ஆனால் பசித்திருப்பின் இன்னார், இனியார் என்று பார்க்கக் கூடாது. நல்லவனுக்கும் உணவு கொடுக்கலாம்; கெட்டவனுக்கும் உணவு கொடுக்கலாம்; மகாபாவிக்கும் உணவு கொடுக்கலாம். உணவு கொடுப்பதில் மட்டும் பேதமே காட்டக் கூடாது.

திருவீழிமிழலையில் இருந்தவர்கள் அனைவரும் அடியார்கள் அல்லர். மூவகைத் திறத்தினரும் அந்த ஊரில் இருந்தார்கள். அனைவருமே பசியினாலும், பஞ்சத்தினாலும் அவதியுற்றிருந்தனர். அப்படியானால், 'நல்லார் ஒருவர் உளரேல் அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை' என்று பழமொழி இருக்கின்றதே!! அப்படியிருக்கும் போது அங்கு ஏன் பஞ்சம் வந்தது என்று உங்களுடைய உள்ளத்தில் வினா வரலாம். 'அடியார்கள் இருந்திருப்பார்களே! அவர்களுக்காகவாவது வளம் சேர்ந்திருக்கக் கூடாதா' என்பதற்குண்டான விடையை எங்கள் இராமநாத ஐயா கூறியவாறே உங்களுக்குச் சொல்லுகின்றேன்.

அடியார்கள் அங்கே வாழ்ந்திருக்கலாம்; அவர்களைவிடச் சற்றுக் கூடுதலாக அஞ்ஞானிகளும் வாழ்ந்திருக்கலாம்; அஞ்ஞானிகளின் இயல்பின்படி அவர்கள் மற்றவர்களுக்குத் துன்பத்தைக் கொடுத்துக் கொண்டிருப்பார்கள். ஞானிகளாக இருப்பவர்கள் அவ்வாறு அவர்கள் செய்யும் துன்பத்தைக் கண்டும் காணாமல் மௌனமாக இருந்துவிடுவார்களேயானால் அந்த நாடும் துன்பத்திற்கு ஆளாகும்; அந்தத் துன்பத்தில் இவர்களும் ஆட்பட்டு அல்லலுறுவார்கள். ஏன்?

ஞானிகளின் கடமை யாது? அநியாயங்கள் நடக்கின்றபோது, மற்றவர்கள் மௌனமாக இருப்பினும், தாங்கள் அவற்றைச் சுட்டிக்காட்டிக் கண்டித்துவிட வேண்டும். அதனால் அவர்களுக்கும் இடர் வரலாம். அவர்கள் அதையும் பொருட்படுத்தாமல் தவறுகளையும், அநியாயங்களையும் சுட்டிக் காட்டிவிட வேண்டும். அவர்கள்தாம் ஞானிகள். ஞானிகளாக இருந்தும், தவறைச் சுட்டிக்காட்டும் தகுதியும், திறமும் தமக்கிருந்தும், சுட்டிக்காட்டாமல் மௌனம் சாதிப்பது என்பது ஒரு வகையான பிழை. அந்தப் பிழைக்காகவே அந்த நாடு அல்லலில் அகப்படுவதோடன்றி இவர்களும் அந்த அல்லலில் அகப்படுவர். இதுதான் சரியான கருத்து.

ஞானிகள் இருக்கின்ற குடும்பங்களில் அல்லல் இருக்குமானால், அல்லல் குடும்பத்தாரோடு நில்லாமல் ஞானிகளையும் சாரும். இதற்கொரு பழமொழி உண்டு. ''அரசமரத்தைப் பிடித்த சனியன் பிள்ளையாரையும் பிடித்ததாம்.'' அந்தச் சூழலில் யாரிருந்தாலும் பிடிக்கும் என்று தெரிகின்றது. சாராயக் கடைக்குப் பக்கத்தில் சன்மார்க்கிக்கு என்ன வேலை? மதுவிலக்கு நேரம். சாராயம் வாங்க வருகின்றவர்களையும், சாராயம் குடிப்பவர்களையும் பிடிப்பதற்கு என்று காவலர்கள் வருகின்

றார்கள். ஒருவர் அந்த இடத்தில் போய் நின்று வேடிக் கைப் பார்த்துக் கொண்டிருக்கின்றார். இவர் நின்ற காரணம் வேறு. ஆனால் வருகின்ற காவலர்களுக்கு இவர் யாரென்று தெரியாதல்லவா? நானே அங்கே போய் நின்று கொண்டிருக்கின்றேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு ஒரு சந்தேகம் வரத்தானே செய்யும். 'ஐயா, அங்கே ஏன் போனார்? அவருக்கு அங்கே என்ன வேலை?' என்று கேள்வி கேட்கத் தோன்றும் இல்லையா? அப்படித்தான் ஞானிகள் தேவையற்ற இடங்களுக்குப் போகமாட்டார்கள். தேவையானதைச் சுட்டிக் காட்டிவிட்டுப் போய்க் கொண்டே இருப்பார்கள். ஆனால் திருஞானசம்பந்தர் அப்படியல்லாது உயர் நெறிகளை மக்களுக்கு உணர்த் தவே வந்தார். குற்றங்களைச் சுட்டிக்காட்டி, குற்றத்திற் குத் தண்டனை அனுபவித்துக் கொண்டிருந்தாலும் அவர்களை மேலும் நோக வைக்காமல் அவர்களுக்கு ஆக வேண்டியதைச் செய்யவே வந்தவர். எனவேதான் திருவீழிமிழலைப் பகுதி பஞ்சத்தால் துன்புற்றுக் கொண்டிருந்த நேரத்தில் மக்களின் துயர் தீர்த்துக் கொண்டிருந்தார்.



## 9. வழிபடச் செய்தல்

அங்கிருந்து அடியவர் இருவரும் பல தலங்களை யும் தரிசித்துக் கொண்டு திருமறைக் காட்டிற்குச் சென்ற னர். அந்தத் தலத்தைப் பற்றி ஒரு வரலாறு கூறப்படுகி றது. ஒரு கூட்டம் திட்டமிட்டே தமிழ் நாட்டில் உள்ள திருக்கோயில்களின் பெயர்களையும், திருத்தலங்களின் பெயர்களையும், அத்தலங்களில் உறையும் இறைவன், இறைவியின் பெயர்களையும் வேற்று மொழியில்

மொழிபெயர்த்து, அவை நிலைபெறுமாறும் செய்து விட்டது. அதனால்தான் 'திருமறைக்காடு,' 'வேதாரண் யம்' ஆனது 'திருமுதுகுன்றம்,' 'விருத்தாசலம்' ஆனது; 'திருமயிலாடுதுறை,' 'மாயவரம்' ஆனது.

திருமறைக் காட்டில் உள்ள திருக்கோயிலுக்கு வந்து இறைவனை வேதங்கள் வழிபட்டதாகவும், பின் னர் வேறு யாரும் வந்து வழிபடக்கூடாது என்பதற்காகக் கதவை மூடிவிட்டுப் போனதாகவும் வேதாரண்யம் பற்றிய தலபுராணம் கூறுகிறது. அன்றைக்கு மூடப் பட்ட கதவு திருஞானசம்பந்தர் காலம் வரையிலும் திறக்கப்படவில்லை. என்ன காரணம் என்றும் தெரிய வில்லை.

வேதம் என்பது சமஸ்கிருத மொழியில்தான் இருக் கின்றது என்பது ஒரு சாராரின் கருத்து. சமஸ்கிருத மொழிக்காரர்கள் தமிழ் மக்கள் இறைவனை வழிபடுவ தைக் கூடத் தடுத்து நிறுத்தியிருக்கிறார்கள் என்று தெரி கின்றது. தமிழர்கள் கோயிலுக்குச் சென்று வழிபடு வதை விட உலகியலுக்கு அவர்கள் இரையாகட்டும் என்ற எண்ணத்துடன் செய்த ஒரு கொடுஞ் செயலாக இது தோன்றுகிறது.

அண்மைக் காலத்தில் 'பொள்ளாச்சி மகாலிங்கம்' அவர்கள் ''மறைக்காட்டில் ஒரு மாணிக்கம்'' என்ற நூலை வெளியிட்டார்கள். அதில் சுதந்திரப் போராட்ட வீரர் ஒருவரைப் பற்றிய செய்திகள் வந்திருந்தன. தலைப்பைப் பார்த்து மகிழ்ந்து ஓர் அஞ்சல் எழுதினேன்.

திருமறைக் காட்டில் அப்பரும், திருஞானசம்பந்த ரும் வருகின்றனர். திருக்கோயில் கதவுகள் அடைக்கப் பட்டுக் கிடக்கின்றன என்று அன்பர்கள் தெரிவிக்கின் றார்கள். அப்பரைக் கதவு திறக்கப் பாடும்படி ஞானசம்

பந்தப் பெருமான் அன்புடன் வேண்டுகின்றார். 'அன் பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்!' அப்பர் பாடுகின் றார். கதவு திறக்கின்றது. பின்னர் ஞானசம்பந்தர் கதவு மூடும்படி பதிகம் பாடுகின்றார். கதவு மூடிக் கொள்கின் றது. இந்த இடத்தில் பல தடைகளும், விடைகளும், விளக்கங்களும் தேவைப்படுகின்றன.

இங்கு முக்கியமாகக் கருத்தில் இருத்திக் கொள்ள வேண்டிய கருத்து ஒன்று உள்ளது. அடைபட்டுக் கிடந்த திருக்கோயில் கதவுகளைத் திறந்தும், மூடியும் இருக்கு மாறு இரு அடியவர்களும் பாடுகின்றார்கள். யாரோ, எதனாலோ அடைத்துவிட்ட திருக்கோயிலைத் திறந்து விடுமாறு கருணையினால் பாடி ஏற்பாடு செய்கின்றார் திருஞானசம்பந்தர். சமஸ்கிருத மொழியாளர்களுக்கு அந்த நல்ல உணர்ச்சியும், நல்ல எண்ணமும் இல்லை போலும்! இதைக் கூறினால் பலருக்கும் சினம் எழும்; உண்மைக்கு முன்னால் அது எழுந்த வேகத்தில் விழும்!

அப்பரும் ஞானசம்பந்தரும் வாயிற்கதவம் திறந்து மூடிய செய்தியைப் பற்றி சேக்கிழாரும் சற்றுத் தயங் கியே செய்திகளைச் சொல்லியிருக்கின்றார் என்று எனக் குள் ஓர் எண்ணம். எல்லாக் காலங்களிலும் சற்றுத் தயக்கத்தோடு வாழ்பவர்கள் இருக்கின்றார்கள் அல் லவா!

திருக்கதவைத் திறப்பிப்பதற்கு ஞானசம்பந்தர் தன் னைப் பெரியவர் என்று கருதிக் கொண்டு தான் முன்னே பதிகம் பாடவில்லை. அப்பரைப் பார்த்து வணங்கி, 'அப்பரே, பாடுங்கள். வேதங்களால் பூசிக்கப் பட்டு அடைத்துவிட்டுப் போன கதவைப் பதிகம் பாடித் திறவுங்கள்' என்று சொல்லுகின்றார். ஏன்? தான் மறை யவர் குலத்தில் பிறந்தவன், நால்வேதம், ஆறங்கம் பயின்றவன், அம்மையின் அருட்பாலை உண்டவன்,

அதனால் நான் முதலில் பாடினால் என்னால்தான் கதவு திறந்தது என்று இருத்தல் கூடாது என்றும், தமிழ் மறைக்குத் தெய்வீக ஆற்றல் உண்டு, அதனால் கதவைத் திறக்க முடியும் என்பதை அப்பர் சுவாமிகள் வாயிலாக உலகுக்கு நிரூபிக்கவும் விரும்புகின்றார்.

'பண்ணின் நேர்மொழியாள்..' என்ற பதிகத்தைப் பாடுகின்றார். இதை ஏன் பாடுகின்றார் என்று ஒரு சிந்தனை. 'உய்த்துணர்தல்' என்ற உத்தியால் இந்தக் கருத்தை உங்களுக்குச் சொல்லுகின்றேன். நேராக அறிந்த பொருள் அன்று இது. பண்ணின் நேர் மொழி யாள் உமை பங்கரோ - உள்ளம் என்ற கோயில் மூடப்பட்டிருக்கின்றது. ஆன்மா என்ற வெளியில் ஆண் டவன் ஒளி இருக்கின்றது. வேதங்களைப் படித்துப் படித்து மனம் குறுகிக் கிடக்கின்றது. அப்படிக் குறுகிக் கிடக்கின்ற மனமென்ற கதவு மூடப்பட்டிருக்கின்றது. அதைத் திறந்து அருள் புரியுங்கள் என்று கேட்டுக் கொள்கின்றார்.

அம்மையும் அப்பனும் மகிழ்ந்து பேசிக் கொண்டி ருக்கின்றார்கள். இதனைத் தம் ஞானக் கண்ணினால் கண்ட அப்பர் பெருமான், 'பண்ணின் நேர்மொழியாள் உமைபங்கரோ' என்று பாடுகின்றார். நாங்கள் மண் ணில் வாழ்கின்றவர்கள். உங்களை வலம் வந்து வணங்க வேண்டாமா! அதனால் கதவைத் திறந்து உங்களைக் காண்பதற்கு அருள் செய்யுங்கள் என்று வேண்டுகின் றார்.

பிள்ளைகள் பாடுவது பிள்ளைத் தமிழ் அன்றோ! அப்பர் பெருமான் பாடுவதைக் கேட்டுத் தம்மை மறந்து போயிருக்கிறார் ஞானப்பிள்ளை. பத்துப் பாடல்கள் பாடியும் கதவு திறக்கப்படவில்லை என்றவுடன் சோர்ந் துவிடுகின்றார். கடைசியாகச் 'சரக்கென்று திறமினோ!'

என்று பாடுகின்றார். கதவு திறக்கின்றது. இருவரும் அடியார் கூட்டத்துடன் உள்ளே சென்று இறைவனை யும், இறைவியையும் வணங்கி வாழ்த்திப் பாடுகின்றார் கள். பின்னர் கோயிலைவிட்டு வெளியே வருகின்ற போது அப்பர் ஞானசம்பந்தரைப் பார்த்து, திறந்த கதவும் மீண்டும் மூடவும் தாங்கள் பதிகம் பாட வேண் டும் என்று கேட்டுக் கொள்ள அவர் 'சதுர்மறை.....!' என்று தொடங்கும் பதிகத்தைப் பாடுகின்றார். இவர் முதல் பாடலைத் தொடங்கியவுடனே கதவு மூடிக் கொள்கின்றது.

அப்பர் பெருமான் பத்துப் பாடல்கள் பாடிய பின்னர்தான் கதவுகள் திறந்தன. ஆனால் ஞாசம்பந்தப் பெருமான் ஒரு பாடலைப் பாடத் தொடங்கியவுடனே கதவு மூடிக் கொண்டது.

இதற்குப் பெரிய புராணத்தை விளக்க வந்த ஆசிரி யர்கள் சொன்ன காரணம்: நால்வகை நெறியைப் பரப்ப நால்வர் பெருமக்கள் வந்தனர். அவருள் பிள்ளைமை நெறியைப் பரப்ப வந்தவரே ஞானசம்பந்தப் பெரு மான். தொண்டராக வந்தவரே அப்பர் பெருமான். தோழராக வந்தவரே சுந்தரர். ஞானப் பாங்கோடு துணையாக வந்தவரே மாணிக்கவாசகர். அதனால்தான் அவர் தனியே நின்றுவிடுகின்றார். ஞானிகள் எப்போ தும் தனியேதான் நிற்பார்கள். அதனால்தான் 'மூவர் தமிழ்' என்று வந்தது. மூவர் தமிழையும் பிழிந்தெடுத் தால் அது மாணிக்கவாசகர்.

இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ் எனத் தமிழ் மூன்றல்லவா! இயற்றமிழ் அப்பர் பெருமான்! இசைத் தமிழ் ஞானசம்பந்தப் பெருமான்! நாடகத் தமிழ் சுந்தரமூர்த்தி சுவாமிகள்! இம்மூன்றின் முடிவு - சாரம் திருவாசகம்! - 'மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர்

தமிழ் கேட்கும் முக்கட் செவிக்கு என்மொழி ஏற்குமோ' என்பார் தாயுமானவ சுவாமிகள். இந்த நால்வரிலே இருவர் இயற்றமிழையும், இசைத் தமிழையும் பாட வந்தவர்கள். இயற்றமிழால் பாடிக் கதவைத் திறக்க வைத்தார் அப்பர். இசைத் தமிழால் பாடிக் கதவை மூட வைத்தவர் ஞானசம்பந்தர்.

இதற்கு விளக்கம் சொல்ல வந்தவர்கள் மகனென வந்தவர் ஞானசம்பந்தர். அவருக்கு அதிகம் வேலை கொடுக்கக் கூடாது என்பதற்காக அவர் பாடத் தொடங் கியவுடனே கதவை மூடிவிட்டார் பெருமான் என்று சொல்லுவார்கள். அப்பர் பெருமான் தொண்டர். அவரை வேலை வாங்க வேண்டும் என்பதற்காகப் பத்துப் பாடல்களையும் பாட வைத்தார் இறைவன் என்றும் சொல்லுவார்கள். பிள்ளை என்பதற்காக ஒரு வகையாகவும், தொண்டு செய்ய வந்தவர் என்பதற்காக மற்றொருவகையாகவும் அம்மையப்பர் இப்படி நடந்து கொண்டார் என்பர். இது ஆத்திகப் பெருமக்களின் கருத்து.

இப்படிச் சொல்லுவதால் கடவுள் பொதுவானவன் என்ற கருத்து பொருந்தாது போய்விடுகின்றது. அத னால் நாத்திகவாதிகள் இந்தக் கருத்தை எடுத்துக் கொண்டு இன்னொரு வகையாக விளக்கம் சொல்லுகின் றனர். ஞானசம்பந்தர் பிராமணர், அப்பர் பெருமான் சூத்திரர். அதனால் அப்பரிடம் அதிகமாக வேலை வாங்கியும், பிராமணர் என்பதால் சலுகையும் காட்டிய கடவுளும் ஓர் அயோக்கியன். அதனால்தான் நாங்கள் கடவுளே வேண்டாமென்று சொல்லுகிறோம் என்பார் கள்.

இப்போது ஆத்திகர்கள் சொல்லுவதைப் பார்த்தா லும் கடவுள் பொதுவானவன் அல்ல என்று தெரிகின்

றது. நாத்திகர்கள் சொல்கின்ற கருத்துப்படிப் பார்த்தா லும் கடவுள் பொதுவானவன் அல்ல என்றே தெரிகின் றது.

சிவப்பிரகாசர் நால்வர் நான்மணிமாலையில்

**'வீட்டிற்கு வாயிலெனும் தொடை சாத்து சொல் வேந்த, பொது**
**ஆட்டிற்கு வல்லன் ஒருவற்கு ஞான அமுதுஉதவி**
**நாட்டிற் கிலாத குடல்நோய் நினக்குமுன் நல்கினும் என்!"** என

வினவுவார்.

எல்லாரையும் பொதுமையாகப் பார்க்கின்றவன், பொதுவில் நிற்பவன், வல்லவன், ஒப்பற்றவன், ஒரு வர்க்கு ஞான அமுது உதவி, உமக்கு மட்டும் யாருக் குமே இல்லாத வயிற்று வலியைக் கொடுத்தானே, ஏன்? பொதுவானவன் இப்படிச் செய்யலாமா? எனக் கேட்கின்றார்.

படித்தவர்களுக்கு இந்த நுட்பம் தெரிந்திருக்க வேண்டும். ஆனால் அவர்கள் உணர்ந்தார்களா என்று தெரியவில்லை. நாட்டிற்கு என்ற சொல் 'நாட்டின்கண்' என்று வரவேண்டும். ஆனால் 'நாட்டிற்கு' என்று வரவ ழைக்கின்றார். இதனை உருபு மயக்கம் என்று உரையாசி ரியர்கள் எழுதுவார்கள். கு - இருள், கண் - ஒளி. இருளில் இருப்பவர்களுக்கு இந்த உண்மை சொல்லி லேயே விளக்கம் அமைய வேண்டும் என்பதற்காக உருபு மயக்கத்தைக் கொண்டு வந்து அங்கே வைத்தார். ஏனென்றால் பகுத்தறிவுவாதிகளும், ஆத்திகர்களும் வைதிகப் பெருமக்களும் மயங்கி நின்று மேற்கண்ட விளக்கங்களைத் தங்கள் தங்கள் போக்கிலே சொல்லிக் கொண்டிருக்கின்றார்கள். உண்மையாக உணர்ந்தார்க ளில்லை என்பதனால் உருபு மயக்கத்தை வருவித்துப் பாடினார். நேரடியாக அவர்களை அஞ்ஞானிகள் என்று சொல்லாமல் பக்குவமாகச் சொல்லிவிட்டார். 'நீங்கள்

எல்லாம் அஞ்ஞானிகள், உங்களுக்கு அவர்களுடைய நிலை என்ன என்று புரியவில்லை' என்று நேரடியாகச் சுட்டிக் காட்டினால் அது வெறுப்பை உண்டாக்கிவிடும் என்று எண்ணி

"...நாட்டிற்கு இலாத குடர்நோய் நினக்குமுன்

நல்கினுமென்!

பாட்டிற்கு நீயு மவனுமொப் பீரெப் படியினுமே."

என்று பாடுகின்றார். உங்கள் இருவருடைய பாட்டும் சமம் என்று இறைவன் எண்ணினான். அதனை நானும் உணருகின்றேன் என்று சொல்கின்றார்.

அந்தக் கருத்தை வைத்துக் கொண்டு ஆய்வோமானால், பகுத்தறிவுவாதிகள் சொல்லுவது போன்று ஆரியன், தமிழன் என்றோ, பிராமணன், சூத்திரன் என்றோ கூறும் கருத்து பொருந்துவதாக இல்லை. ஆண்டவனுக்குக் குழந்தை, தொண்டன் என்ற பேதம் இல்லை.

"பண்ணின் நேர் மொழியாள்உமை பங்கரோ...' என்று பாடுவதைக் கேட்ட இறைவனும் இறைவியும், குழந்தை நம்மை உணர்ந்து பாடுகின்றான் போலும்! அவனுடைய பாடல்தான் எவ்வளவு அழகாக இருக்கின்றது! அவன் முழுதுமாகப் பாடட்டுமே! என்று பாடலைக் கேட்கும் ஆர்வத்தில் கதவைத் திறக்காமலே இருந்தார்கள். பாடல் முடியும் நேரத்தில் அப்பர் சுவாமிகள் வேகப்படுகின்றார். திருமறைக் காட்டின் அடைத்த கதவுகள் திறக்கின்றன.

அப்பர் சுவாமிகள் பாடுகின்ற பத்துப் பாடல்களும் முடியும்வரை கதவு திறக்கவில்லை. கதவை மூடி வைத்துக் கொண்டே கேட்டுக் கொண்டிருந்தான். ஞானசம்பந்தப் பெருமான் பாடுகின்றபோது, பாடல் தொடங்கியவுடனே கதவை மூடிவிட்டான். பதிகம் முழுவதும் பாடி முடித்த பின்னர் கதவை மூடியிருந்தால் அப்போதுதான்

பேதமே வரும். அப்பர் பாடும்போது கதவை மூடிக் கொண்டு பெருமான் கேட்டான். ஞானசம்பந்தர் பாடும் போது மட்டும் திறந்து வைத்துக் கொண்டே கேட்டான் என்ற பேதம் எழும். எனவேதான் முதல் பாடலைப் பாடவருகின்றபோதே கதவை மூடிவிடுகின்றான். திரு ஞானசம்பந்தரும் கதவு மூடிக் கொண்டதே என்று முதல் பாடலோடு நிறுத்திக் கொள்ளவுமில்லை. முழுப்பதிகத் தையும் பாடி முடிக்கின்றார். எனவே இருவர் பாடலை யும் கேட்கின்றபோது எந்தப் பேதத்தையும் காட்டாமல் கதவை மூடி வைத்துக் கொண்டே இறைவன் கேட்டுக் கொண்டிருக்கின்றான்.

''முன்னே இருந்து கூறின் முகமனே ஒக்கும்'' என்பார் அப்பர். கதவைத் திறந்து வைத்துக் கொண்டு பதிகத்தைக் கேட்டால் நாணமாக இருக்கின்றதென்று எண்ணிக் கதவைத் திறக்காமல் இருந்து கேட்டான். கேட்டால் அது முகமனாகிவிடும். முகமன் கேட்கக் கூடாது என்பதற்காக கதவை மூடி வைத்துக் கேட்டான். மேலும் தமிழால் அனைத்தும் நடக்கும் என்ற உண் மையை மக்கள் உணரவேண்டும் என்ற நல்லுணர்ச்சி யோடு ஞானசம்பந்தர் அப்பரைப் பாடச் சொன்னார். அவர் பல்வேறு தலங்களுக்குச் சென்று பதிகங்கள் பாடி, மக்களை நல்வழிப்படுத்திக் கொண்டு அவர்கள் நெறி யிலே நிற்குமாறும், அவர்களுக்கு நெறி இன்னதென் றும் உணர்த்திக் கொண்டும் இருந்தார். அவர் பாடல் பாடுவதற்கு மட்டும் இம்மண்ணுலகிற்கு வரவில்லை.

தியாகராசர் என்பவர் திருவையாற்றிலேயே இருந்து பாடிக்கொண்டு இருந்தார். ஆனால் நம் நால்வர் பெருமக்களில் மூவர் தலங்கள் தோறும் சென்று பாடுகி றார்கள். அதனால் அவர்கள் கடவுளை அந்தந்தக் கோயி லில் சென்று வணங்கப் போனதாகக் கொள்ளக்கூடாது. கடவுள் இந்தக் கோயிலில்தான் இருக்கின்றான்; அந்தக்

கோயிலில் இல்லை என்று அவர்கள் எண்ணவில்லை. கோயில்கள் பொது இடங்கள். அந்தக் கோயில்களுக்குச் சென்று பாடுகின்றபோது, அங்கே மக்களைச் சந்திக்கின்ற வாய்ப்பும், அவர்களை நன்னெறிப் படுத்தும் வாய்ப்பும் கிட்டும்.

நம்முடைய மனம் விரிவடைய வேண்டும். அதற்கு அன்பு பெருக வேண்டும். அப்போதுதான் இறைவன் அருளைப் பெறமுடியும். தான் பெற்ற அனுபவத்தை மக்கள் அனைவரும் பெறவேண்டும். அதற்கு ஒரே வழி நாம் ஆங்காங்கு சென்று மக்களோடு பழகுதல் வேண்டும். பரிவு காட்டுதல் வேண்டும். அப்படிப் பழகுகின்றபோது அவர்களும் பயனடைவர். நம்முடைய மனமும் விரிவடையும். உதாரணமாக, நாம் வீட்டைவிட்டு வெளியே போகாவிட்டால் அனுபவமே பெற முடியாது. அப்படிப் போய்ப் பலரோடு பழகுகின்றபோது, பிறருடைய உள்ளம், உணர்வுகள் அனைத்தும் தெரியும், அனுபவம் பெருகும். இப்படி அனுபவம் பெருகப் பெருக மனம் விரிவடையும். அதன் முடிவில்

> **"யாதும் ஊரே யாவரும் கேளிர்**
> **தீதும் நன்றும் பிறர்தர வாரா"**

என்பதை உணர்வோம். நாம் செய்த நல்வினை, தீவினைக்கேற்பத்தான் நமக்கு நன்மையும், தீமையும் வருகின்றதென்று தெரிந்துகொள்ள முடியும். அவை பிறரால் வருவன அல்ல என்றும் உணர்வோம். அப்படி உணரப் பழகுவதோடு, பிறர்க்கு உணர்த்தவும் பழகலாம்.

ஞானசம்பந்தப் பெருமான் தாம் மேற்கொண்ட சுற்றுலாவிலே மக்களோடு கலந்து பழகுகின்றார். அப்படிப் பழகுகின்றபோது, இன்னார், இனியார் என்று

பேதமின்றிப் பழகுகின்றார். யார்வந்து துன்பம் என்று சொன்னாலும் அதற்குத் தீர்வு காண முயற்சிக்கின்றார். இறைவனிடத்தில் வேண்டுகின்றார். தெய்வீக நலம் உடைய ஒரு மனிதன், தன்னை மட்டும் காப்பாற்றிக் கொண்டு பொருள் தேடிப் போவதில்லை.

ஞானசம்பந்தப் பெருமான் தாம் மேற்கொண்ட சுற்றுலாவில் யாரிடத்திலும் சென்று பொருள் கேட்டதாகத் தெரியவில்லை. இறைவனிடத்தில்தான் கேட்டார். அதிலும் 'இதுவோ எமையாளுமாறு...' என்று குறிப்பாகத் தெரிவித்திருப்பாரேயன்றி, நேரடியாகக் கேட்கவில்லை. அவர் சுற்றுலா வந்தது பொருள் கருதி வந்த சுற்றுலா அன்று. இறைவன் அங்குதான் இருக்கின்றான் என்று எண்ணியும் வரவில்லை; இறைவனை வழிபடுவதற்காகவும் வரவில்லை. ஆங்காங்கு இருக்கின்ற மக்களுக்கு ஆறுதல் சொல்லவும், அன்பு நெறி காட்டவும், இந்த மனித சமுதாயத்திற்கு எப்படியேனும் அன்பு நெறியை ஊட்ட வேண்டும் என்றும், நன்னெறியில் நிறுத்த வேண்டுமென்றும், அவர் உள்ளம் விழைந்தது. மக்களுக்குரிய நீதிகளை எழுதி வைக்க வேண்டுமென்று அவர் எண்ணவில்லை. அப்படி எண்ணியிருந்தால் இருந்த இடத்தில் இருந்துகொண்டே அவற்றையெல்லாம் எழுதி வைத்துவிட்டுப் போயிருக்கலாம். மாறாக ஆங்காங்கே சென்று மக்களிடத்தில் பழகுகின்றார்; அவர்களுக்கு இருந்த சிக்கல்களுக்குத் தீர்வு காண்கின்றார்; ஏதேனும் துன்பங்களைச் சொன்னால் அதற்குரிய உபாயங்களைச் சொல்லுகின்றார்.

பெரியவர்கள் ஏதோ கடவுளை வழிபடுங்கள் என்று உபதேசம் செய்வதோடு நின்றுவிடாமல், வாழ்வில் ஏற்படும் துன்பங்களுக்கு ஏதேனும் ஒரு வகையில் தீர்வு காணவும் உதவுவார்கள். அந்த உபாயம் என்ன? இறைவனிடத்தில் வேண்டுதல். அப்படி அவர்களே வேண்டி அந்த உபாயத்தைச் சொல்லுவார்கள்.

அப்போது பாண்டிய நாட்டில் சமண சமயம் மிகவும் பல்கிப் பெருகி விளங்கிய காலம். பாண்டிய மன்னனும் சமண சமயத்தைச் சார்ந்திருந்தான். சமணர்கள் இயற்கை நெறிக்குப் புறம்பானவர்கள். பெண்ணோடு இணைந்து வாழ்வதை மறுத்தவர்கள். சீவகாருண்யம் என்ற பெயரால் பல துன்பங்களைச் சேர்த்தவர்கள். தெய்வ நம்பிக்கையே இல்லாதவர்கள். அவர்களது கோட்பாடுகள் எல்லாம் மக்கள் நல்வாழ்வுக்கு இடர்தருவன. இன்னல் விளைவிப்பன. அச்சமயக் கோட்பாடுகள் அந்தக் காலத்திலும் இந்தக் காலத்திலும் அச்சமயத்தவராலேயே ஏற்று, போற்றி ஒழுகப்படவில்லை.

ஆண்டவனே ஆணும் பெண்ணும் இணைந்த கோலத்தில் அம்மையப்பராகத்தானே காட்சி கொடுக்கின்றான்! உலகில் வாழும் எறும்பு முதல் யானை ஈறாக உள்ள அனைத்து உயிர்களும் ஆணும் பெண்ணுமாகத் தானே வாழ்கின்றன. அதுதான் இயற்கை. அதுதான் கடவுள் நெறி. அந்தநெறிக்கு மாறாகச் சமணர்கள் வாழ்ந்தார்கள்.

காலமாற்றம் என்பது எல்லாக் காலங்களிலும் உண்டு. உதாரணமாக எவ்வளவோ காலமாக திருப்பதியும், திருத்தணியும் இருக்கின்றன. சிதம்பரம் இருக்கின்றது. பஞ்சபூதத்தலங்கள் இருக்கின்றன. நினைத்தாலே முத்தியளிக்கும் திருவண்ணாமலை இருக்கின்றது. இன்றும் அங்கே சித்தர்களும், முத்தர்களும் வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள் என்பது கண்கூடான செய்தி. ஞானசம்பந்தப் பெருமான் திருவண்ணாமலைக்கு வருகின்ற போது, 'அண்ணாமலை தொழுவார்வினை வழுவா வண்ணம் அறுமே' என்று மலையைத் தொழுதாலே, தொழுதாருடைய வினைகள் தப்பாமல் போய்விடும் என்கின்றார். இப்படிப் பெரியவர்கள் எல்லாம் வழி காட்டியிருந்தாலும் இன்றைக்கு 'ஐயப்பா'வுக்கு மட்டும் ஏன் இவ்வளவு கூட்டம்? இதுதான் கால மாற்றம்

என்பது. அங்கே போனால் எல்லாம் நடக்கும் என்று சொல்லுகின்றார்கள். அதனால் போகின்றார்கள். நம் மனத்தில் இருக்கின்ற சபலங்கள் நம்மை அங்கே ஓடச் செய்கின்றன. இப்படியே மாற்றங்கள் அவ்வப்போது நிகழ்ந்து வருகின்றன. இவை தவிர்க்க முடியாதனவாக அமைகின்றன.

மக்கள் மனம் இப்படி மாறிக் கொண்டேயிருக்கும். ஆனால் எப்போதும் ஞானிகள் மனதில் மாற்றமிருக்காது. சபலமுடைய சராசரி மக்களைத்தான் அவாக்கள் மாற்றிக் கொண்டே இருக்கும். அதுபோன்று அக் காலத்திலும், அரசனும் சமண சமயத்திற்கு ஆட்பட்டுவிட்டான். அவனும் சராசரி மக்களினின்றும் மாறுபட்டவன் அல்லன். அரசனுடைய போக்கைப் பாண்டிமாதேவியும், மந்திரி குலச்சிறையாரும் ஆதரிக்கவில்லை. சைவ நெறியினின்றும் மாறுபடுவதை விரும்பவும் இல்லை.

இவர்கள் இருவரும் சம்பந்தப் பெருமானின் பெயரையும், புகழையும் கேள்விப் படுகின்றனர். அவரை எப்போது பார்ப்போம் என்று இருவரும் ஏங்கிக் கொண்டிருக்கின்றார்கள். ஞானசம்பந்தப் பெருமான் இறைவன் கொடுத்த பாலை உண்டார் என்று கேட்ட அளவில் பால் சுரந்தது பாண்டிமாதேவிக்கு. அப்படியானால் அவர் உள்ளத்தில் எவ்வளவு அன்பு இருந்திருக்க வேண்டும்!

இப்படிக் கூட இருக்குமா? நடக்குமா? என்ற கேள்விகள் மனதில் எழும். ஞானசம்பந்தர் இருப்பதோ சீர்காழியில். அரசி இருப்பதோ பாண்டி நாட்டில். ஒருவரை ஒருவர் காணாத போதும், காதால் செய்தியைக் கேட்ட அளவில் பால் சுரந்தது என்றால் நம்புவதற்குக் கடினமாக இருக்கின்றது! என்னுடைய கண் முன்னே நடந்த ஒரு செய்தியைக் கூறுகின்றேன்.

அமெரிக்கத் தம்பதியர் - என்னிடத்தில் பாடம் கேட்பதற்காக இங்கே வந்திருந்தார்கள். அவர்களுக்குப் பாடம் நடத்திக் கொண்டிருந்தேன். அவர்களுக்குக் குழந்தை பிறந்து ஓரிரண்டு ஆண்டுகள் இருக்கும் என நினைக்கிறேன். பால் கொடுப்பதை நிறுத்திவிட்டிருந் தார்கள். பாலும் வற்றிவிட்ட நேரம் அது. ஒருநாள் ஞானசம்பந்தப் பெருமானைப் பற்றிப் பாடம் நடத்திக் கொண்டிருக்கின்றபோது, ஞானப் பால் கொடுத்த செய் தியைச் சொல்லிக் கொணடிருந்தேன். ஞானசம்பந்தப் பெருமான் பால் குடித்த செய்தியைக் கேட்டு மங்கை யர்க்கரசியாருக்குப் பால் சுரந்தது என்று சொல்லிக் கொண்டிருந்த போது, என்னையறியாமல் உணர்ச்சிவ சப்பட்டுச் சொல்லிக் கொண்டிருந்தேன். என்னுடைய குரலின் உருக்கத்தைக் கேட்ட அமெரிக்கப் பெண்ம ணிக்கு மார்பில் பால் சுரந்தது. இந்தச் செய்தி எனக்கு அப்போது தெரியாது. பாடம் கேட்டுக் கொண்டிருந்த வர்கள் துணியைத் திருத்திக் கொண்டு, உடனே எழுந்து உள்ளே போய்விட்டார்கள். பாடம் கேட்டுக் கொண்டி ருந்தவர்கள் திடுதிப்பென்று உள்ளே போய்விட்டனரே, என்ன காரணம் என்று தெரியாமல் திகைத்தேன். நாம் சொன்னதில் ஏதாவது தவறான செய்தியைச் சொல்லி விட்டோமோ; அறிவுக்குப் பொருந்தாச் செய்தியைச் சொல்லிவிட்டோமோ என்று எண்ணினேன். சிறிது நேரத்தில் அவர்கள் உள்ளேயிருந்து கண்களைத் துடைத் துக் கொண்டு வெளியே வந்தனர். ‘அடுத்த பாடத்தை நாளைக்குப் பார்க்கலாம் ஐயா’ என்றனர். எனக்கு மிகவும் வருத்தமாகப் போய்விட்டது. ஏன் இப்படிச் சொல்கின்றார்கள்? என்று எண்ணிக் குழம்பினேன். வீட்டிற்கு வந்ததும் எனக்கு ஓர் அஞ்சல் எழுதி அனுப்பி யிருந்தனர். ‘இன்றைக்கு நான் இப்படி நடந்து கொண்ட தற்காகத் தாங்கள் என்னைத் தவறாக நினைக்க வேண் டாம், இன்றைக்கு நீங்கள் பாடம் நடத்தியபோது மனம் தழுதழுத்தது; மனம் தடுமாறியது, அதற்குமேல் பாடம்

கேட்கும் நிலையில் நான் இல்லை; அதனால்தான் அடுத்த நாள் பாடத்தை வைத்துக் கொள்ளலாம் என்று சொல்லிவிட்டேன்' என்று அந்த அஞ்சலில் குறிப்பிட்டிருந்தார்கள். அதற்குப் பின்னர்தான் எனக்கு மனத்தெளிவு ஏற்பட்டது.

*1300 ஆண்டுகளுக்குப் பின்னர் நம் கண்ணெதிரிலேயே நெகிழ்ச்சியான நிகழ்ச்சி நடைபெறுமானால் அந்தக் காலத்தில் அப்படிப்பட்ட நிகழ்ச்சி ஏன் நிகழ்ந்திருக்கக் கூடாது!*

அவர்கள் எழுதியிருந்த மடலைப் பலரிடம் காட்டினேன். பண்டித நடேசனார் அவர்களிடமும் காட்டினேன். அவர், 'தேமொழியார், இந்தக் கடிதத்தைப் பத்திரமாக வைத்துக் கொண்டிருங்கள்; இவையெல்லாம் நாளைக்குச் சாட்சிகளாகும்; ஞானசம்பந்தர் வரலாற்றில் இப்படிப்பட்ட அதிசயங்கள் நடந்தேறின என்பதற்கு இந்த மடலே இன்றியமையாச் சான்றாக இருக்கும். குப்பையில் போட்டுவிடாதீர்கள்; வைத்துக் கொண்டிருங்கள் என்றெல்லாம் பலமுறை சொன்னார்.

**நாம் ஞானிகளை மறந்துவிட்டோம். அதனால்தான் இன்றைக்கு நாடு திசை திரும்பிப் போய்க் கொண்டிருக்கின்றது. ஞானிகள் எக்காலத்திலும் உள்ளதைத் தான் சொல்லுவார்கள்; நல்லதைத்தான் சொல்லுவார்கள். அவர்கள் மொழியை நாம் மறந்தோம்; இன்றைக்குத் திசை தவறிப் போய்க் கொண்டிருக்கின்றோம். அஞ்ஞானிகள் சபலங்கட்கு ஆட்பட்டவர்கள்; அவர்கள் சபலத்தைத்தான் பெரிதும் ஆதரித்துப் பேசுவார்கள் என்பதை உணர்தல் வேண்டும்.**

திருமறைக் காட்டில் ஞானசம்பந்தப் பெருமான் தங்கி வழிபாடு செய்துகொண்டிருக்கின்றார் என்பதனைப் பாண்டிமாதேவியும் குலச்சிறையாரும் கேள்விப் படுகின்றனர். குலச்சிறையாரிடம் மங்கையர்க்கரசி,

ஞானசம்பந்தரைப் பாண்டி நாட்டிற்கு அழைத்துவரு மாறு கேட்டுக் கொள்கின்றார். எப்போதும் பெரியவர் கள் நம் நாட்டிற்கும், நம் ஊருக்கும், நம் வீட்டிற்கும் வருவதென்பது மிகப் பெரிய புண்ணியம். இதை உணர்ந்தவர் மங்கையர்க்கரசியார். இந்நிலையில் குலச் சிறையாரை அனுப்பி ஞானசம்பந்தரை அழைத்துவரச் சொல்லுகின்றார். அவரும் பரிவாரங்களுடன் வந்து காழிவேந்தரின் திருவடியில் விழுந்து வணங்கி, பாண் டிய நாட்டின் நிலையையும், அரசனுடைய நிலையை யும், விளக்கி, 'தாங்கள் பாண்டி நாட்டிற்கு எழுந்தருள வேண்டும்' என்பது மங்கையர்க்கரசியாரின் திருவுள் ளம், என்று தெரிவிக்கின்றார்.

திருமறைக் காட்டிலிருந்து பாண்டி நாட்டிற்குச் செல்லப் புறப்படுகின்றார் திருஞானசம்பந்தர். அப் போது அப்பர் பெருமான், 'பிள்ளாய், சமணர்கள் மிகப் பொல்லாதவர்கள்; மேலும், நாளும் கோளும் நன்னி லையில் இல்லை, அதனால் போகவேண்டாம்' என்று தடுக்கின்றார். ஏன்? சமணர்களினால் மிகவும் அவதிப் பட்டவர் அல்லவா தருமசேனராகிய நாவுக்கரசர்! அத னால் சொல்லுகின்றார்.

சம்பந்தர், நாளும் கோளும் நம்மை ஒன்றும் செய் யாது என்று சொல்லி, 'கோள் அறு பதிகம்' பாடுகின் றார்.

இப்போது நாமனைவரும் நம்மைக் கோள்கள் ஒன்றும் செய்யாதிருப்பதற்காக அந்தப் பதிகத்தை ஓதிக் கொண்டு வருகின்றோம். அதில் ஒன்றும் தவறில்லை. ஆனால் நாம் எண்ணுவதற்கும் ஞானசம்பந்தப் பெரு மான் எண்ணிப் பாடியதற்கும் என்ன வேறுபாடு என்பத னைப் பற்றிச் சிந்திக்கும் பொருட்டு ஒரு பாடலுக்கு மட்டும் விளக்கம் சொல்லலாம் என்று எண்ணுகின் றேன்.

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே.

அடியார் என்றால் யார்? என்று சுட்டிக் காட்டுகின்றார். வேயுறு தோளிபங்கன், விடம் உண்ட கண்டன், மிக நல்ல வீணையைத் தடவிக் கொண்டிருப்பவன், மாசறு திங்கள் மற்றும் கங்கையை முடிமேலணிந்தவன், என் உள்ளத்தில் புகுந்ததனால் கோள்கள் என்னை ஒன்றும் செய்யா, அதனால் கவலை விடுக' என்று அப்பருக்கு ஆறுதல் சொன்னார்.

இந்தப் பதிகத்தைப் பாடினால் கோள்கள் உங்களை ஒன்றும் செய்யா என்று எந்தச் சைவப் பெரியார்களும், சைவ மடாதிபதிகளும், எனக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து, சொன்னதாகத் தெரியவில்லை. பின்னர் இப்பழக்கம் எப்போதிருந்து வந்தது?

பல ஆண்டுகளுக்கு முன்னே, எட்டுக் கோள்கள் ஒன்றாகக் கூடின. அதனால் இந்த உலகம் அழிந்துவிடும் என்ற அச்சம் உலக மக்களிடையில் எழுந்தது. அப்போதுகூட நம் சைவ சமயாசாரியார்கள் யாரும் இந்தப் பதிகத்தைப் பாடுமாறு சொல்லவில்லை. சங்கராசாரியார்தான் 'இந்தப் பதிகத்தைப் பாடுங்கள்; ஒருவேளை இறைவன் கருணை செய்தாலும் செய்வான்' என்று சொன்னார்கள். அதிலிருந்துதான் இந்தப் பழக்கம் வந்ததே தவிர, சைவ உலகில் இப்படிப்பட்ட எண்ணங்கள் யாருக்கும் இல்லை. இதுவாவது பரவாயில்லை.

போன மாதத்தில் வியாழன் கிரகத்தின் மீது வால் நட்சத்திரம் மோதப் போகின்றது என்ற செய்தி வந்த

தும், விஞ்ஞானிகள் என்ன சொன்னார்கள் என்றால் ''மோதப் போவது நிச்சயம்; ஆனால் அதனால் உலகத் திற்கு என்ன ஆபத்து வரும் என்று எங்களால் சொல்ல முடியாது'' என்று மட்டுமே சொன்னார்கள். ஆனால் நம் மக்கள் என்ன சொன்னார்கள் தெரியுமா? வால் நட்சத்திரம் மோதுவதால் இந்த உலகமே அழிந்துவிடப் போகின்றது என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். பின்னால் இந்த மோதலினால் எந்தவிதக் கெடுதலும் விளையவில்லை என்று தெரிந்ததும், யாரோ ஒருவர் இந்த ஆபத்தைத் தடுத்து நிறுத்தியதாக மிகப் பெரிய விளம்பரங்கள் செய்துவிட்டார்கள். காசு இருந்தால் என்ன வேண்டுமானாலும் சொல்லலாம் என்ற நிலை இன்றைக்கு மலிந்துவிட்டது. என்ன செய்ய! என்னே மக்களின் ஆன்மீக வறுமை!

இறைவன் உலகை அழிக்க நினைத்துவிட்டால் அதை யாரால் தடுக்க முடியும்? ஆனால் எதையும் அவ்வளவு சீக்கிரமாக அவன் அழித்துவிடவும் மாட் டான்.

இவர்கள் சொன்னதைவிட காஞ்சிப் பெரியவர், 'ஓதுங்கள், அதனால் நன்மை விளையலாம்; இறைவன் கருணையைப் பெறலாம்' என்று சொன்னதே பரவா யில்லை என்று தோன்றுகின்றது.

ஞானசம்பந்தப் பெருமான் என்ன சொன்னாரென் றால், இந்த இறைப் பண்புகள் என் உள்ளத்தில் புகுந் தன. அதனால் நாளும் கோளும் ஒன்றும் செய்யா. அப்படி எந்த அடியார் உள்ளத்தில் புகுந்தாலும் அவர்க ளைக் கோளும், நாளும் ஒன்றும் செய்யா என்றுதான் அறிவுரை சொன்னாரே தவிர, இந்தப் பாடலையே பாடிக் கொண்டிருந்தால் கோள்கள் ஒன்றும் செய்யா என்று சொல்லவில்லை.

அடியார்கள் என்றால் யார்? அவர்களின் பண்புகள் என்ன? என்பதை வேயுறு தோளிபங்கன் என்ற பாடலின் மூலம் நமக்கு உணர்த்த வருகின்றார் ஞானசம்பந்தர்.

வேயுறு தோளிபங்கன் - இரு கூறாய ஒரு வடிவம். அறிவும் ஆற்றலும் உடையது.

விடமுண்ட கண்டன் - ஆலகால நஞ்சைத் தான் உண்டு, அமிழ்தைத் தேவர்களுக்குக் கொடுத்த தியாக வடிவினன்.

மிக நல்ல வீணை தடவி - அவன் இத்தனை அரிய செயல்களுக்கும் இடையே எள்ளளவும் சினமின்றி எவ்வுயிர்க்கும் இனிமை செய்து கொண்டிருப்பவன்.

மாசறு திங்கள் - மாசுடைய உயிரையும் மாசகற்றி, யாவரும் மதிக்கும் மதியாய்த் தலையில் சூடியவன்.

கங்கை முடிமேலணிந்தவன் - எதையும் தாங்கும் தவ உணர்வோடு தலையாய அருளினால் எவ்வுயிரையும் காத்து நிற்பவன்.

அறிவும் ஆற்றலும் அவன் பண்பு. தியாகத்தின் திருவுரு; இனிமையின் இயக்கம்; இரக்கத்தின் திருவல்லம்; அமைதியின் நிலையம்; எனப் பண்புகளின் வடிவமாக இறைவன் திகழ்கின்றான். அப்பண்புகள் எவர் உள்ளத்தில் புகுந்து நிலைபெறினும் அவர்களை எப்போதும் நாளும், கோளும் சென்று நலியா என்பதை உணர்த்துகின்றார்.

இந்தப் பாடலில் பண்புகளுக்கு உவமை கூறி உருவம் கற்பித்தது, உணர்வதைக் கொண்டே உணராதாரை உணர்த்துவதற்கே யல்லாமல் அந்த உருவமே நம் உள்ளத்தில் புகாது, என்பதைத் தெளிவு செய்யும் பொருட்டே.

மேற்சொன்ன பண்புகள் மட்டுமின்றி இந்தப் பதிகத்தில் உள்ள மற்ற பாடல்கள் யாவும் மேலும் சில அற்புதமான செய்திகளைக் கொண்டிருக்கின்றன. அவற்றில் நம் உள்ளத்தில் எத்தகைய பண்புகள் நிறைந்திருந்தால் ஆண்டவன் வந்து குடியிருப்பான் என்றும்; அவனைக் குடியேற்றுவதற்கான வழி வகைகளையும் சொல்லி, அப்படி ஒழுகுபவர்களே அடியார்கள் என்றும், அவர்களை இந்தக் கோள்கள் ஒன்றும் செய்யா என்றும் சொல்லியிருக்கிறார்கள்.

அப்போதுகூட அப்பர் பெருமான், 'ஞானசம்பந்தர் சின்னக் குழந்தை, அவருக்கு ஏதேனும் தீங்கு நேர்ந்துவிடுமோ', 'என்று எண்ணித் தானும் உடன் செல்ல எண்ணுகின்றார். இதனை அறிந்த ஞானசம்பந்தர் 'தாங்கள் உடன் வர வேண்டாம்; சோழ நாட்டில் உள்ள தலங்களுக்குச் சென்று வாருங்கள், நான் பாண்டி நாட்டிற்குச் சென்று வருகின்றேன்' என்று சொல்லிவிட்டுப் பாண்டி நாட்டிற்குப் புறப்படுகின்றார்.



## 10. பகையை வெல்லுதல்

ஞானிகள் எப்போதும் தங்களை நம்பியே செல்வார்கள். இன்னொருவரைத் துணைக்காக அழைத்துக் கொண்டு செல்ல மாட்டார்கள்.

ஞானசம்பந்தப் பெருமான் பாண்டி நாட்டிற்கு வருவதாக ஒப்புக் கொண்டு புறப்படுகின்றார். அப்பபோது சமணர்களுக்குத் துர்ச்சகுனங்கள், தீக்கனாக்கள் தோன்றுகின்றன. சகுனம் என்பது பின்னால் வரப்போவதை முன்னால் சில குறிப்புகள் மூலம் தெரிவிப்பது. இது எல்லோர்க்கும், எல்லா நாட்டினர்க்கும் நிகழும் நிகழ்ச்சி.

இது அறிவு முனைப்பில் வாழும் மேலை நாட்டின ரும் ஏற்றுக் கொள்ளும் செய்தி. ஷேக்ஸ்பியர் எழுதிய ஜூலியஸ் சீசர் என்ற நாடகத்தில், சீசர் மறுநாள் கொலை செய்யப்படப் போகின்றான். முன்னாள் அவன் மனை வியின் கனவில் இந்த நிகழ்ச்சி பற்றிய குறிப்புகள் தென்படுகின்றன. விழித்தெழுந்த மனைவி கணவனை எச்சரிக்கின்றாள். அதற்கு அவன், 'வீரன் ஒருமுறைதான் சாகின்றான், கோழை நாளும் சாகின்றான்' என்று வீர வசனம் பேசிவிட்டு, வீதிவழியே போகின்றான்.

அவன் சொன்ன செய்தி நம் அனைவருக்கும் பொருந்துவதே. மரணத்தையும் நாம் எதிர்கொள்ளும் துணிவுள்ளவர்களாக வாழ்க்கையை நடத்திச் செல்ல வேண்டும். அருணகிரிநாதர் அப்படித்தான் சொல்லு கின்றார். ''தண்டாயுதமும் திரிசூலமும் விழத் தாக்கி உன்னைத் திண்டாட வெட்டி விழ விடுவேன்' என்கி றார். ''தொண்டாகிய 'என் அவிரோத ஞானச் சுடர் வடிவாள் கண்டாயடா அந்தகா வந்து பார் சற்று என் கைக்கு எட்டவே'' என்று எமனையே மிரட்டுகிறார்.

துர்ச் சகுனங்களைக் கண்ட சமணர்கள் பாண்டிய மன்னனைப் போய்ப் பார்த்து, 'அரசே, சோழ நாட்டில் உள்ள சீர்காழிப் பதியிலிருந்து ஒரு சிறுவன், சங்கரனின் அருள் பெற்றவனாம், அவன் இங்கே நம் நாட்டை நோக்கி வந்து கொண்டிருக்கின்றான்'' என்கின்றார்கள். 'ஏன் அவன் இங்கே வருகின்றான்?' என்று அரசன் கேட்க, 'நம்மையெல்லாம் வாதில் வெல்லவும், அழிக்க வும் இங்கே வருகின்றான்' என்று தெரிவிக்கின்றார்கள். இதைக் கேட்ட அரசன் 'கேட்டு முட்டு' என்கின்றான். 'நாங்கள் கண்டு முட்டு' என்றனர் சமணர்கள்.

'அதற்கு என்ன செய்யலாம்' என்று யோசனை கேட்கின்றான் அரசன். 'பாண்டி நாட்டில் அந்தச் சிறுவ

னும் அவன் தொண்டர்களும் தங்கியிருக்கும் மடத்திற்கு, எங்கள் மந்திர ஆற்றலால் தீ வைத்துவிட்டால், மடம் எரிந்து சாம்பலாகும். சமணர்களின் மந்திர ஆற்றலைக் கண்டு அவர்கள் நாட்டை விட்டே ஓடிவிடுவார்கள்; இதுதான் நாங்கள் சொல்லும் உபாயம்' என்கின்றார்கள். அதற்கு உங்களுடைய அனுமதி வேண்டும் என்று கேட்கின்றார்கள். அனுமதி கொடுத்துவிட்டான் அரசன்.

ஒரு செய்தியில் மயங்கிவிட்டால் அந்த இடத்தில் அறிவு வேலை செய்யாது. அது எந்தச் செய்தியாக இருந்தாலும் சரி.

அரசனும் சமணர்கள் சொன்ன செய்தியில் மயங்கி விட்டான். அதனால் அறிவை இழந்துவிட்டான். அவர்கள் சொல்வதையெல்லாம் சரியென்றே எடுத்துக் கொண்டான். பின்னர் சமணர்கள் மந்திரங்களைச் செபிக்கின்றார்கள். தீக்கடவுளும் வரவில்லை; தீயும் மடத்தைச் சுடவில்லை. இப்போது அவர்கள் உள்ளத்தில் அச்சம் எழுகின்றது. அரசனிடத்தில் உறுதி சொல்லிவிட்டு வந்துவிட்டோம். ஆனால் நாம் நினைத்தது போலத் தீ மூளவில்லை. அதனால் 'நாமே சென்று கொளுத்தி விட்டு வருவோம்' என்று மடத்திற்குச் சென்று எல்லோரும் உறங்குகின்ற நேரத்தில் தீயிட்டார்கள். ஆண்டவன் அருளைப் பெற்ற அடியவர்களைத் தீயோ, பிறவோ ஒன்றும் செய்யாதல்லவா! ஞான சம்பந்தப் பெருமானுடைய அறிவுக்கோ, சிந்தனைக்கோ தீ வைத்தார்கள் என்ற செய்தியே கிடையாது. சமணர்கள் வைத்த தீ, மடத்தில் இருந்த அடியவர்களையோ, திருஞானசம்பந்தரையோ ஒன்றும் செய்யவில்லை. ஒரு குறித்த இடத்திற்கு வருகின்றபோது தீ அணைந்துவிடுகின்றது.

மற்ற அடியவர்கள் தீயைப் பார்த்து அஞ்சி நடுங்கிக் கொண்டே, மடத்திற்குத் தீ வைக்கப்பட்ட செய்தியைத் திருஞானசம்பந்தரிடம் தெரிவிக்கின்றார்கள். அப்போது ''இந்த நாட்டில் அரச நீதி இல்லை; செங்கோல் இல்லை; ஆட்சி நலமில்லை; அநீதியான ஆட்சி நடக்கின்றது'' என்று எண்ணுகின்றார். பாண்டிய நாட்டின் அவலமான நிலைதான் தெரிகின்றது.

இந்த அவலத்தைத் தணிக்கத்தான் தன்னைப் பாண்டிமாதேவியும், மந்திரி குலச்சிறையாரும் அழைத்து வந்தார்கள் என்று எண்ணுகின்றார். அவருக்குச் சினம் வரவில்லை. மாறாக கருணைதான் மேலோங்குகின்றது. ஞானிகள் சினந்து இந்த நாடு அழிந்து போக வேண்டும் என்று எண்ணினால் அழிந்து போயிருக்கும். மாறாக மிகவும் பொறுப்போடு சிந்தித்துப் பார்க்கின்றார். இப்படிப் பொதுவான இடத்தில் தங்கியிருக்கும் தம்மையும், தம்முடன் வந்திருக்கும் அடியவர்களையும் தீயிட்டுக் கொளுத்துவதற்கு அனுமதி அளித்த அரசன் மேல்தான் தவறு இருக்கின்றது. அவன் அரசை, நீதி நெறியினின்றும் பிறழ்ந்து ஆட்சி நடத்தி வருகின்றான்; எனவே அரசன் தன் தவற்றை உணர வேண்டுமென்று எண்ணி, மடத்தில் இருந்த தீயைப் பார்த்து, 'பையவே சென்று பாண்டியர்க்கு ஆக' என்று எச்சரிக்கையாக ஆணையிடுகின்றார். வேகமாகச் சென்று பாண்டியனைத் தாக்கு என்று சொல்லவில்லை; பாண்டியனை அழித்துவிடு என்றும் ஆணையிடவில்லை. அப்படிச் செய்திருந்தால் மங்கையர்க்கரசியின் மாங்கல்யம் போய்விடும். தன்னை அழைத்துத் தன் கணவனை அழித்த பழியும் பாவமும் மங்கையர்க்கரசியைச் சாரும்; மன்னனிடம் பணி செய்கின்ற ஓர் அமைச்சன், ஞானசம்பந்தரை அழைத்து வந்து மன்னனை அழித்த பாவம், பழி இரண்டும் அமைச்சரை அல்லவா சாரும்! இவற்றை

யெல்லாம் மனத்தில் கொண்டு மிகவும் பொறுப்பாக, தீயை மெதுவாகச் செல்லுமாறு பணிக்கின்றார். அது வன்றோ கருணை!

அதுமட்டுமன்று. பாண்டியனையன்றி மற்றவர்கள் இந்த நாட்டை ஆளக்கூடாது என்பது மற்றொரு காரணம். முன் செய்த பாவத்தால் அவனுக்குக் கூன் விழுந்திருந்தது. அதையும் நிமிர்த்தியாக வேண்டும். இப்படிப் பல காரணங்கள் கொண்டு மெல்லவே செல்லச் சொன்னார். சென்ற தீ அவனுக்குக் காய்ச்சலாகியது. காய்ச்சல் ஏன் வருகின்றது என்பதற்கு இதுவும் ஒரு காரணம். எந்தப் பெரியவர்கள் இட்ட சாபமோகூடக் காய்ச்சலாக மாறி நமக்கு வரலாம்.

"என்பொருட்டவர் செய்ததீங் காயினும் இறையோன்
அன்ப ருக்கெய்து மோ!" என்று பின்னையும் அச்சம்
முன்பு றப்பின்பு முனிவுற முத்தமிழ் விரகர்
'மன்பு ரக்கும்மெய்ம் முறைவழு' எனமனங் கொண்டார்.

"வெய்ய தீங்கிது வேந்தன்மேற்(று) எனும்விதி முறையால்
"செய்ய னேதிரு வாலவாய்" எனுந்திருப் பதிகம்
"சைவர் வாழ்மடத் தமணர்கள் இட்டதீத் தழல் போய்ப்
பைய வேசென்று பாண்டியற் கா" கெனப் பணித்தார்.

காலையில் எழுந்த பாண்டிமாதேவிக்கு, திருஞான சம்பந்தர் தங்கியிருந்த மடத்திற்குத் தீ வைத்த செய்தி கிடைக்கின்றது; மன்னனுக்குக் காய்ச்சல் என்ற செய்தியும் கிடைக்கின்றது. தன் அழைப்புக்கிணங்க தன் நாட்டில் வந்து தங்கியிருக்கும் ஒரு அருளாளருக்கும், அவர்தம் தொண்டர்களுக்கும் சமணர்கள் இழைத்த கொடுமையால் ஏதேனும் தீங்கு நேர்ந்திருக்குமோ என்று அஞ்சுகின்றாள். தன் தோழிகளை அனுப்பி ஞானசம்பந்தருக்கு ஏதேனும் தீங்கு நேர்ந்ததோ என்று அறிந்து வரச் சொல்லுகின்றாள். அப்படி ஏதேனும்

தீங்கு நேர்ந்திருந்தால் அந்தப் பாவத்திற்குப் பிராயச்சித் தமாகத் தன் உயிர் விடவும் துணிகின்றாள். இதற்கிடை யில் தோழிகள் ஞானசம்பந்தரும் அவர்தம் தொண்டர்க ளும் தீயினால் பாதிக்கப்படவில்லையென்றும், நலமா கவே இருக்கின்றார்கள் என்றும் கூறுகின்றனர். பின்னர் மன்னனைப் பார்க்கச் செல்கின்றாள். கணவனிடம் அவ னுக்கு வந்துற்ற நோய்க்குக் காரணம் சமணர்கள் ஞான சம்பந்தருக்கு இழைத்த கொடுமையே என்று எடுத்து ரைக்கின்றாள். அரசன் மயங்குகின்றான். இருந்தாலும் தான் சமணர்கள்பால் கொண்ட மயக்கத்தின் காரணமாக அவர்கள் செய்தது சரியாகத்தான் இருக்கும் என்று எண்ணிக் கொள்கின்றான். சமணர்களை அழைத்துத் தன் நோய்க்கு மருத்துவம் செய்யச் சொல்லுகின்றான். சம ணர்கள் மருத்துவத்திலும், மந்திரங்களிலும் மிகவும் வல்லவர்கள். அவர்கள் மயிற்பீலியால் அரசன் உடம் பைத் தடவிக் கொடுத்துக் கொண்டே மந்திரங்களைச் சொல்கின்றார்கள். அதனால் நோய் அதிகமாகியதே தவிரத் தணியவுமில்லை; தீரவுமில்லை. பின்னர் மருந்து கொடுத்துப் பார்க்கின்றார்கள்; பின்னும் நோய் அதிகமா கியது. அதனால் அவர்களைத் தன்னை விட்டு அகலு மாறு கட்டளையிடுகின்றான்.

அப்போது பாண்டிமாதேவி, ''சிவனடியாராகிய அந்தக் குழந்தை வந்து பார்த்தால் ஒரு வேளை நோய் தீர்ந்தாலும் தீரலாம், அக்குழந்தையை இங்கே அழைத்து வரச் சொல்லுங்கள் என்று மன்னனிடம் அனுமதி கேட்கின்றாள். மன்னனும் அனுமதி கொடுக் கின்றான். துன்பம் வந்துவிட்ட நேரத்தில் அந்தத் துன் பத்தைப் போக்கிக் கொள்ளவே அனைவரும் விரும்பு வார்கள். அப்போது எந்தவிதமான பேதமும் யாருக்கும் தெரியாது. பாண்டிமாதேவி சண்பைநாதரை அழைத்து வர ஏற்பாடு செய்யப் போகின்றார்கள். அப்போது

சமணர்கள் அரசனிடம், ''ஒருவேளை அந்தப் பிள்ளை யால் நோய் தீர்ந்தாலும், நாங்கள்தாம் நோயைத் தீர்த் தோம்'' என்று சொல்லிவிடுங்கள், என்று சொல்கின்றார் கள். அதற்கு அரசன், 'அந்தப் பிழையை நான் செய்ய மாட்டேன்' என்று மறுத்துவிடுகின்றான்.

ஞானசம்பந்தப் பெருமான் அரச மாளிகைக்கு வரு கின்றார். சமணர்களையும், திருஞானசம்பந்தரையும் வைத்துக் கொண்டு, ''உங்களில் யார் என் நோயைத் தீர்க்கின்றீர்களோ அவர்கள் பக்கத்தில்தான் நான் சேரு வேன், இதுவே உங்களது வாதமாக இருக்கட்டும்'' என்று சொல்கின்றான். இருவரும் ஒத்துக் கொண்டார் கள். சமணர்கள் மேலும் மருந்தும், மந்திரமும் பயன்ப டுத்தியும் அவர்களால் நோயைத் தீர்க்க முடியவில்லை. நோய் பின்னும் அதிகமாகத்தான் பெருகியது. அரசன் ஞானசம்பந்தரைப் பார்க்கின்றான். அவர், 'மந்திரமா வது நீறு...' என்ற பதிகத்தைப் பாடி பாண்டியனின் உடலில் ஒரு பக்கத்தில் திருநீற்றைப் பூசுகின்றார். திருநீறு பூசிய பக்கம் நோய் இல்லை. இந்தப் பகுதியில் இருந்த நோய் அந்தப் பக்கத்திற்குப் போய் வருத்திக் கொண்டிருக்கின்றது. அது, ஒரு பக்கம் சொர்க்கம் போலவும், ஒருபக்கம் நரகம் போலவும் இருக்கின்றது. நஞ்சுண்ட வேதனை ஒரு புறமும், அமுதுண்ட இன்பம் மறுபுறமும் இருப்பது போல இருக்கின்றது. சமணர்கள் என்ன முயன்றும் அந்த நோயைத் தீர்க்க முடியாததால் திருஞானசம்பந்தரைப் பார்க்கின்றான் பாண்டியன். அவரும் பதிகம் முழுதும் பாடி மறுபக்கத்தில் திருநீற் றைப் பூசுகின்றார். நோய் முழுதும் தீருவதுடன், அவனு டைய கூனும் நிமிர்கின்றது. அவனும் நின்றசீர் நெடுமா றன் ஆயினான்!

நோயைத் தீர்க்க முடியாமல் தோற்ற சமணர்கள், ஒரே ஒரு விதத்தில் வாதம் செய்துவிட்டு, அதிலேயே

தங்கள் திறமையை நிரூபித்துவிட முடியாது. இன்னும் இரண்டு வகையில் எங்கள் இருவரின் திறமைகளைச் சோதித்துவிட்டால்தான் எங்கள் தோல்வியை ஒத்துக் கொள்வோம் என்றனர். சரி என்று ஒத்துக் கொள்கின் றார் ஞானசம்பந்தர். சமணர்களால் வாதில் தம்மை வெல்ல முடியாது என்று தெரிந்திருப்பினும், அரச னுக்கு மேலும் தெளிவு ஏற்படுத்தவும், மக்கள் நல்வழிப் படவும், சமணர்கள் தங்களை உணரவும், அவர்களுக்கு இவற்றையெல்லாம் உணர்த்த வேண்டுமென்று எண் ணிய ஞானசம்பந்தப் பெருமான் வாதிற்கு ஒத்துக் கொள்கின்றார்.

அடுத்து, 'உங்கள் சமய உண்மையை மட்டும் சொல்லி வாதிடுங்கள்' என்கின்றார். அவர்களது சமய உண்மை என்னவென்றால், 'அத்தி, நாத்தி' என்பதாம். அத்தி என்பது அத் தீயில் போகப்போகின்றது. நாத் தீ அவர்களைக் கெடுக்கப் போகின்றது. அவ்வளவுதான். இதற்குப் பெரிய விளக்கம் வேண்டாமென்று எண்ணு கின்றேன். அவர்கள் 'அத்தி, நாத்தி' என்று எழுதி தீயில் போடுகின்றனர். திருஞானசம்பந்தர் தாம் பாடிய பதிகங் களில் கயிறு சாத்திப் பார்க்கின்றபோது, திருநள்ளாற் றில் பாடிய 'போகமார்த்த பூண்முலையாள்...' என்ற பதிகம் வருகின்றது. அந்தப் பதிகம் உள்ள ஓலையை உருவித் தீயில் இட்டார். ஞானசம்பந்தர் இட்ட ஓலை பசுமை மாறாமல் அப்படியே இருந்தது. அதனைக் கையைவிட்டு எடுத்துக் கொண்டார். சமணர்கள் இட்ட ஓலை கரியாகிவிட்டிருந்தது. இதிலும் சமணர்கள் தோற் றனர். இந்த இரண்டோடு நிறுத்திக் கொள்ளக் கூடாது. புனல் வாதம் செய்ய வேண்டுமென்றனர்.

பின்னர் ''எங்கள் சமய உண்மையை எழுதி வைகையில் போடுவோம். நீங்கள் உங்கள் சமய உண் மையை எழுதிப்போடுங்கள். இருவர் இடுகின்ற ஓலை

யில் எது ஆற்று நீரை எதிர்த்துப் போகின்றதோ அவர்களே வென்றவர்' என்கின்றனர்.

ஞானசம்பந்தப் பெருமானுக்கு வேறு வழி தெரியவில்லை. ஒப்புக் கொள்கின்றார். அப்போது 'வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்...' என்று தொடங்கும் பதிகத்தைப் பாடுகின்றார். அந்தப் பதிகத்தில் உள்ள ஒவ்வொரு பாடலிலும் ஒவ்வொரு குறிப்பு இருக்கின்றது.

**வாழ்க அந்தணர்**

*1. உலக உயிர்கள் சிவநெறியில் நின்று இன்பம் நுகரும். என்றும் 2. சித்தும் அசித்துமாகிய இந்த உலகத்தில் அறியமுடியாத பதிப் பொருளை மெய் அன்பினால் அறியலாமென்றும், 3. கடவுள் எல்லாவற்றையும் தம்முள் அடக்கி தாம் ஒன்றிலும் அடங்காதவன் என்றும் 4. அவரை மெய்யன்போடு வழிபாடு செய்வார் முத்தி பேறு பெறுவர் என்றும், 5. இறைவன் உயிர்களுக்கு அருளும் முறைமையும் 6. உயிர்கள் தன்மைக்கு ஏற்றவாறு அவன் தோன்றுவான் என்றும் 7. அவனை வழிபடும் உயிர்கள் வினையினின்றும் விடுபடுமென்றும் 8. சோதி சொரூபமாயுள்ளவன் கடவுள் என்றும் 9. அவனை வணங்கிப் பிறவித்துன்பத்தை ஒழித்தல் வேண்டுமென்றும் 10. அவன் புகழின் பொருட்டு ஒன்றும் செய்வதில்லை என்றும் 11. கருணையினாலேயே எதையும் செய்கின்றான் என்றும், தம்மையர்ச்சிப் போர்க்கு என்றும் இடையூறு இல்லையென்றும் 18 புராணங்களிலும் கடவுள் உயிர்களுக்குக் கருணைபுரியும் தன்மையைக் குறிக்கும் என்றும், திருமால் சக்கரம் பெற்றானென்றும், தேவர்களைக் காக்க நஞ்சுண்டானென்றும், தமிழ்ச்சங்கம் நிறுவினானென்றும், கல்வியின் பயன் நற்றாள் தொழுதலே என்றும் முடிவில் இப்பதிகத்தால் இன்னபயன் என்றும் குறிப்பிடுகின்றார்.*

அந்தப் பதிகம் முழுதும் பாடி, ஆற்றில் விடுகின் றார். அது ஆற்றில் எதிரே சென்று கரை சேர்ந்துவிடுகின் றது. சமணர்கள் அவர்களது சமய உண்மையை எழுதிய ஓலை நீரோடு போய்விட்டது. இந்தச் சோதனையிலும் சமணர்கள் தோற்றுவிட்டனர்.

வாதிடுவதற்கு முன்னர் இருவரும் ஓர் ஒப்பந்தத் திற்கு வருகின்றார்கள். சமணர்கள் நாங்கள் வாதில் தோற்றால் எல்லோரும் கழுவேறிவிடுகின்றோம் என் கின்றார்கள். அதன்படி இப்போது அவர்களை அரசன் கழுவேற்றியாக வேண்டும். முறை செய்வதே மன்னன் கடமை என விட்டுவிடுகின்றார்.

இந்த நிகழ்ச்சியைப் பற்றித்தான் இன்றைக்குப் பலவகையில் பல விவாதங்கள் நடந்து கொண்டிருக் கின்றன. பாரதிதாசன், பகுத்தறிவுவாதமாக, ஒன்றைச் சொல்வார். சமணர்களுக்குச் சில இரகசியங்கள் தெரியா மல் போய்விட்டன. அது என்னவென்றால் திருஞான சம்பந்தர் மீனைப்பிடித்து அதன் வாலில் ஏட்டைக் கட்டி விட்டார். அதனால் தான் ஏடு எதிரேறிச் சென்றது என்பார். எவ்வளவு பொருத்தமாகச் சொல்கின்றார் பாருங்கள்!

அதே நேரத்தில் கலைஞர் கருணாநிதி அவர்கள் 'தூக்குமேடை' என்ற நாடகத்தில் திருமுறைகளின் பெருமைகளை எந்த அளவுக்கு உணர்ந்து பேச முடி யுமோ அந்த அளவுக்கு உணர்ந்து பேசுவார். அந்த நாடகத்தில் தூக்குமேடைக்குச் செல்ல வேண்டிய கட் டாயம் ஒரு கதாபாத்திரத்திற்கு ஏற்படுகின்றது. அவன் வடமொழியைத் தாக்கிப் பேசினான் என்று தூக்கு மேடைக்குச் செல்ல வேண்டிய கட்டாயம் அவனுக்கு ஏற்படுகின்றது. அவன் தூக்கு மேடையில் நின்று கொண்டு கேட்கின்றான். ''எலும்பைப் பெண்ணாக்கி

யது எங்கள் தமிழா? அன்றி உங்கள் மொழியா? முதலை விழுங்கிய மதலையைத் திரும்பக் கொண்டு வந்தது எங்கள் தமிழா? அன்றி உங்கள் மொழியா? ஏடு ஆற்றில் எதிரேறிச் சென்றது எங்கள் மொழியாலா? அல்லது உங்கள் மொழியாலா?'' என்றெல்லாம் கேட்கின்றான். எல்லாம் எங்கள் தமிழ், எங்கள் தமிழ் என்று சொல்லுகின்றான். அப்போது கருணாநிதி இப்படியெல்லாம் வசனம் எழுதியிருக்கின்றார்.

சமணர்கள் தாங்கள் முன்னர் ஒத்துக் கொண்டபடியே கழுவேறுகின்றார்கள். பின்னால் வந்தவர்கள் மன்னன் அவர்களைக் கழுவில் ஏற்றினான் என்றுசொல்லுவார்கள். அப்படியில்லை. அவர்கள் வாதிற்கு வருகின்றபோதே சூளுரைத்துத்தான் வந்தார்கள். அதன்படி அவர்களே தங்கள் தண்டனையை மனமுவந்து ஏற்றுக் கொண்டார்கள். அப்படி அவர்கள் தண்டனையை ஏற்றுக் கொள்ளவில்லையென்றாலும் மன்னன் முறை செய்ய வேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றான். நீதி வழுவக் கூடாதல்லவா? அது அவனுடைய கடமையும் அல்லவா!

அன்றிலிருந்து நாட்டில் சமண இருள் நீங்கிச் சைவப் பேரொளி எங்கும் எழுந்தது. அமணர், சமணர், குண்டர், பறித்தலையர் என்றெல்லாம் அவர்களுக்குப் பெயர். காரணம் என்ன தெரியுமா? உடையின்றி இருந்ததால் அமணர்கள் என்றும், தலையில் இருக்கின்ற முடியைக் கத்தி கொண்டு மழிக்காது கையால் ஒவ்வொரு முடியாகப்பிடுங்கி எறிந்ததனால் பறித்தலையர் என்றும், அடாவடியான செயல்களையெல்லாம் செய்ததால் குண்டர்கள் என்றும், சமணர்கள் என்றது சம்மணம் போட்டுத்தான் உட்காருவார்கள் என்பதனாலும் பெயர் பெற்றனர். பின்னர் அங்கேயே சில நாட்கள் தங்கிப் பெருமான் மீது பல பதிகங்களைப் பாடுகின்றார் ஞான சம்பந்தர்.

''பெரியாரைப் பேணித் தமராக்கொளல்'' என்பது திருவள்ளுவர் வாக்கு. பெரியவர்களைத் தம்மவராகப் பேண வேண்டும். தமர் என்றால் தம்மவர், சுற்றத்தார் தமக்கு உரியவர் என்று பொருள். பெரியவர் யார்? அறிவறிந்து மூத்த அறிவுடையோரே பெரியோர். அவர்கள் எங்கிருந்தாலும் அவர்களைத் தேடிச் சென்று அவர்களை நமக்குரியவராக ஆக்கிக் கொண்டால் நமக்குப் பல நன்மைகள் விளையும். நன்மைகள் விளையாவிடினும் தீமைகள் விளையா. அதனாலன்றோ, தெய்வப்புலவர்:

''அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்''

என்பார். எவ்வளவோ செய்திகளைத் தெரிந்து வைத்துக்கொண்டிருப்போம். அவற்றுள் எல்லாம் தலையாய செய்தி பெரியாரைத் தம்மவர்களாகக் கொள்ளுதலே. இச்செய்தி பெரிதும் யாருக்கும் தெரிவதில்லை. எத்தனையோ நலங்களைத்தேடிப் பேணிக் கொண்டிருப்போமே தவிர, பெரியவர்களைப் பேணிக்கொள்ள மாட்டோம். அதனை அறிவுறுத்தவே 'பெரியாரைத் துணைக் கொள்' என்பார் ஔவைப்பிராட்டி.

பாண்டி நாட்டிலே மிகப்பெரிய குழப்பம் விளைந்தபோது, பாண்டிமாதேவியும், அமைச்சர் குலச்சிறையாரும் இனி இந்த நாடு பெரியாரின் துணையில்லாமல் உய்யாது எனக் கருதினர். அப்படி இவர்கள் நினைத்ததற்குக் காரணம் அரசனும் நெறி இன்னதென்று தெரியாமல் தடுமாறிப் போனதுதான். அரசன் எவ்வழியோ அவ்வழியே குடிமக்களும் தடுமாறிக் கொண்டிருந்தார்கள். அதனால் திருஞானசம்பந்தப் பெருமானைப் பாண்டி நாட்டிற்கு அழைத்து வந்து சமணர்களை வாதில் வென்று சமண இருளைப்போக்கி, சைவஒளி நாடெங்கும் பரவுமாறு செய்தார்கள்.

ஞானசம்பந்தப் பெருமான் வெற்றி பெற்றதற்கு என்ன காரணம்? சமணர்கள் திருஞானசம்பந்தரை வாதில் வென்று சமண சமயத்தை நிறுவ வேண்டும் என்று எண்ணினார்கள். ஆனால் ஞானசம்பந்தப் பெரு மான் சைவத்தை நிறுவவேண்டும் என்று எங்குமே சொல்லவில்லை. மக்கள் நன்னெறியில் உய்ய வேண்டு மென்பதே அவரது முக்கிய நோக்கமாக இருந்தது. மக்களைத் தழுவி நின்றது ஞானசம்பந்தர் உள்ளம். சமயத்தைத் தழுவி நின்றது சமணர்களின் உள்ளம். வாதம் என்று வந்தவுடன் சமணர்கள் தங்களால் வாதத் தில் வெற்றி கொள்ள முடியும் என்று எண்ணினர். ஞானசம்பந்தப் பெருமான் அப்படி எண்ணவில்லை. திருவாலவாயிலில் எழுந்தருளியிருக்கும் சொக்கேசப் பெருமானைச் சென்று வழிபட்டுப் பாடிப் பரவி "சம ணர்களோடு வாதிடுவது திருவுளச் சம்மதமா?" என்று கேட்கின்றார். அங்கே ஆணை பெற்றபின்தான் வாதிடு வதற்கு இசைகின்றார். தாயின் கையிலிருந்து வேலை வாங்கிய பின்னர்தான் சூரசம்மாரத்திற்கு இசைகின் றான் முருகன். எனவே ஞானசம்பந்தர் அனைத்து வாதங்களிலும் வெற்றி பெற்றார். பாண்டிய நாடு நன்னெறியில் நின்றது.

சிலகாலம் பாண்டிய நாட்டிலேயே தங்கியிருந்து, சொக்கேசப் பெருமானைப் பாடிப் பரவிக் கொண்டிருக் கின்றார். அப்போது, சிவபாத இருதயர் மதுரைக்கு வருகின்றார். தந்தையைக் கண்டவுடன் மகிழ்கின்றார். ஆனால் உடனே தன் தாயாரைப் பற்றியும், தந்தையா ரின் நலைனப் பற்றியும் கேட்கவில்லை. அதற்குப் பதில், சீர்காழிப்பதியில் வதியும் தோணியப்பப்பெரு மானையும், ஞான அமுதத்தைப் பாலாகத் தந்து தன்னை ஆண்டுகொண்ட அம்மையையும் நலமாக இருக்கின் றார்களா என்று கேட்கின்றார். அதனை,

''மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்...'' என்று தொடங்கும் பதிகமாகப் பாடுகின்றார். இறைவனு டைய கருணையை அவர் எங்கே இருந்தாலும் மறவா மல் இருந்தார். என்ன திறங்கள் நிகழ்ந்தாலும், என்ன அற்புதங்கள் நிகழ்ந்தாலும், எத்தனை வெற்றிகள் பெற் றாலும், அவற்றைப் பற்றிய நினைப்பின்றி, இவற்றுக் கெல்லாம் காரணமாக இருந்த தோணியப்பப் பெரு மானை நினைந்து அவரைப் பற்றி முதலில் கேட்கின் றார் என்பது இங்கே நினைவுகூரத்தக்க செய்தி.

பாண்டி நாட்டில் உள்ள பல தலங்களையும் சென்று பார்த்து வழிபட வேண்டுமென்று எண்ணுகின் றார். தன்னுடன் அரசன், அரசியார், மந்திரி குலச்சிறை யார் ஆகிய மூவரையும் அழைத்துச் செல்கின்றார். ஏன்? இந்த மூவரும் நல்வழியில் நடந்தால் நாடே நல்வழி யில் செல்லும் அல்லவா! அதனால் அவர்களை அழைத் துச் செல்கின்றார். பாண்டிய நாட்டுத் தலங்களை வழி பட்டபின் அரசன், அரசியார், மந்திரி குலச்சிறையார் ஆகிய்வரிடம் விடைபெற்றுக் கொண்டு சம்பந்தப்பெரு மான் தம் அடியார்களுடன் சோழநாடு திரும்பினார்.

சோழநாட்டில் கொள்ளம்பூதூர் என்ற திருத்தலத் திற்குப் போகின்றார்கள். இவர்கள் இருக்கின்ற இடத் திற்கும் திருக்கோயில் அமைந்திருக்கும் இடத்திற்கும் இடையில் காவிரி ஆறு இருக்கின்றது. ஆற்றைக் கடக்க ஓடத்தில் போகவேண்டும். ஓடத்தை ஓட்டிச் செல்ல ஆளில்லை. அப்போது திருஞானசம்பந்தர் உடன்வந்த வர்களை ஓடத்தில் ஏறி அமருமாறு சொல்லிவிட்டு, ''கொட்ட மேகமழுங் கொள்ளம் பூதூர்...'' என்று தொடங்கி ஒரு பதிகத்தைப் பாடுகின்றார். ஓடம் தானே இயங்கி அக்கரை சேருகின்றது. இப்படி ஓர் அற்புத நிகழ்ச்சி அத்திருத்தலத்தில் நிகழ்கின்றது. பின்னர் திருக் கோயிலுக்குச் சென்று பெருமானை ஆராக்காதலுடன் வழிபடுகின்றார்.

நாமெல்லாம் திருத்தல வழிபாடு செய்ய வேண்டும். செய்கின்றபோது இந்த ஊருக்கு வந்தோம், பார்த்தோம் என்று; போய்விடக்கூடாது. பாடல் பெற்ற தலங்குளுக்குச் செல்கின்றபோது, இத்திருத்தலத்திற்கு ஞானசம்பந்தப் பெருமான் வந்தார், வழிபட்டார், அவர் வருவதற்கு முன்னர் இத்திருத்தலம் எப்படியிருந்தது, அவர்வந்த பின்னர் எப்படிப் பணிந்தார், என்றெல்லாம் சிந்திக்க வேண்டும். இன்றைக்கு ஒரு பெரியவரின் திருநட்சத்திரம் என்கின்றபோது அப்பெரியவரைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். அப்படியே எந்தத் திருத்தலத்திற்குச் செல்கின்றபோதும், அத்தலத்தின் பெருமை, அங்கே வந்து வழிபட்ட பெரியவர்கள், அவர்கள் அந்தத் திருத்தலத்திற்கு என்ன உணர்வோடு வந்து வழிபட்டார்கள் என்று பல செய்திகளை எண்ணிப் பார்த்து, அந்த உணர்வோடேயே வணங்க வேண்டும். இப்படி வணங்குவதால் ஒரு சமயம் நமக்கும் அவர்களுக்குக் கிட்டிய பேறு கிட்டினாலும் கிட்டும்.

திருஞானசம்பந்தப்பெருமான் பின்னர் தலங்கள் பலவற்றை வழிபட்டுக்கொண்டு, திருவண்ணாமலைக்கு வருகின்றார். பெருமானின் அடியையும், முடியையும் காண முடியும் என்று தருக்கி நின்ற இருவர், தருக்கொழிந்து நின்ற தலம் அது. இறைவன் சோதிமயமாக நின்ற தலம். ஏன் அவர்கள் அப்படிச் செய்தார்கள்? திருமால் செல்வத்திற்கு உரியவன். அவன் பன்றி உருவெடுத்து பூமியை அகழ்ந்து சென்று பெருமானின் திருவடியைக் காண முனைந்தான். அறிவுடையவன் பிரமன். அறிவு மேல் நோக்கிச் சென்று பெருமானின் திருவடியைக் காண,முனைந்தது. செல்வம் உடையோன் அறிவு கீழ்நோக்கிப் பாயும். அறிவுடையவன் அறிவு மேல் நோக்கிச் செல்லும். இருவருக்கும் எப்போதும் 'நான்' என்னும் தன் முனைப்பு இருந்துகொண்டேயிருக்

கும். 'நான்' என்ற உணர்வோடு மேல் நோக்கிப் போனாலும், கீழ் நோக்கிப் போனாலும் இறைவனைக் காண முடியாது.

இந்தத் தத்துவத்தைக் கதையாகச் சொல்லி வைத் தார்கள். செல்வம் உடையவன் அதனைப் பெருக்கிக் கொள்ளவும், பாதுகாக்கவும் எத்தகைய அழுக்கிலும் விழுந்து புரள்வான் என்பதனைப் பன்றியென உருவகப் படுத்தினர். மனிதன் செல்வச் செழிப்பில் அப்படித்தான் இருப்பான். பிறருக்கு ஏதேனும் ஒரு வகையில் உதவியா கவும் இருப்பான். ஆனால் பெரிதும் இழிந்த நிலையி லேயே வாழ்வான்.

நாலாவிதமான அறிவிருப்பினும், அறிவின்மை யோடேயே நடந்துகொள்வான் அறிவாளி. அன்னம் அறிவைக்குறிப்பது. அது வெண்மை நிறம் உடையது. வெண்மை அறிவின்மைக்கும் அடையாளம். அறிவுக் கும் அடையாளம். தன்னுடைய அறிவால் இறைவனை அறிந்துகொண்டு விடலாம் என்று எண்ணித் தருக்கி நிற்பான். ''வேதியர், சாதமாகவே சாத்திரம் காட்டினர்' என்றது மணிவாசகம். சாத்திரத்தினால் பெருமானைக் காட்டிவிட முடியுமா? முடியாது.

பிரமனுக்கும், திருமாலுக்கும் ஒரு சிறு வேறுபாடு உண்டு. அடியையும், முடியையும் காண விழைந்த இருவரும் தங்கள் முயற்சியில் தோல்வியுற்று நிலவுல கத்திற்கு மீண்டும் வந்தனர். பெருமான், ''அடியையும், முடியையும் கண்டீர்களா?'' எனக் கேட்கின்றார். செல் வத்தின் வடிவமாக இருக்கின்ற திருமால், 'என்னால் திருவடியைக் காண முடியவில்லை' என்று சொல்ல, அறிவின் வடிவாக இருக்கின்ற பிரமன், 'திருமுடியைப் பார்த்தேன்' என்று பொய் சொன்னான். இதன் உட்பொ ருள் யாதெனில், செல்வந்தன் அதிகமாகப் பொய்

சொல்ல மாட்டான், துணிந்து பொய் சொல்பவன் அறிவாளியாகத்தான் இருப்பான்' என்பதே. பணக்கா ரனை ஒரு சமயம் நம்பினாலும் நம்பலாம்; அளிவா ளியை நம்பவே கூடாது. பிரமனிலிருந்து தொடங்கி இன்று வரையிலும் அறிவாளி பொய் சொல்லிக் கொண் டேயிருக்கின்றான்.

இருவரும் தேடித் தேடொணா இறைவன் தீ வடிவ மாக நின்றான். அவ்வாறு நின்ற இடந்தான் திருவண் ணாமலை. மலையோ சோதியின் வடிவம். திருவண் ணாமலைக்கு வருகின்ற ஞானசம்பந்தப்பெருமான், ''உண்ணாமுலை உமையாளொடு...' என்ற பதிகம் தொடங்கிப் பல பதிகங்களைப் பாடுகின்றார்.

திருவண்ணாமலை நினைத்தாலே முத்தியளிக்கின்ற சிறப்புடைய திருத்தலம்.

மேலும் பல திருத்தலங்களைப் பாடியும், பரவி யும், வணங்கியும், செல்கின்ற வழியில் திருவோத்தூர். என்ற திருத்தலத்திற்கு வருகின்றார். ஒத்து என்றால் வேதம். வேதம் இருந்தது. அதனை ஓதுகின்றவர்களும் இருந்தார்கள். எனவே அதனைத் திருவோத்தூர் என்று அழைத்தனர். இப்போது அத்திருத்தலத்தைப் பரவலாக 'செய்யாறு' என அழைக்கின்றனர். திருஞானசம்பந்தர் காலத்திற்கு முன்பிருந்தே அத்திருத்தலம் இருக்கின்றது என்பதை இதனால் விளங்கிக் கொள்ளலாம்.

அங்கிருந்த சிவனடியார் ஒருவர் பனங்கொட்டைக ளைக் கொண்டு வந்து அக்கோயிலில் ''இறைவனுக்கு அவை ஆகும்'' என்பதற்காக அவற்றை நட்டு வளர்த் தார். ஆனால் அவையனைத்தும் ஆண்பனைகளாகவே இருந்தன. பெண்பனை ஒன்றுகூட வரவில்லை. பயன் தரு மரமாக இருக்கும் என வளர்த்தார். ஆனால் ஒன்று கூட பயன்தருவதாக அமையவில்லை. இதைக் கண்

ஹற்ற சமணர்கள் 'உங்கள் பெருமான் வல்லமை உடையவர் என்று சொல்லுகின்றீர்களே, இந்த ஆண்பனைகள் யாவும் பெண்பனைகளாக மாறுமா' என்று அங்கிருந்த அடியவர்களைப் பார்த்துக் கேட்டு நகையாடுகின்றனர். அடியவர்களால் என்ன செய்ய முடியும்? வருந்துகின்றார்கள். இக்காலக் கட்டத்தில்தான் திருஞானசம்பந்தர் அத்திருத்தலத்திற்கு வருகின்றார். அடியவர்கள் தங்கள் உள்ளத் துயரத்தை ஞானசம்பந்தப்பெருமானிடம் எடுத்துரைக்கின்றனர். சமணர்கள் முன்னால் நாங்கள் நகைப்புக்கிடமாக வாழ்ந்து கொண்டிருக்கின்றோம் என்கின்றனர். திருஞானசம்பந்தர் இவர்களுக்கு எந்த விதமான பதிலும் சொல்லாமல், அவர்களையும் அழைத்துக் கொண்டு திருக்கோயிலுக்குப் போகின்றார். அங்கேயிருந்த ஆண்பனைகளைப் பார்த்துவிட்டு, கோயிலுக்குள் சென்று, 'பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி...' எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடி முடிக்கின்றார். அங்கிருந்த ஆண்பனைகள் யாவும் பெண்பனைகளாகிக் காய்த்துக் குலுங்குகின்றன. இது ஓர் அற்புதமல்லவா! அற்புதம் என்பதனைவிட, ஆண்டவனின் அருள் திருஞானசம்பந்தர்பால் எவ்வளவுதூரம் நிலைபெற்றிருந்தது என்பதற்கு அவர் காட்டிய கருணையே சான்றாக அமைகின்றது. அடியவர்கள் துன்பப்படுகின்றார்கள்; அவர்களின் துன்பம் அகலவில்லையென்று சொன்னால் இந்தச் சூழல் ஆண்டவனையே நம்பாது; உண்மை வழியினின்றும் பிறழ்ந்து பொய்ம்மையைத் தழுவிச் சென்றுவிடும்; நாடு பொய்ம்மை நெறியினைப் பின்பற்றுவதோடு அடியவர்களும் அதனையே நம்பவேண்டிய சூழல் ஏற்பட்டுவிடும் என்று எண்ணிய ஞானசம்பந்தப் பெருமான் பதிகம் பாடினார். பாடி முடித்தவுடன் ஆண்பனைகள் யாவும் தாமாகவே பெண்பனைகளாகவே மாறிவிடுகின்றன. அன்று முதல் இன்றுவரை அப்பனைகளிலிருந்து தோன்றும் பனைகள் ஆண்பனையாகத் தோன்றுவதில்லை.

இங்கே ஒரு குறிப்பை மட்டும் பார்க்க வேண்டும். ஓரறிவு உயிர்களாகிய பனைமரங்களுக்கும் பேறு கொடுத்தார். முத்தி என்று சொல்லக் கூடாது. பேறு என்றுதான் சொல்ல வேண்டும். பேறு என்பது மும்ம லங்களும் அகன்றபோதுதான் ஓர் உயிருக்குக் கிடைக் கும். திருஞானசம்பந்தர் பனைமரங்களுக்கும் மும்மலங் களையும் அகற்றிப் பேறு கொடுத்தார். ஞானசம்பந்தப் பெருமான் புல்லுக்கும், பூடுக்கும் திருவடிப் பேறு கொடுப்பாரேயானால் அவரது கருணைக்கு எல்லை யுண்டோ! கருணையின் திருவுருவமாகவே திகழ்கின் றார்.

மற்றொரு குறிப்பு: பெண்களாகப் பிறந்தவர்க ளுக்கு மீண்டும் பிறவி கிடையாது. மீண்டும் இந்த மனிதப் பிறவியில் வந்து அல்லல்பட மாட்டார்கள். ஏன்? பெண்களாகப் பிறக்கின்ற ஒவ்வொருவரும் மும்ம லங்களும் கழிந்தவர்கள். அதனால்தான் அவர்களைச் சான்றோர் பேறுக்கு உரியவர்கள் என்றனர். பேறு என்பது மக்கட் பேறு. அவர்களை மக்கட்பேற்றுக்கு உரியவர்களாக இறைவன் அமைத்தான். அத்தகையோர் தங்களுடைய நிலையை உணர்ந்து வாழ்வார்களேயா னால் அவர்கள்தான் பெண்கள். மாதந்தோறும் அவர்க ளுக்கு மலம் கழியும். இவை மூன்று நாள்களாகவும் ஐந்து நாள்களாகவும் அமையும். அம்மலம் கழியவில் லையென்றால் மக்கட்பேறே வாய்க்காது. இதன் சிறப் பையும், நுட்பத்தையும் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும். திருஞானசம்பந்தரின் கருணையால் ஓரறிவு உயிர்களின் மும்மலங்களும் தீர்ந்தது; பேறும் கிடைத் தது - காய் காய்த்தது. பேறு என்பது திருவடியை அடைகின்ற நிலை. அதனால்தான் மக்கட்பேறு என்று பெயர் வைத்தார்கள்.

பெண்களுக்குப் பிறவி இனி இல்லையென்று சொன்னால் ஆண்களுக்குப் பிறவி வருமா என்ற ஐயம் எழக்கூடும். மும்மலங்களும் அகன்றவர்களே பெண்கள். மும்மலங்கள் தீராதவர்கள் பெண்களல்லர். உலகியலாக மூன்று நாள்களுக்கு மலம் கழிவதால் மட்டும் மும்மலம் அகன்றவர்கள் என்று சொல்ல முடியாது. பிறகு யார்தான் பெண்கள்? என்றால் ஆன்மாவில் இருக்கின்ற ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களும் தீர்ந்தவர்களே பெண்கள். அவர்கள் ஆண்களாயினும் பெண்களே; அவர்கள் ஆண்களாயிருப்பினும் திருவடிப்பேறு பெறுவார்கள். மும்மலங்களும் தீராதவர்கள் பெண்களாயிருப்பினும் ஆண்களே. அவர்களுக்கு திருவடிப்பேறு கிட்டுவதில்லை.

ஆண், பெண் என்பது உடல் கூற்றினால் மட்டும் சொல்லப்படுவதில்லை. உயிரின் பக்குவத்தைப் பொறுத்தே ஆண், பெண் என்ற பேதத்தைப் பார்க்க வேண்டும். மும்மலம் தீர்ந்த உயிர் பெண்மையென்ற பக்குவத்தை அடைகின்றது; இறைவனின் திருவடிப் பேற்றைப் பெறுகின்றது. மும்மலங்களும் அகலா உயிர் ஆண் எனப்படுகின்றது. அது திருவடிப்பேறு எய்துவதில்லை.

இங்கே ஓரறிவு உயிரான ஆண்பனைகளைப் பெண் பனைகளாக சம்பந்தப்பெருமான் ஆக்கினார் என்றால் அது எப்படி? தகுதியுடைய ஓர் ஆசாரியன் ஓர் உயிரின் முன்னே தோன்றுகின்றபோது அவ்வான்மாவில் உள்ள மும்மலங்களும் அகன்று, அவ்வான்மா திருவடிப்பேறு எய்தும். அவ்விதத்தில்தான் ஆண்பனைகளின் முன்னே தகுதி வாய்ந்த ஆசாரியராகத் திருஞானசம்பந்தர் தோன்றினார்; மலங்களை அகற்றினார்; திருவடிப்பேறு எய்தும் பக்குவத்தை வழங்கினார்.

''குருவின் திருமேனி குறித்த அளவிலே திரிமலமும் தீர்ந்த''தென்பார் திருமூலர்.

அருளாளர்களுக்கு ஒன்றை ஒன்றாக மாற்றும் ஆற்றல் உண்டு. தீயவர்களை நல்லவர்களாகவும் மாற்றிவிடுவார்கள். மலங்கள் நிறைந்த ஆன்மாக்களை மலமகற்றி திருவடிப்பேற்றுக்கு உரியவர்களாகச் செய்துவிடுவார்கள். தாழ்ந்த நிலையில் உள்ள உயிர்களை உயர்ந்த நிலைக்கு உயர்த்துவார்கள். ஓரறிவு உயிர்கள் முதல் ஆறறிவு உயிர்கள் வரையில் அவற்றின் இழிந்த தன்மைகளை மாற்றி திருவடிப்பேறு உய்க்குமாறு அருள் செய்வது அவர்களது நோக்கம். அத்தகைய ஆற்றல் அருளாளர்களுக்கு உண்டு.

மற்றொரு நிகழ்ச்சி. முள் செடிக்கு முத்தி கொடுத்தார் ஒருவர். அவர் யாரென்றால் உமாபதி சிவாச்சாரியார். சாத்திரம் பாடியவர். மிகப்பெரிய அருளாளர். திருஞானசம்பந்தர் மாற்றியதாவது பனை மரம். அதில் காய் காய்க்காவிட்டாலும் மரத்தினால் பல பயன்கள் விளையும். ஆனால் முள் செடியினால் என்ன பயன் விளையும்? தீமையே விளையும். அத்தகைய தாழ்ந்த உயிருக்கும் மும்மலம் அகற்றி அருள் புரிந்து பேறளித்தார் என்பதை உமாபதி சிவாச்சாரியார் வரலாற்றில் அறியலாம்.



## 11. எலும்பைப் பெண்ணாக்குதல்

திருஞானசம்பந்தர் தம் அடியார்களுடன் அங்கிருந்து காஞ்சிபுரம் வழியாகப் பல திருத்தலங்களைப் போற்றியும் புகழ்ந்தும், பாடிக் கொண்டும், திருவொற்றியூர் போய்ச் சேர்கின்றார்.

திருவொற்றியூர் ஒரு ஞானபூமி. அங்கே சித்தர்கள் பலர் வந்து போவதும், அங்கேயே இருந்து தவம் செய்வதுமாயிருக்கும் இடம். இன்றும் அங்கே யாரே னும் ஒரு சித்தர் அமர்ந்திருப்பார். அப்படிப்பட்டவர்க ளைப் பார்க்கின்றவர்கள் ''யாரோ பைத்தியக்காரர்கள்'' என்று நினைத்துக் கொள்வார்கள். சித்தர்கள் மானிட தேகம் தாங்கியே அந்த இடத்தில் உலவிக் கொண்டிருக் கின்றார்கள். பட்டினத்தடிகள் அங்கேதான் சமாதியா னார். நம்முடைய வள்ளல் பெருமானும் அங்கே பல கால் சென்று வழிபட்டார். அத்தலத்திற்கு ஒரு தனி மகத்துவம் உண்டு.

சென்னைக்கு ஒரு சிறப்பு என்னவென்றால் வட கோடியில் திருவெற்றியூர்; தென்கோடியில் திருவான்மி யூர்; இடையில் இருப்பது மயிலாப்பூர். இம்மூன்று திருக்கோயில்களுமே ஞானத் தலங்கள்.

மயிலாப்பூரில் சிவநேச செட்டியார் என்பார் வாழ்ந்தார். அவருக்கு அழகான ஒரு பெண் குழந்தை இருந்தது. அதனை அருமையாக வளர்த்தார். திருஞான சம்பந்தர் அம்மையின் அருட்பாலை உண்டவர்; ஞானக் குழந்தை என்று கேள்விப்பட்டுத் தன் மகளை அவருக் குத் திருமணம் செய்து வைக்க நினைக்கின்றார். ஞான சம்பந்தரோ அந்தணர் குலத்தில் பிறந்தவர். சிவநேசரோ செட்டியார் குலத்தில் தோன்றியவர்.

ஞானசம்பந்தருக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டுமென்று எண்ணிய காரணத்தால் அந்தப் பெண்ணை எப்படி வளர்க்க வேண்டுமோ அந்த முறைப்படி வளர்க்கின்றார். கன்னி மாடத்தில் வைத்து பூவினும் மென்மையாக அம்மகளை வளர்த்து வருகின் றார்.

அக்காலத்தில் தங்கள் தங்கள் குலத்திலேயே ஆணுக்கும், பெண்ணுக்கும் திருமணம் செய்து வைப்பதும் வழக்கம்ாயிருந்திருக்கின்றது. உயர்ந்தவர்களுக்குத் தங்கள் பெண்களைத் திருமணம் செய்து வைக்கும் பழக்கமும் - அவர்கள் தங்கள் குலமாக இல்லாவிட்டாலும் இருந்திருக்கின்றது என்று தெரிகின்றது.

கன்னிமாடத்தில் இருக்கின்ற பூம்பாவை நாளும் மலர் எடுத்து வழிபாடு செய்யும் பழக்கம் உடையவர். நந்தவனத்தில் வழிபாடிற்குரிய மலர்களைப் பறித்துக் கொண்டிருக்கும்போது, பாம்பு தீண்டி மரணம் எய்துகின்றார். மிகவும் அருமையாக வளர்ந்த குழந்தை, தவம் இருந்து பெற்ற குழந்தை, ஓர் அருளாளருக்கு மணம் செய்து வைக்க வேண்டுமென்று எண்ணி வளர்க்கப் பட்ட குழந்தை, இறந்துவிட்டால் அவர்களுடைய பெற்றோர்கள் மனம் என்ன பாடுபட்டிருக்கும் என்று எண்ணிப் பாருங்கள்; நாம் அந்தக் காலக்கட்டத்திற்குச் சென்று சிவநேசம் செட்டியாராகவும், அவர்தம் மனைவியாரின் நிலையில் நின்றும் பார்த்தால்தான் அந்த உணர்ச்சி எப்படி இருந்திருக்கும் என்று ஓரளவுக்கேனும் உணர முடியும். பூம்பாவையின் பெற்றோர் பலவிதத்திலும் மனம் வெதும்பி அல்லலுற்றார்கள். இருப்பினும் என்ன செய்ய முடியும்? தங்கள் வழக்கப்படி அக்குழந்தையை எரித்து விட்டார்கள். (அப்போது சுடுகின்ற வழக்கம் இருந்தது என்று தெரிகின்றது). சுடுகாட்டில் எஞ்சியிருந்த சாம்பலையும், எலும்பையும் எடுத்து வந்து ஒரு பானையில் இட்டு, பாதுகாத்து வைத்திருக்கின்றனர். ஏன் இப்படி வைத்தாரென்றால் 'ஞானசம்பந்தப் பெருமானுக்கு அது உரியது. அவர் எப்போதேனும் இங்கே வருவார்; அப்போது அவருடைய பொருளை அவரிடத்தில் ஒப்படைக்க வேண்டும் என்று பாதுகாப்பாக வைத்திருக்கின்றார்.

எவ்வளவு பெரிய உணர்ச்சி பார்த்தீர்களா? திருஞா னசம்பந்தருக்குச் சிவநேசம் செட்டியாரையும் தெரி யாது; அவரது திருமகளையும் தெரியாது; செட்டியாரின் மகளைத் தனக்குத் திருமணம் முடித்து வைக்கப் போகின்றார் என்ற செய்தியும் தெரியாது.

திருஞானசம்பந்தர் திருவொற்றியூருக்கு வந்திருக் கின்றார் என்ற செய்தியைச் சிவநேசம் செட்டியார் கேள்விப்பட்டார். மயிலாப்பூரிலிருந்து திருவொற்றியூர் வரையில் நடைப்பந்தல் இட்டு திருஞானசம்பந்தரை அழைத்து வந்தார். மயிலைக்கு வந்த ஞானசம்பந்தரி டம் நடந்த நிகழ்ச்சிகளையும், தன் எண்ணக்கிடக்கைக ளையும் எடுத்துச் சொல்லி இது உம்முடைய பொருள் என்று சொல்லி சாம்பரும், எலும்பும் வைத்திருந்த பானையை அவர் முன் வைத்தார். திருஞானசம்பந்தர் இதனை ஒரு சிறு செய்தியாக எண்ணி, உதாசீனப்படுத்த வில்லை. எலும்பையும், சாம்பரையும் என் கையில் ஏன் கொடுக்கின்றீர்கள் என்று அலட்சியப்படுத்தவுமில்லை. அவருடைய உணர்ச்சிகளைப் பெரிதும் மதிக்கின்றார். ஆண்டவனை வழிபடுவதோடு தன் வேலை முடிந்துவி டுவதாக எண்ணித் திருஞானசம்பந்தர் போய்விட வில்லை. பிறருடைய உள்ளத்தில் எழுந்த உணர்ச்சி களை மதித்து நடந்து கொள்கின்றவரல்லவா? அதுதான் அருளாளர்களின் மிகப்பெரிய சிறப்பு. ஒருவர் ஒரு பொருளைக் கொடுக்கின்ற போது அந்தப் பொருளை மட்டும் பார்க்கக் கூடாது. அதைக் கொடுக்கின்றவரின் உணர்ச்சி எத்தகையது என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

சிவநேசம் செட்டியாரின் அன்பு உள்ளத்தைப் பார்க்கின்றார். ஞானசம்பந்தரின் உள்ளத்தில் கருணை பிறக்கிறது. மட்குடத்தை எடுத்துக்கொண்டு மயிலாப் பூர் திருக்கோயிலுக்குச் செல்கின்றார்.

அவர் சென்று வழிபட்டது இப்போது மயிலாப்பூரில் உள்ள திருக்கோயில் அன்று. அப்போது இருந்த திருக்கோயில் வளாகத்தில்தான் இப்போது சாந்தோம் மாதாக்கோயில் இருக்கின்றது. அங்குதான் பூம்பாவையை எழுப்பினார் ஞானசம்பந்தர். அவர் வழிபட்ட இடமும், பதிகம் பாடிய இடமும் சாந்தோம் சர்ச் இருக்கின்ற இடத்தில்தான். இந்த மாற்றங்கள் எப்போது நிகழ்ந்தது என்றால், விக்டோரியா மகாராணியின் ஆட்சிக் காலத்தில் அங்கிருந்த கோயிலை இடித்துத் தள்ளிவிட்டு, சர்ச் கட்டினார்கள். அப்போதிருந்த அன்பர்கள், அங்கிருந்த பொருட்களையெல்லாம் கொண்டு வந்து இப்போது இருக்கின்ற இடத்தில் திருக்கோயிலைக் கட்டினார்கள். இப்போது திருக்குளம் இருக்கின்ற இடம் நமக்குரியதன்று. காலங்கள் மாறுகின்றபோது சில நிகழ்ச்சிகள் நடைபெறுவது இயற்கை.

நான் அந்தப் பக்கம் போகவேண்டிய வாய்ப்புக் கிடைக்கின்றபோது அந்தச் சர்ச்சிற்குள் சென்று சிறிது நேரம் அமர்ந்து வழிபட்டுவிட்டு வருவது எனது வழக்கம். இப்போது இருக்கும் திருக்கோயிலுக்குள்கூட நான் போகாமல் வந்துவிடுவேன். ஆனால் சாந்தோம் பக்கம் போக நேர்ந்தால், ஒரு ஐந்து நிமிட நேரமாவது உள்ளே சென்று அமர்ந்து விட்டுத்தான் வருவேன். இந்த உண்மை தெரியாத அன்பர்கள் நான் கிறித்துவர் கோயிலுக்குச் சென்று வருகின்றேன் என்று எண்ணுவார்கள்.

திருக்கோயிலுக்குச் சென்று மட்குடத்தைப் பெருமான் முன்னர் வைத்து விட்டு, இந்தப் பெண் இறவாதிருந்தால் இப்போது என்ன மனநிலையில் இருந்திருப்பாள். அவள் தந்தையாரின் மனநிலை என்னவாக இருந்திருக்கும்; என்னென்ன உணர்ச்சிகளை அடைந்திருப்பார்கள், என்றெல்லாம் எண்ணிப் பார்க்கின்றார். மனதில் உருக்கம் மேலிடுகிறது.

மனிதப் பிறவியில் பிறந்துவிட்ட ஒவ்வொருவரும் வாழ்க்கையில் எப்படி ஒழுக வேண்டும்? இந்த வாழ்க்கையின் பயன் என்ன? என்பதை உணர்ந்து வாழ்க்கையை நடத்த வேண்டும். மனிதராகப் பிறந்தவர்கள் ஒவ்வொருவரும் தவறாது செய்ய வேண்டிய பணி அடியார்களுக்கு அன்னம்பாலித்தல். இதில் வழுனிவிட்டார்களேயானால் அந்தப் பிறவியே பாழ்பட்டுவிட்டதாகும். அடியவர்களுக்கு அன்னம்பாலித்தல்தான் மனிதப் பிறவிக்குப் பெரும் பயன். பொருள் ஈட்டுவதும், மனைவி மக்களைப் பேணிக் காப்பதும் ஆடை, அணிமணிகள் சேர்த்துக் கொள்வதும், சுகமான வாழ்க்கை வாழ்வதும் என்பவை மட்டுமே பிறவியின் நோக்கமல்ல. திருக்கோயிலுக்குச் செல்வதும், பெருமானை வழிபடுவதும், அபிடேக, ஆராதனைகள் செய்வதும், பிரார்த்தனைகள் முடிப்பதும் பயனற்ற செயலே. எப்போது? அடியார்களுக்கு அன்னம்பாலிக்காத போது.

சிவநேசம் செட்டியாருக்கு மகளாகப் பிறந்தும், சிறப்பாக வளர்ந்தும், அடியார்க்கு அன்னம்பாலிக்கும் திருப்பணியைச் செய்ய முடியாதவளாக இறந்துவிட்டாளே என்று வருந்துகின்றார் திருஞானசம்பந்தர். அந்த வருத்தத்தைத் தாங்க முடியாத இறைவன் உடனே எலும்பைப் பெண்ணாக்கிவிடுகின்றான். ஏன்? ஞானசம்பந்தர் வருந்தினால் இறைவனால் தாங்க முடியவில்லை. குழந்தை அழுதால் தாயினால் தாங்கிக் கொள்ள முடியாதது போன்றது அந்த உணர்ச்சி.

மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரம் அமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்கு
அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்

என்று பாடுகின்றார். அட்டி - சமைத்தல், இட்டல் - உணவு படைத்தல். சமைத்து அடியார்களுக்கு இட்டு,

அவர்கள் உண்ணுகின்றதைக் கண்டு மகிழ முடியாமல் போய்விட்டாயே! அந்தப் பாக்கியத்தைப் பெறாமல் போய்விட்டாயே! என்று வருந்துகிறார். அந்தப் பதிகத்தில் பூம்பாவை பெறாமல் போன பாக்கியமாகக் கருதியது அடியார்களுக்கு அன்னம்பாலித்து, அந்த மகிழ்வைக் காணாமல் போய்விட்டாளே என்பதுதான். அந்த பதிகம் முழுதும் அடியார்களுக்கு அன்னம்பாலித்தலும், திருவிழாக் காணுதலும், திருக்கோயிலுக்கு விளக்கிடுதலும், போன்ற செய்திகளே உள்ளன. அவற்றையெல்லாம் பூம்பாவை காணாமல் போய்விட்டாளே என்று உள்ளம் கனிந்து, நெக்குருகிப் பாடுகின்றார். அந்தக் கனிவையும், உருக்கத்தையும் கண்ட இறைவன் எலும்பைப் பெண்ணாக்கினான்.

இவ்வளவு பெரிய அற்புதம் நிகழ்த்தியதில் ஒன்றும் பெரிய வியப்பு இல்லை. எலும்பைப் பெண்ணாக்கியது வியப்பான செய்தியில்லையென்றால் வேறென்ன செய்தி வியப்புக்குரியது?

எலும்பு பெண்ணாகியதும், சிவநேசம் செட்டியார் மிகவும் மகிழ்வெய்துகின்றார். தன் பெண்ணைத் திருஞானசம்பந்தருக்குத் திருமணம் செய்து வைப்பதில் இனித் தடையில்லையென்று எண்ணிச் சிவநேசம் செட்டியார் மகிழ்கின்றார். மனிதர்கள் யாருக்கும் தம் எண்ணம் நிறைவேறுவதில் தடையேற்படுகின்றபோது துன்பமும், அத்தடை நீங்கியபின் மகிழ்ச்சி அடைவதும் இயல்பான ஒன்றுதான். எனவே, சிவநேசம் செட்டியாரும் தன் உள்ளக்கிடக்கையைத் திருஞானசம்பந்தர் முன்னர் எடுத்துரைக்கின்றார். அப்போது திருஞானசம்பந்தர் என்ன பதில் சொல்லுகிறார் என்பதைத் தெய்வச் சேக்கிழார் வாய்மொழியால் உணர்ந்து கொள்ளலாம்.

மற்றவர் தமக்குவண் புகலி வாணர் 'நீர்
பெற்றபெண் விடத்தினால் வீந்த பின்னையான்
கற்றைவார் சடையவர் கருணை காண்வர
உற்பவிப் பித்தலால் உரைத கா'' தென
உரைக்கின்றார்.

பிரமன் தன் படைப்பின் முடிவில் அழகையெல்லாம் திரட்டியெடுத்து ஓர் உருவம் செய்தான். அவள் தான் திலோத்தமை. தான் படைத்த அவளைக் கண்டு பிரமனே மயங்குகிறான். ஆனால் திருஞானசம்பந்தர் இறைவரைப் பாடி எலும்பைப் பெண்ணாக்கி எழுப்புகின்றார். அந்தப் பூம்பாவை பெண்ணாள் பிரமன் படைப்பினும் மிகுந்த அழகுடையவளாகத் திகழ்கிறாள். ஆயினும் அவர் அவள் அழகில் மயங்கவில்லை. தந்தையார் பெண்ணை மணம் செய்து தர இசைந்திருக்கின்ற வேளையிலும், அழகுக்கெல்லாம் அழகு செய்யும் பேரெழிலோடு விளங்கும் அப்பெண்ணைத் தனக்கு அளிக்க முன் வந்தபோதும் திருஞானசம்பந்தர் எந்தவிதமான மயக்கத்திற்கும் ஆட்படவில்லை. மாறாக மயக்கத்திற்கு ஆட்பட்டுக் கிடந்த மக்கள் உள்ளத்தில் நெறி இன்னதென்று தெளிவை உண்டாக்கினார். அது தான் அற்புதமான செய்தி. பூம்பாவையைத் திருமணம் செய்து கொள்ளாமைக்கு அவர் சொன்ன காரணம் என்ன தெரியுமா? 'ஐயா, தாங்கள் பெற்றெடுத்த குழந்தை இறந்துவிட்டது. இப்போது இறைவன் திருவருளால் வந்துற்ற குழந்தை நம் குழந்தை; அவளைத் திருமணம் செய்துகொள் என்று சொல்வது தகாது' என்று தெளிவுறுத்துகின்றார். எவ்வளவு உயர்ந்த உள்ளம்: எத்தகைய பண்பாட்டை மக்களுக்கு உணர்த்த வருகின்றார் பார்த்தீர்களா!

திருஞானசம்பந்தர் அசைவற்றவராக, நிறைநிலை

உடையவராக, கருணை நிறைந்தவராக விளங்கினார் என்பது அவரது வரலாற்றில் காணக்கிடைக்கின்ற உண் மைகள்.



## 12. பேறு அளித்தல்

மயிலாப்பூரில் இருந்து கிளம்பி வழியில் பல தலங்களை வணங்கிக்கொண்டே சீர்காழிப் பதியை நோக்கிப் போகின்றார். அவர் எந்த இடத்திலும் மக்க ளுக்கு நல்வழி காட்டுகின்றேன் என்று சொல்லவே யில்லை. மேகம் கடலிலிருந்து நீரை முகந்து கொண்டு நிலத்தை நோக்கி வருகின்றது. போகின்ற பக்கமெல் லாம் நன்னீரை வழங்கிக் கொண்டே போகின்றது. காடா, மலையா, பள்ளமா, மேடா, நன்னிலமா, உவர் நிலமா என்றெல்லாம் பார்ப்பதில்லை. உலக உயிர்க ளெல்லாம் தழைக்க வேண்டுமென்பதற்காகத்தான் நான் மழையாகப் பொழிகின்றேன் என்றும் அது சொல்லுவ தில்லை. அதுபோன்றே திருஞானசம்பந்தர் வாழ்வும் அமைந்திருந்தது என்பதை எண்ணுக. அப்படி நல்மேக மென இறைவனது அருளை முகந்து வந்த ஞானசம்பந் தப் பெருமானும் தனது இன்னருளை மக்களுக்குப் பொழிந்து கொண்டு போய்க் கொண்டேயிருக்கின்றார்.

சீர்காழிக்குப் போனால் இனிமேல் யாரும் சும்மா இருக்கமாட்டார்கள். திருமணம் செய்து வைக்கவே நினைப்பார்கள். மயிலாப்பூரில் மணமே வேண்டாம் என்று சொல்லிவிட்டார். திருமணம் செய்து கொள்வது அவரது நோக்கமன்று. எல்லோரையும் போல திரும ணம் செய்து கொண்டு, குழந்தைகளையும், குட்டிகளை யும் பெற்றுக்கொண்டு வாழ்க்கை நடத்துவது என்பது அவரது நோக்கமன்று;

குழந்தை, குட்டி என்று ஏன் சொல்லுகின்றேன் என்றால் குழந்தைகள் மிகவும் அரிதாகத்தான் பிறக்கும். பெரும்பகுதியும் எல்லோருக்குமே குட்டிகள்தாம் பிறக்கும். ஓர் உபசார வழக்காக நாம் அவற்றையெல்லாம் குழந்தைகள் என்று சொல்லிக் கொண்டிருக்கின்றோம். இந்த வழக்கு தெரிந்துதானோ என்னவோ கேரளத்து மக்கள், 'எந்தா, குட்டிகள் உண்டோ?' என்றுதான் கேட்பார்கள். நமக்கும் தெரியும். இருந்தாலும் மரபாகக் கேட்டுவிடலாமே என்று, 'குழந்தை, குட்டி இருக்கின்ற தா' என்று கேட்கின்றோம். நகைச்சுவைக்காகச் சொல்லுகின்றதாக எண்ணி இதனை விட்டுவிடக் கூடாது. சிந்திக்க வேண்டும் என்பதற்காகத்தான் சொல்லுகின்றேன். ஏன் நாம் குழந்தைகளைப் பெற்றெடுக்கவில்லை? குழந்தைகளைப் பெற்றெடுக்க வேண்டுமானால் நாம் செய்ய வேண்டியது, கடைப்பிடிக்க வேண்டிய நெறிகள் ஏதேனும் உண்டா? நாம் என்ன செய்தால் நமக்கும் குழந்தைகள் பிறக்கும்? என்றெல்லாம் எண்ணிப் பார்க்க வேண்டும். (இதனைப் பற்றிய முழுச் செய்திகளையும் தொகுத்து ஒரு நூலாக வெளியிட எண்ணியுள்ளேன். விருப்பமுள்ளவர்கள் அதனைப் பார்த்துப் பயன் பெறலாம்.)

திருஞானசம்பந்தருக்கு உலகத்தார்போல திருமணம் செய்துகொண்டு, குழந்தைகளைப் பெற்று, வாழ்க்கை நடத்த வேண்டிய அவசியமில்லை. இருப்பினும், வேத வேள்விகள் செய்து, வாழ்க்கை நடத்திக் கொண்டிருப்பவர்கள் இல்லறத்தில்தான் இருப்பார்கள். எனவே வேள்வி செய்து வாழும் வேதியர்கள் மணம் செய்து கொண்டு வாழ வேண்டுமென்ற மரபையொட்டி, திருஞானசம்பந்தரையும் மணம் செய்து கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறார்கள். ஆனால் திருமணம் வேண்டாமென்று மறுக்கின்றார்

திருஞானசம்பந்தர். அப்படி மறுக்கக்கூடாதென்றும், மரபைக் காக்க வேண்டுமென்றும் வயதில் பெரியவர் கள் எல்லாம் சேர்ந்து சொன்னால், பெரியவர்கள் (ஞானிகள்) மறுக்க மாட்டார்கள்.

இந்த மரபு பற்றிய செய்தி சென்ற நூற்றாண்டிலும் வற்புறுத்தப்படுகின்றது. வள்ளல்பெருமான் திரும ணமே வேண்டாமென்று சொல்லி வாழ்ந்து கொண்டி ருக்கின்ற போது அவருடைய அண்ணாவும், அண்ணி யும் அவரைத் திருமணம் செய்து கொண்டு வாழவேண் டுமென்று வற்புறுத்துகின்றார்கள். மணம் செய்து கொண்ட பின்னர் அவர் வாழ்க்கையில் என்ன நடந்தது என்பதை ஞானசம்பந்தரின் வாழ்க்கையைக் கொண்டு ஊகிக்கலாம். பெரிதும் சன்மார்க்கிகள் அந்த ஊகத்திற் குப் போவதில்லை. என்ன ஆயிற்று என்றே தெரிய வில்லை என்பார்கள்.

திருஞானசம்பந்தர் திருமணத்திற்கு ஒப்புதல் தெரி விக்கின்றார். அனைவரும் மகிழ்கின்றனர். 'நம்பியாண் டார் நம்பி' என்பவரின் பெண்ணைத் திருமணம் செய் விக்க நினைத்து, பெண்ணைப் பேசி முடிக்கின்றனர். நம்பியாண்டார் நம்பியும் பெரிதும் மகிழ்கின்றார். ஞானப்பால் உண்டு, நாட்டையெல்லாம் நன்னெறிக்கு உய்விக்க வந்த பிள்ளைக்குத் தன் பெண்ணைக் கொடுப் பதில் பெருமகிழ்வு எய்துகின்றார். திருமண நாளும் குறிக்கின்றனர். திருமணச் செய்தி கேட்ட அனைத்து மக்களும் மகிழ்கின்றனர்.

திருமணம் என்பது ஒரு புனிதமான செய்தி. பெரிய நிலைக்கு உரிய செய்தி. அதனை வீட்டிற்குள்ளேயே நடத்தி முடிக்க வேண்டும். கூட்டம் சேர்க்கக்கூடாது. ஆனால் அக்காலத்தில் திருமணம் செய்கின்றபோது ஆயிரம் பேருக்காவது போய்ச் சொல்லித் திருமணம்

செய்து கொள்ள வேண்டும் என்ற வழக்கம் வைத்திருந் தார்கள். அது பின்னால் ஆயிரம் பொய் சொல்லியாவது ஒரு திருமணத்தை முடிக்க வேண்டுமென்று மருவிவிட் டது. மனித இயல்பே தனக்கு என்னென்ன சாதகமாக இருக்கின்றதோ அப்படியெல்லாம் தன்னையும், சூழ லையும் மாற்றிக் கொண்டுவிடும்.

திருஞானசம்பந்தருக்குத் திருமணம் நிச்சயிக்கப் பட்ட செய்தியும் திருமணம் நடக்க இருக்கும் நாளும் பல்லாயிரம் பேருக்குத் தெரிவிக்கப்பட்டது. பெரியவர் களின் வற்புறுத்தலுக்காக ஒத்துக் கொண்டாரேயன்றி, உள்ளத்துக்குள், 'நமக்குத் திருமணம் தேவையா?' என்ற வினாவுடன்தான் இருக்கின்றார். பெருமானிடம் இது பற்றி வேண்டுகிறார். பெருமானுடைய திருவிருப்பம் தெரிந்து 'கல்லூர்ப் பெருமணம்' எனும் பதிகம் பாடிய ருளினார். பின்னர் அனைவரும் திருக்கோயிலுக்குச் செல்கின்றனர். மணவினை முடிக்கின்றார்.

திருக்கோயிலில் விளங்கும் சிவலிங்கத்தினின்றும் ஒரு சோதி தோன்றி நிற்கின்றது. பின்னர் அச்சோதியி னுள்ளிருந்து ஒரு வாயில் தோன்றுகிறது. அப்போது

"தேவர்கள் தேவர் தாமும் திருவருள் புரிந்து, "நீயும்
பூவையன் னாளும் இங்குன் புண்ணிய மணத்தின் வந்தார்
யாவரும் என்பாற் சோதி இதனுள்வந் தெய்தும்" என்று
மூவுல கொளியால் விம்ம முழுச்சுடர்த் தாணு வாகி

என்று பெருமான் உரைக்க, திருமணத்திற்கு வந்திருந்த வர்களும், தாய் தந்தையர், உறவின் முறையினரும், திருமணத்தின் பணி செய்ய வந்தவர்களும், பந்தல் போடுவோர், சமையல் செய்வோர், மற்ற மற்ற பணிக ளைச் செய்து கொண்டிருந்த அனைவரும் அக்கோயிலி னுள் புகுந்தனர். "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி..." என்ற பதிகம் பாடிவிட்டு, வந்த அத்தனைபேரையும்

அனுப்பிவிட்டு கடைசியில் தான் தன் மனைவியுடன் அச்சோதியினுள் கலந்தார். அப்படிக் கலந்த நாள் வைகாசி மூலம். சோதி மறைகின்றது. சிவலிங்கம் தோன்றுகின்றது. பக்குவப்பட்ட ஆன்மாக்களன்றி, பக்குவப்படாத ஆன்மாக்களும் சிவலிங்க சோதியில் புகுந்துவிட்டனர். காழியெம்பெருமானின் கருணைதான் என்னே! ஞானசம்பந்தரின் வரலாறு நிறைவுறுகின்றது.

நிறைவுச் செய்தியாக ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். யாரேனும் ஓர் ஏழை நமக்குத் திருமண அழைப்புக் கொடுக்கின்றார் என வைத்துக் கொள்ளுங்கள். அதே நேரத்தில் ஒரு பாடல் பெற்ற தலத்தின் குடமுழுக்கு விழாவும் நடக்கின்றது. இந்த இரண்டில் எந்த நிகழ்ச்சிக்குப் போவது? எந்த நிகழ்ச்சி சிறப்பானது?

திருமணத்திற்குப் போவதுதான் சிறப்பான செய்தி. ஏன்? குடமுழுக்கு விழாவுக்குச் சென்றவர்களில் யாரும் திருவடிப்பேறு பெற்றதாக இன்றைய நாள் வரையில் செய்தி இல்லை. ஆனால் திருமணத்திற்குச் சென்ற அனைவரும், எந்தவிதப் பேதமுமின்றித் திருவடிப் பேறு பெற்றார்கள் என்ற செய்தி திருஞானசம்பந்தரின் வரலாற்றில் காணக்கிடைக்கின்றது. எனவே திருமணத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து, அந்த நிகழ்ச்சிக்குச் சென்று வருவோமேயானால், என்றேனும், எங்கேயேனும் நடக்குமேயானால் அந்தப் புண்ணியம் நமக்குக் கிடைக்கும் என்பது திருஞானசம்பந்தர் வரலாறு நமக்கு உணர்த்தும் செய்தி. இந்த உணர்ச்சி உங்கள் எல்லோருக்கும் வரவேண்டும்.

மற்றொரு செய்தி. எனக்குத் திருமணம் நடந்தது. திருக்கழுக்குன்றத்தில் மணவிழா நடந்தது. இதில் என்ன வியப்பான செய்தி என்று சொல்ல வருகிறேன் என்றால் அத்திருமண விழாவை நடத்தி வைத்தவர் எங்களால்

பெரிதும் மதிக்கப்பட்ட இராமநாத ஐயா அவர்கள்தான். அவர்கள் தோற்றத்தைப் பார்த்தால் பெரிய மகரிஷி போல இருக்கும். அவர்கள் வேள்வியெல்லாம் செய்து மணவினை முடித்தார்கள். அந்த நிகழ்ச்சியின்போது குழந்தைகளிலிருந்து பெரியவர்கள் வரையிலும் அமை தியாக இருந்து நிகழ்ச்சியைக் கவனித்துக் கொண்டு இருந்தார்கள் என்பதுதான் மிகவும் வியப்புக்குரிய செய்தி. திருமணத்தின்போது தமிழ் மறை ஓதப்பட்டது. அந்த ஒலியைத் தவிர வேற்று ஒலிகள் ஏதும் எழ வில்லை. என்னுடன் பணி செய்த அன்பர்கள் மற்றும் உறவினர்கள் அனைவரும் வியந்து பாராட்டியது தமிழ் மறை ஓதப்பட்ட விதமும், அதைக் குழுமியிருந்தவர்கள் அனைவரும் அமைதியாக இருந்து கேட்டுக் கொண்டி ருந்த விதமும்தான். எனக்கு எந்தவிதமான உணர்ச்சியும் இல்லை. பொதுவாக எல்லோருக்கும் திருமணத்தின் போது எழுகின்ற உணர்ச்சிதான் எனக்கும் இருந்தது.

திருமணம் முடிந்தபின், இராமநாத ஐயா அவர்கள் பேசுகின்ற போது, ''என்னுடைய 30 வது அகவை தொடங்கி தமிழ் மொழியில் பல திருமணங்களைச் செய்து வந்திருக்கின்றேன். திருமணங்கள் செய்து வைப் பது எனக்கு மகிழ்ச்சியைத் தந்து கொண்டிருந்தன. ஆனால் அத்தனைத் திருமணங்களுக்கும் முத்தாய்ப்பு வைத்தது போல இந்தத் திருமணம் எனக்கு மன நிறைவைத் தந்தது; இதனை நடத்தி வைத்ததன் மூலம் நான் பெறும் பாக்கியத்தைப் பெற்றுவிட்டேன்'' என்று மகிழ்ந்து சொன்னார்கள். பெரியவர்கள் அப்படி நினைக்கின்றார்கள். எனக்கு அந்தத் தகுதி இல்லை என்று தெரியும். ஒரு சரியான மாணாக்கனுக்குத் திரும ணம் செய்து வைத்தேன் என்று மகிழ்ந்ததுடன் நான் பெற்ற பேறு இது என்றும் சொன்னார்கள். திருமணம் செய்து வைத்தவர்களே பெரிய பேறு என்று நினைத்துச்

சொன்ன சொல்லை மனத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். எனவே திருமணம் என்பதனை விளையாட்டுச் செய்திகளைப்போல எடுத்துக் கொள்ளக் கூடாது. திருமண அழைப்புக் கிடைத்தால் தவறாது சென்று கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்தியும், கண்டும் மகிழ்தல் வேண்டுமென்று சொல்லி இந்த வரலாற்றை நிறைவு செய்கின்றேன்.

இந்த வராற்றைக் கேட்ட, படிக்க இருக்கின்ற உங்கள் அனைவருக்கும் திருஞானசம்பந்தப்பெருமானின் திருவருளால் வாழ்வில் அனைத்து நலங்களும் கிடைக்க வேண்டுமென்று சொல்லி நிறைவு செய்கின்றேன்.

திருச்சிற்றம்பலம்



# நிறைவுரை

திருஞானசம்பந்தர் மூன்று வயதில் அம்மையப் பரை நேரில் கண்டார். ஞானப்பால் உண்டார். எல்லாக் கலைகளையும் ஓதாது உணர்ந்தார். சிவஞானமும் சிவா னுபவமும் பெற்றார். அதன் பயனாகப் பதி பசு பாசாங் களின் தன்மைகளை விளக்கிப் பாடினார். பேரன்பின் வடிவானார். திருவருள் வழி நின்று இவ்வுலகின்கண் சிவநெறியை வளர்த்துப் பரமாசாரியராகத் திகழ்ந்தார்.

ஞானசம்பந்தப் பெருமான் தான் எதையும் வேண் டாத நேரத்திலும் சிவபெருமான் திருக்கோலக்காவில் ஐந்தெழுத்துப் பொறித்த பொற்றாளம் தந்தார். திரு அறத்துறையில் முத்துச்சிவிகை தந்தார். திருப்பட்டீச்சு ரத்தில் முத்துப்பந்தர் கொடுத்தார். திருவாவடுதுறையில் பொற்கிழி தந்தார். இத்தனை நலங்களையும் பெற்ற திருஞானசம்பந்தர் திருமருகலில் பாம்பு கடித்த வணி கனை உயிர்ப்பித்தார். அவனுடன் வந்த பெண்ணை அவனுக்கே மணமுடித்து வைத்தார். தன்னை அன் போடு அடையும் அடியவர்களுக்கு இம்மை நலமும் மறுமைப்பேறும் கொடுத்தருளினார்.

திருவீழிமிழலையில் அடியார் திருவமுது செய்வ தற்காக இறைவனிடம் படிக்காசு பெற்றார். திருமறைக் காட்டில் திருக்கதவம் அடைக்கப் பாடினார். பாண்டிய நாட்டில், சமணர்களோடு வாதம் செய்து வென்றார். அதனால் பாண்டி நாட்டில் மீண்டும் சிவநெறி தழைக்கச் செய்தார். திருக்கொள்ளம்பூதூரில் ஓடக்காரர் இல்லாத ஓடங்களைத் தானே இயங்கச்செய்தார். திருவோத்தூரில் சிவனடியாரின் பொருட்டு ஆண்பனைகளைப் பெண்ப

